# CONCISE TAMIL LEXICON

# சுருக்கத் தமிழ் அகராதி




சென்னைப் பல்கலைக் கழகத்தின் இசைவுபெற்றது



# CONCISE TAMIL LEXICON

# சுருக்கத் தமிழ் அகராதி

*சென்னைப் பல்கலைக் கழகத்தின் இசைவு பெற்றது*



உரிமை பதிவு] மதராஸ் லாஜர்னல் அச்சுக்கூடம் [விலை ரூ. 4/-
மயிலாப்பூர் :: :: சென்னை-4.

# முகவுரை

சென்னைப் பல்கலைக் கழகத்தார், 'தமிழ் லெக்சிகன்' (Tamil Lexicon) என்னும் பெயரால் ஒரு பேரகராதியை 1939-ஆம் ஆண்டில் வெளியிட்டார்கள். அது மிக விரிவாயிருத்தலின் சுருக்கத் தமிழ் அகராதி (Concise Tamil Lexicon) ஒன்று வெளியிடல் நலம் எனக் கருதப்பட்டது. தமிழ்ப் பேரகராதியை அச்சிட்ட 'சென்னை லா-ஜர்னல் பிரெஸ்' அதிபரே இச் சுருக்க அகராதியையும் பதிப்பிக்க இசைந்தனர். சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ் ஆராய்ச்சித் துறையினரின் மேற்பார்வையில் சுருக்க அகராதி வேலை நடைபெறல் வேண்டும் என்று தீர்மானிக்கப்பட்டது.

அப்போது தமிழ் ஆராய்ச்சித் துறைத் தலைவராயிருந்த திரு. எஸ். வையாபுரிப் பிள்ளை அவர்கள், பி. ஏ., பி. எல்., சுருக்கப் பதிப்பிற் குரிய திட்டமொன்று வகுத்தார்கள். அத் திட்டத்தின்படி சுருக்கப் பதிப்பில் விடுபடவேண்டிய சொற்கள் வருமாறு:

1. கலைச் சொற்கள் (Scientific and Technical terms)
2. இலக்கணப் பரிபாஷைச் சொற்கள் (Terms relating to grammar)
3. எளிதிற் பொருள் விளங்கும் சொற்கள் (Common words)
4. பேச்சு வழக்குச் சொற்களும் கொச்சைச் சொற்களும் (Colloquialisms and Slangs)
5. இலக்கியத்தில் பயின்று வழங்காத வடசொற்கள்.
6. சிறப்புப் பெயர்கள். (Proper names)
7. தொடர் மொழிகள் (Compound words)
8. சிதைவுச் சொற்களும் குறிப்பு மொழிகளும்.
9. இலக்கியத்தில் பயின்று வாராத நிகண்டுச் சொற்கள்.

இத் திட்டத்தின்படி பேரகராதியின் சொற்களைப் பார்வையிட்ட போது சமய பரிபாஷைச் சொற்களையும், நவீனமாக ஆக்கப்பெற்ற சொற்களையும் விட்டுவிடலாம் என்று தோன்றிற்று. இவற்றையெல்லாம் கருத்திற் கொண்டு, சுருக்க அகராதியின் பதிப்பாசிரியராகச் சென்னை லா-ஜர்னல் பிரெஸ் அதிபரால் நியமிக்கப்பட்ட திரு.மோ.ஸ்ரீ. செல்லம் ஐயர் அவர்கள், எம். ஏ., எல். டி., பேரகராதியிலிருந்து சொற்களைத் தேர்ந்தெடுத்தார்கள். அவற்றை யானும், பல்கலைக் கழகத் தமிழ் ஆராய்ச்சித் துறையின் தலைமைத் தமிழ் விரிவுரையாளர் (Senior Lecturer in Tamil) திரு. மொ. அ. துரை அரங்கசாமி, எம். ஏ., எம். ஓ. எல்., அவர்களும் பதிப்பாசிரியருடன் இருந்து ஆராய்ந்து, திட்டத்தின்படி விலக்க வேண்டுவனவற்றை விலக்கிச் சுருக்க அகராதியை உருவாக்கினோம்.

இவ்வகராதி தமிழ் இலக்கியம் பயிலும் மாணவர்களுக்கும், பொது மக்களுக்கும் பயனுடையதாகும் என்று நம்புகிறேன்.


**ரா. பி. சேதுப்பிள்ளை,**
தமிழ்ப் பேராசிரியர்,
**சென்னைப் பல்கலைக் கழகம்.**

# பதிப்புரை

சென்னைப் பல்கலைக் கழகத்தினர் வெளியிட்ட தமிழ்ப் பேரகராதியை அச்சிட்ட பழக்கத்தால், அதன் சுருக்கமொன்றை வெளியிடப் பல்கலைக் கழகத்தார் எண்ணியிருப்பது தெரிந்து சென்னை லா ஜர்னல் அச்சுக்கூடத் தலைவராக இருந்த ஸ்ரீ. ரா. நாராயணசாமி ஐயரவர்கள் அச்சுருக்கத்தைத் தாமே வெளியிடுவதாக முன்வந்தார்கள். பல்கலைக் கழகத்தார் அதற்கு இசைந்தார்கள். அப்போது தமிழாராய்ச்சித் துறைத் தலைவராக இருந்த திரு. எஸ். வையாபுரிப் பிள்ளையவர்களுடைய துணையைக் கொண்டு ஒரு திட்டத்தை வரையறுத்துக்கொண்டோம். பிறகு சுருக்க அகராதி கையடக்கமாக இருக்கவேண்டுமென்று மீட்டும் ஒரு திட்டம் வகுக்கப்பெற்று வேலை நடந்துவந்தது. 1940-ஆம் ஆண்டு தொடங்கிய இவ்வேலை, இடையில் போர் மூண்டதாலும் காகிதப் பஞ்சத்தாலும் மெல்ல நடைபெற்றது. அப்பால் பல்கலைக் கழகத் தமிழாராய்ச்சித் துறைத் தலைவரும் பேராசிரியருமாகிய திரு. ரா.பி. சேதுப்பிள்ளையவர்களுடன் ஆராய்ந்து மீட்டும் ஒரு வரையறையை அமைத்துக்கொண்டோம். அதன்படி முடிந்த முடிபாகச் சொற்களைத் தேர்ந்தெடுக்கும் வேலை நடைபெற்றது.

இப்போது இந்தச் சுருக்க அகராதி நிறைவேறி வெளிவருகிறது.

இதனை வெளியிட உரிமை தந்த சென்னைப் பல்கலைக் கழகத்தாருக்கும், முதலில் பதிப்புத் திட்டத்தை வகுத்துக் கொடுத்த திரு எஸ். வையாபுரிப் பிள்ளைவர்களுக்கும், இதனை உருவாக்குவதில் முழுப் பொறுப்பையும் ஏற்று உதவி புரிந்த பேராசிரியர் ரா. பி. சேதுப்பிள்ளையவர்களுக்கும் எங்கள் நன்றியறிவைத் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

12-3-55,
மயிலாப்பூர், சென்னை.

பதிப்பாளர்

# CONCISE TAMIL LEXICON



அ

அ: First letter and vowel of alphabet நெடுங்கணக்கில் முதல் உயிரெழுத்து; Beauty அழகு.

அஃகு-தல்: To be shortened அளவில் குறுகுதல்.

அக்கசாலை: Metal works உலோக வேலை செய்யும் இடம்; Mint நாணயசாலை.

அக்கம்: Grain தானியம்; Gold பொன்; Eye கண்; Rudrākṣa bead உருத்திராக்கமணி.

அக்கரம்-அட்சரம்: Letter எழுத்து.

அக்கரை-அக்கறை-அக்கீசு: Interest சிரத்தை.

அக்காரம்: Sugar சர்க்கரை; Mango tree மாமரம்.

அக்காரை: Kind of sweet cake இனிப்பான சிற்றுண்டி வகை.

அக்கானி: Sweet toddy பதநீர்.

அக்கி: Eye கண்; Fire தீ.

அக்கிரமம்: Irregularity ஒழுங்கீனம்; Injustice அநீதம்.

அக்கிராசனம்: Chairmanship சபைத் தலைமை.

அக்கினி திசை - அக்கினி மூலை: S.E. quarter தென் கிழக்கு.

அக்கினி நட்சத்திரம்: Dog - days சித்திரை இறுதியிலும் வைகாசி முதலிலும் மிக்க வெப்பமாக இருக்கும் நாட்கள்.

அக்கு: Chank bead சங்குமணி; Claim உரிமை.

அக்குரோணி: A measure denoting vast army சேனையின் பேரளவு.

அக்குள்: Armpit கமுக்கட்டு.

அக்கை - அக்கைச்சி: Elder sister அக்காள்.

அகக் காழ்: Core of tree மரத்தின் உள் வயிரம்.

அகங்காரம் - அகந்தை - அகம்பாவம் - அகமதி: Egotism நான் என்னும் அபிமானம்; Haughtiness செருக்கு.

அகசியம்: Mimicry பகடிக் கூத்து; Ridicule எள்ளனம்.

அகடு: Interior உள்; Middle நடு; Belly வயிறு.

அகண்ட தீபம்: Perpetual lamp நந்தா விளக்கு.

அகண்டம்: That which is indivisible பகுக்கப்படாதது; The Absolute எல்லாம்; Perfection பூரணம்.

அகணி: Interior உள்; Palm fibre தென்னை, பனை முதலியவற்றின் புறநார்; Confidant நம்பிக்கைக்குரிய நண்பன்; Field நெல்வயல்; Agricultural tract மருத நிலம்.

அகத்தீடு: Embracing அணைத்தல்; Thought எண்ணம்.

அக நகர்: Citadel கோட்டைக்குள் அடங்கிய நகரப்பகுதி; Harem அந்தப்புரம்.

அகநகை: Scornful smile இகழ்ச்சிச் சிரிப்பு.

அக நாழிகை: Sanctuary of Hindu temple கர்ப்பக்கிருகம்.

அகப்படு-தல்: To be included உள்ளாதல்; To be diminished குறைதல்; To be entangled சிக்கிக்கொள்ளுதல்; To be obtained கிடைத்தல்.-த்தல்: To entrap வசப்படுத்துதல்.

அகப்பத்தியம்: Abstention from sexual relations, while under medical treatment இச்சாபத்தியம்.

அகப்பற்று: Attachment to self யானென்னும் அபிமானம்.

அகப்பா: Wall of fort கோட்டை மதில்; Mound within inner fortifications மதிலுள் மேடை.

அகப்பாடு: Being close நெருங்கியிருக்கை.

அகப்பொருள்: Love-theme அகத்திணையாகிய பொருள்.

அகம்: Inside உள்ளிடம்; Mind மனம்; Agricultural tract மருதம்; House வீடு; Place இடம்; Love-theme அகப்பொருள்; Being subordinate உள்ளடங்குகை; Self நான்; Egotism அகம்பாவம்; Soul ஆன்மா; Mountain மலை; Earth பூமி; Sin பாவம்.

அகம்படி: Inside உள்ளிடம்; Mind மனம்; Service in sanctuary அகத்தொண்டு; Devotees அடியார்.

அகம்படிப் பெண்டு: Maidservant வேலைக்காரி.

அகம்படி முதலி: Manservant வேலைக்காரன்.
அகம்பாடு: Essential truth உள்ளீடான தத்துவம்.
அகமடல்: Spathe பாளை.
அகமுடையாள்: Wife மனைவி.
அகமுடையான்: Husband கணவன்.
அகரம்: First letter of alphabet அ என்னும் எழுத்து; Brahmin village or street பார்ப்பனர் ஊர், வீதி; Town ஊர்.
அகராதி: Dictionary சொற்களை அகர முதலாக வரிசைப்படுத்திப் பொருள் விளக்கும் நூல்.
அகரு-அகில்: Eagle-wood வாசனை மரவகை.
அகல்: Small earthen pot சட்டி; Hollow earthen lamp விளக்குத் தகழி. - தல்: To leave நீங்குதல்; To widen விரிதல்; To increase விருத்தியடைதல்.
அகலம்: Width குறுக்ககலம்; Expanse பரப்பு; Greatness பெருமை; Chest மார்பு; Mouth வாய்.
அகலவுரை: Elaborate commentary விருத்தி உரை.
அகலறை: Military camp பாசறை; Slope of hill மலைப்பக்கம்.
அகலிடம்: Earth பூமி.
அகலுள்: Width அகலம்; Village ஊர்; Street தெரு; Country நாடு.
அகவர்: Encomiast சூதர்.
அகவல்: Calling அழைக்கை.
அகவலன்: Bard பாணன்.
அகவாய்: Interior உள்ளிடம்; Door-frame கதவுநிலை.
அகவிதழ்: Inner petal of flower உள்ளிதழ்.
அகவிலை: Price of grain தானிய விலை.
அகவினை: Hindrance இடையூறு.
அகவு - தல்: To utter sound as peacock மயில் கூவுதல்; To sing பாடுதல்; To dance கூத்தாடுதல்; To call அழைத்தல்.
அகவை: Inside உள்ளிடம்; Age பிராயம்.
அகழ்: Moat அகழி; Tank குளம். - தல்: To dig தோண்டுதல்; To uproot அடியோடு களைதல்.
அகழெலி: Field rat வயலிலுள்ள எலி.
அகளம்: Large earthen pot மிடா; Body of yāḻ யாழின் பத்தர்.
அகற்றம்: Expanse பரப்பு.
அகன்றில்: Male Greek partridge ஆண் அன்றில்.
அகி: Snake பாம்பு; Iron இரும்பு.
அகிலம்: Earth பூமி; The whole முழுவதும்.
அகை: Component part கூறுபாடு. - தல்: To flourish செழித்தல்; To burn எரிதல்; To suffer வருந்துதல்; To delay தாமதித்தல்; To be broken ஒடிதல்; To blossom மலர்தல். - த்தல்: To sprout கிளைத்தல்; To rise எழுதல்; To proceed at intervals விட்டுவிட்டுச் செல்லுதல்; To trouble வேதனை செய்தல்; To beat அடித்தல்; To break முறித்தல்; To cut அறுத்தல்; To raise உயர்த்துதல்; To expand by force மலர்த்துதல்.
அங்கக்காரன் - அங்கரக்கன்: Body - guard மெய்காவலன்.
அங்கசன்: Cupid மன்மதன்.
அங்கசேவை: Personal service to preceptor குருவுக்குச் செய்யும் கைங்கரியம்.
அங்கண்: There அவ்விடம்; Compassion கண்ணோட்டம்.
அங்கணம்: Courtyard முற்றம்; Drain சலதாரை; Mud சேறு; Division of house கட்டடப் பிரிவு; Space between pillars தூண்களுக்கு இடைப்பட்ட இடம்.
அங்கணேல்-தல் (அங்கணேற்றல்): To awake துயிலுணர்தல்.
அங்கதம்: Abuse வசை; Lampoon அங்கதச் செய்யுள்; Bracelet worn on upper arm வாகுவலயம்; Serpent பாம்பு; Food of elephants யானையின் உணவு.
அங்கப் பால்: Mother's milk முலைப்பால்.
அங்கம்: Limb உறுப்பு; Body சரீரம்; Bone எலும்பு; Sciences auxiliary to Vēdas வேதாங்கம்; Language பாஷை; Mark அடையாளம்; Beauty அழகு; Act of drama நாடக நூலின் உறுப்பு; Battle போர்; Bed படுக்கை.
அங்கராகம்: Scented cosmetic உடம்பில் பூசப்படும் பரிமள திரவியம்.
அங்கலாய்-த்தல்: To lament துக்கித்தல்.
அங்கலிங்கம்: Lingam worn by Lingayats வீர சைவர்கள் தரித்துக்கொள்ளும் இலிங்கம்.
அங்கவடி: Stirrup சேணத்திற் கால்மிதி.
அங்கன்: Son புதல்வன்.
அங்கனை: Woman பெண்.
அங்கா-த்தல்: To open mouth வாய் திறத்தல்.
அங்காடி: Bazaar கடை.
அங்காரகன்: Mars செவ்வாய்; Pearl with pink lustre செந்நீர் முத்து.
அங்கி: Fire நெருப்பு; God of fire அக்கினி தேவன்; Sun சூரியன்; Principal அங்கத்தையுடையது; Long jacket நீண்ட சட்டை; Metallic adornment கவசம்.
அங்கிதம்: Sign அடையாளம்; Scar தழும்பு.

அங்கீகாரம்: Approval உடன்பாடு; Hospitality உபசாரம்.
அங்குசம்: Elephant goad யானைத் தோட்டி; Thimble தையற்காரரின் விரற்கூடு.
அங்குட்டம்: Thumb பெருவிரல்.
அங்குரம்: Sprout முளை.
அங்குரார்ப்பணம்: A prelude to auspicious ceremony பாலிகை தெளிக்கை; Beginning ஆரம்பம்.
அங்குலம்: Finger கைவிரல்; Inch ஓர் அளவை.
அங்குலி: Finger விரல்; Finger-ring மோதிரம்; Tip of elephant's trunk யானைத் துதிக்கையின் நுனி.
அங்குஸ்தான்: Thimble தையற்காரர் விரலில் அணியும் கூடு.
அங்கை: Palm of hand உள்ளங்கை.
அச்சம்: Fear பயம்; Thinness இலேசு.
அச்சன்: Father தந்தை.
அச்சாணி: Linchpin கடையாணி.
அச்சாரம்: Earnest money முன்பணம்.
அச்சி மட்டம்: Achin pony அச்சின் தேசத்துச் சிறு குதிரை.
அச்சிரம்: Early dewy season முன்பனிக் காலம்.
அச்சு: Printing type உருக் கெழுத்து; Exact likeness சரியொப்பு; Sign அடையாளம்; Weaver's reed instrument தறியில் உபயோகப்படும் கருவி வகை; Axle உருள் கோத்த மரம்; Support ஆதாரம்; Strength வலிமை; Prototype மூல ரூபம்; Body உடம்பு; Ridge வரப்பு; Vowel உயிரெழுத்து.
அச்சுக்கட்டி: One who folds and ties cloth in dying ஆடையில் அச்சுவேலை செய்பவன்.
அச்சுக்கட்டு-தல்: To sketch சித்திரம் எழுது முன் நூல ரேகை வரைந்துகொள்ளுதல்.
அச்சுத் தாலி: Necklace of gold coins காசுமாலை.
அச்சுத் தீரட்டு-தல்: To repair worn axle வண்டி அச்சைச் சீராக்குதல்.
அச்சுதம்: Mixture of rice and cynodon grass அரிசியும் அறுகும் கூடியது; The imperishable அழிவில்லாதது.
அச்சுதன்: Viṣṇu திருமால்; Arhat அருகக்கடவுள்.
அச்சுலக்கை: Axle of well-sweep துலாவைத் தாங்கும் கட்டை.
அசகாய சூரன்: Hero able to accomplish great things single-handed துணை வேண்டாப் பெருவீரன்.
அசட்டை: Contempt புறக்கணிப்பு; Inattention கவனமின்மை.
அசடு: Stupidity பேதைமை; Crust பொருக்கு; Fault குற்றம்.
அசத்தன்: Incompetent person திறமையற்றவன்.
அசத்து: That which is non-existent இல்லாதது; False course பொய்ந் நெறி; That which is unstable நிலையில்லாதது; Illusion மாயை.
அசதி: Drowsiness அயர்வு; Unchaste woman கற்பில்லாதவள்; Derision பரிகாசம்.
அசரம்: Immovable things அசையாப் பொருள்.
அசரீரி: That which is bodiless சரீரம் இல்லாதது; Voice in air ஆகாயவாணி.
அசல்: The original மூலமானது; Principal முதல்; That which is excellent உயர்ந்தது.
அசலம்: That which is stable அசையாதது; Mountain மலை.
அசலை: Earth பூமி.
அசறு: Mire சேறு; Scab in sheep and goats ஆடுகளுக்கு உண்டாகும் சொறிநோய்; Plant pest செடிப் பூச்சி வகை; Impure matter in ulcer or sore புண்ணிலுள்ள அழுக்கு.
அசனம்: Food உணவு; Kind of tree வேங்கை மரம்.
அசனி: Thunderbolt இடி.
அசா: Languor தளர்ச்சி; Distress துன்பம்.
அசாரவாசி: Watchman of king's gate அரசனுடைய வாயில் காவலன்.
அசி-த்தல்: To eat உண்டல்; To laugh சிரித்தல்.
அசித்து: Matter சடப்பொருள்.
அசுணம்: A creature alive to music இசையறிவ தொரு விலங்கு.
அசும்பு: Spring ஊற்று; Well கிணறு; Ooze நீர்ப்பொசிவு; Soft mud சேறு; Fault குற்றம்; Minute drop of water சிறு திவலை; Connection பற்று. -தல்: To spread பரவுதல்.
அசுமானகிரி: Canopy மேற்கட்டி.
அசுரர்: Demons பதினெண் கணத்துள் ஒரு கணம்.
அசுவமேதம்: Horse-sacrifice ஒரு யாகம்.
அசுவ வாரியர்: Horsemen குதிரை செலுத்துவோர்.
அசுழம்: Dog நாய்.
அசூயை: Envy பொறாமை.
அசேதனம்: That which is insentient அறிவில்லாதது.

அசை: Expletive அசைச்சொல்; Metrical syllable செய்யுள் உறுப்புவகை; Cud மாடுகள் மீட்டு மெல்லும் இரை; Sling for carrying cadjan books சுவடித் தூக்கு; Cumin சீரகம். - தல்: To move இயங்குதல்; To go away விட்டுப்போதல்; To be slender நுடங்குதல்; To be weary ஓய்தல்; To be perplexed கலங்குதல்; To diminish குறைதல்; To rest இளைப்பாறுதல்; To stay தங்குதல்; To dance கூத்தாடுதல்; To be idle சோம்புதல். - த்தல்: To join சார்த்துதல்; To tie கட்டுதல்; To set to time தாளம் போடுதல்; To afflict வருத்துதல்; To knock தட்டுதல்; To say சொல்லுதல்.

அசைவு: Laziness சோம்பல்; Suffering caused by loss of position முன் நிலைமை கெட்டு வருந்தும் வருத்தம்; Defeat தோல்வி; Slip தப்பு; Eating உண்கை.

அஞ்சல்: Defeat தோல்வி; Laziness சோம்பல்; Relay கடி மாற்றம்; Resting place on journey கடி; Letterpost தபால்.

அஞ்சலர்: Enemies பகைவர்.

அஞ்சலி: Folding hands in worship கைகூப்பித் தொழுகை; Kind of arrow அம்பு வகை.

அஞ்சனதார்: Estimator of produce சாருபடி மதிப்பிடுவோன்.

அஞ்சனம்: Blackness கருநிறம்; Darkness இருள்; Black pigment கண்ணிடு மை; Fault குற்றம்; Sin பாவம்.

அஞ்சு-தல்: To fear பயப்படுதல்.

அஞ்சுகம்: Parrot கிளி.

அஞ்சுருவாணி: Centre-bolt binding together tiers of car தேரின் அச்சாணி.

அஞ்ஞாத வாசம்: Living incognito பிறர் அறியாமல் மறைந்து வசிக்கை.

அஞ்ஞானம்: Ignorance அறியாமை.

அஞ்ஞை: Mother தாய்.

அணர்: Distress மனவருத்தம்; Disease நோய்; Fear அச்சம்; Slippery ground வழுக்கு நிலம்.

அட்சதை: Unbroken grains of rice mixed with turmeric or saffron மங்கல அரிசி.

அட்சம்: Eye கண்.

அட்சய பாத்திரம்: Divine vessel of inexhaustible food தெய்வத்தன்மையால் உணவு குறையாத பாத்திரம்.

அட்டகாசம்: Loud laughter பெருநகை; Pomp ஆர்ப்பாட்டம்.

அட்டங்கால் - அட்டணைக்கால்: Cross-legged sitting posture குறுக்காக மடக்கி வைக்கும் கால்.

அட்ட பந்தனம்: Kind of cement used at base of stone idol விக்கிரகங்களுக்கு அடியில் சாத்தப்படும் மருந்து.

அட்டம்: Place இடம்; Food உணவு; Cross direction குறுக்கு; Side பக்கம்; Enmity விரோதம்; Upper storey மாடம்; Eight எட்டு; Palate அண்ணம்.

அட்டவணை: Index பொருட் குறிப்பு.

அட்டாணி - அட்டாலகம்: Watch-tower on fort கோட்டை மதில்மேலுள்ள காவற்கூடம்.

அட்டாலை: Apartment on flat roof மேல் வீடு; Watch-tower on fort கோட்டை மதில்மேலுள்ள காவற்கூடம்; Raised, covered platform for watching garden காவற்பரண்.

அட்டி: Procrastination தாமதம்; Hindrance தடை.

அட்டிகை - அட்டியல்: Necklace கழுத்தணி வகை.

அட்டிமதுரம்: Liquorice-plant அதிமதுரம்.

அட்டில்: Kitchen மடைப்பள்ளி; Place for performing sacrificial ceremonies ஓமசாலை.

அட்டு: Cake of coarse sugar வெல்லக் கட்டி. - தல்: To flow வடிதல்; To pour வார்த்தல்; To put இடுதல்; To bring கொண்டுவருதல்; To remit செலுத்துதல்.

அட்டூண்: Cooked food சமைத்த உணவு.

அடக்கம்: Calmness அமைதி; Cost price அசல் விலை; Contents அடங்கிய பொருள்; Secret இரகசியம்.

அடக்குமுறை: Repression தண்டித்து அடக்குகை.

அடகு: Greens இலைக்கறி; Pledge கொதுவை; Girls' game மகளிர் விளையாட்டு.

அடங்க - அடங்கலும்: Entirely முழுவதும்.

அடங்கல்: Submitting அடங்குகை; Abiding place தங்கும் இடம்; Contract work அடங்கல் வேலை; Village land account கிராம நிலக்கணக்கு வகை; Worthy action செய்யத்தக்கது.

அடங்கல்முறை: Tēvāram தேவாரம்.

அடங்கலன்: Foe பகைவன்.

அடங்கு-தல்: To obey கீழ்ப்படிதல்; To shrink சுருங்குதல்; To settle படிதல்; To disappear மறைதல்; To be comprised உள்ளாகுதல்; To sleep உறங்குதல்; To be close together நெருங்குதல்; To lie down கிடத்தல்; To cease நின்றுபோதல்.

அடத்தி: Wholesale trnsaction மொத்த வியாபாரம்; Premium for ready money வாசி; Commission business தரகு.

அடம் : Obstinacy பிடிவாதம்.

அடம்பு - அடும்பு: Hare-leaf கொடிவகை.

அடர்: Thin flat plate of metal தகடு; Flower petal பூ இதழ்; Troubling வருத்துகை. - தல்: To be close together செறிதல்; To beat அடித்தல். - த்தல்: To press down அமுக்குதல்; To oppress வருத்துதல்; To attack தாக்குதல்; To kill கொல்லுதல்; To destroy கெடுத்தல்.

அடர்மை: Lightness நொய்ம்மை.

அடல்: Killing கொல்லுகை; Hate பகை; Power வலிமை; War போர்; Victory வெற்றி.

அடலை: Ashes சாம்பல்; Trouble துன்பம்; Battle போர்.

அடவி: Forest காடு.

அடார்: Animal trap விலங்குப் பொறி.

அடாற்காரம்: That which is done by force பலாத்காரம்.

அடி: Foot பாதம்; Measure of foot =12" அடியளவு; Metrical line செய்யுளின் உறுப்பு; Beginning ஆதி; Source மூலம்; Antiquity பழமை. - த்தல்: To blow வீசுதல்; To beat புடைத்தல்; To slay கொல்லுதல்.

அடிக்குடில்: Family devoted to service of lord அடிமைக் குடும்பம்; Servants' quarters அடிச்சேரி.

அடிக்கோல்: Foot-rule அளவுகோல்.

அடிகள்: Deity கடவுள்; Sages பெரியோர்; Spiritual preceptor குரு; Queen பெருமாட்டி.

அடிகோலு-தல்: To lay foundation அஸ்திவாரம் இடுதல்.

அடிச்சி - அடித்தி: Maidservant அடியவள்.

அடிச்சுவடு: Footprint அடித்தடம்.

அடிச்சேரி: Servants' quarters பணியாளருடைய குடியிருப்பு.

அடிசில்: Boiled rice சோறு; Food உணவு.

அடிசிற்புறம்: Land assigned tax-free for providing food உணவுக்காக விடப்படும் இறையிலி நிலம்.

அடிசிற்றளி: Kitchen மடைப்பள்ளி.

அடித்தலம்: Basement பேஸ்து மட்டம்; Lowest stratum, as of pile அடிவரிசை; Sandals of great person திருவடி நிலை.

அடித்தாறு - அடிதாறு: Lines on sole of foot பாதரேகை.

அடித்தொழில் - அடிப்பணி: Menial service குற்றேவல்.

அடித்தோழி: Chief confidante தலைமைத் தோழி.

அடிதலை: Beginning and end ஆதியந்தம்.

அடி திரும்பு-தல்: Sun's shadow turning eastward பொழுது சாய்தல்.

அடி தொடு-தல்: To take oath by touching another's feet பிறர் பாதம் தொட்டுச் சபதம் பண்ணுதல்.

அடி நிலை: Foot-wear பாதக் குறடு; Foundation அஸ்திவாரம்.

அடிநிலைச் சுற்று: Stirrup சேணத்திற் கால் மிதி.

அடி நீறு: Dust of feet பாததூளி.

அடிப்படர்-தல்: To be propitious இசைந்து வருதல்.

அடிப்படு-தல்: To be worn by passing feet பாதம் பட்டுத் தேய்தல்; To obey கீழ்ப்படிதல்; To become accustomed பழகுதல்; To be long established பழமையாக வருதல். - த்தல்: To establish firmly நிலைபெறச் செய்தல்; To subdue கீழ்ப்படுத்துதல்.

அடிப்படை: Lowest layer அடித்தளம்; Foundation ஆதாரம்.

அடிப்பாடு: Footprint அடிச்சுவடு; Beaten path அடிப்பட்ட வழி; Usage வழக்கு; Firmness உறுதி; History வரலாறு; Attachment to feet of God திருவடியில் ஈடுபாடு.

அடி பிழை-த்தல்: To act unlawfully நெறி தவறி நடத்தல்.

அடி பிறக்கிடு-தல்: To retreat பின் வாங்குதல்.

அடி புதை அரணம் - அடி புனை தோல்: Kind of sandals செருப்பு வகை.

அடி பெயர்-தல்: To move a step காலெடுத்து வைத்தல்.

அடிமணியிடு-தல்: To begin தொடங்குதல்.

அடிமணை: Basis ஆதாரம்.

அடிமனை: Main walls of building சுற்றுச் சுவர்.

அடி மாடு: Cattle for slaughter கொல்லுவதற்கு உரிய மாடு.

அடிமாண்டுபோ-தல்: To perish completely நிர்மூலமாதல்.

அடியிடு-தல்: To begin தொடங்குதல்; To step forward அடிவைத்து நடத்தல்.

அடியிரட்டி-த்தல்: To mark time அடியின்மேல் அடியிடுதல்.

அடியுறை: Offering பாத காணிக்கை; Ancient term of respect in first person 'பாதத்தில் வாழ்வேன்' என்னும் பொருளில் வரும் ஒரு வணக்க மொழி.

அடியொத்த காலம்: Midday நடுப்பகல்.

அடியொற்று-தல்: To follow in footsteps பின்பற்றுதல்; To start புறப்படுதல்.

**அடிவரவு - அடிவரை - அடிவரையறை**: Mnemonic of initial syllables of stanzas in poem பாட்டின் முதற் குறிப்பு.

**அடிவரை - அடிவாரம்**: Foot of mountain தாழ்வரை.

**அடிவானம்**: Horizon கீழ்வானம்.

**அடிவினை**: Washing of clothes ஆடை துவைக்கை.

**அடிவை-த்தல்**: To begin தொடங்குதல்.

**அடு-தல்**: To cook சமைத்தல்; To boil காய்ச்சுதல்; To melt உருக்குதல்; To pound as rice குற்றுதல்; To conquer வெல்லுதல்; To trouble வருத்துதல்; To destroy அழித்தல். - த்தல்: To be near சமீபமாதல்; To be fit ஏற்றதாதல்; To happen சம்பவித்தல்; To join together சேர்த்தல்; To seek protection ஆதாரமாகப் பற்றுதல்; To give கொடுத்தல்; To press down அமுக்குதல்.

**அடுக்கம்**: Row வரிசை; Mountain slope மலைச்சாரல்; Thick grove செறிந்த சோலை; Ledge of rock பாறை; Bed படுக்கை.

**அடுக்கல்**: Series அடுக்கு; Mountain மலை.

**அடுக்களை - அடுப்பங்கரை**: Kitchen சமையலறை.

**அடுகளம்**: Battle field போர்க்களம்.

**அடுத்தேறு**: Excess மிகை.

**அடுப்பம்**: Heaviness கனம்.

**அடை**: Joining பொருந்துகை; Delivering சேர்ப்பிக்கை; Cake ஒரு பணிகாரம்; Leaf இலை; Betel leaf வெற்றிலை; Greens கீரை; Incubation அடை காக்கை; Weight கனம்; Prop தாங்கி; Shore கரை; Sprout முளை; Price விலை; Way வழி; Attribute விசேடணம். - தல்: To gather கூடுதல்; To become close சேர்ந்து இறுகுதல்; To join பொருந்துதல்; To reach சேர்தல்; To get பெறுதல்; To take refuge சரண்புகுதல்; To be closed தூர்தல். - த்தல்: To be preordained விதிக்கப்படுதல்; To be assigned அமைக்கப்படுதல்; To shut சாத்துதல்; To obstruct தடுத்தல்; To put in புகுத்துதல்; To entrust ஒப்பித்தல்; To bestow கொடுத்தல்; To allot வகுத்தல்.

**அடைக்கலங் குருவி**: House sparrow குருவி வகை.

**அடைக்கலம்**: Refuge புகலிடம்; Deposit ஒப்பித்த பொருள்.

**அடைக்காய்**: Arecanut பாக்கு; Pansupari தாம்பூலம்.

**அடைகடல்**: Sea-coast கடற்கரை.

**அடைகரை**: Shore கரைப்பக்கம்.

**அடைகல்**: Anvil பட்டடை; Stone base ஆதாரக் கல்.

**அடைகாய்**: Pansupari தாம்பூலம்.

**அடைகுறடு**: Anvil பட்டடை; Tongs பற்றுக் குறடு.

**அடைச்சு-தல்**: To insert செருகுதல்; To clothe oneself உடுத்துக்கொள்ளுதல்.

**அடைசல்**: Crowded condition நெருக்க நிலை.

**அடைசு-தல்**: To get close together நெருங்குதல்; To be joined பொருந்துதல்.

**அடைப்பம்**: Betel pouch தாம்பூலப் பை; Barber's case நாவிதன் பை.

**அடைப்பான்**: Cork அடைக்கும் மூடி.

**அடைபுடை**: Day and night இராப்பகல்.

**அடைமதிற்படு-தல்**: To be besieged முற்றுகையிடப்படுதல்.

**அடைமானம்**: Mortgage கொதுவை.

**அடைமொழி**: Attribute விசேடணம்.

**அடைய**: Completely முழுவதும்.

**அடையல்**: Kind of sandals செருப்பு வகை.

**அடையலர் - அடையார்**: Enemies பகைவர்.

**அடையாளக் கிளவி**: Password அடையாளச் சொல்.

**அடையாளம்**: Symbol அறிகுறி.

**அடைவு**: Order முறை; Fitness தகுதி; Cause ஏது; Help துணை; Refuge புகலிடம்; Path வழி; History வரலாறு.

**அடைவே**: Regularly முறையாக; Along நெடுக.

**அண்டகடாகம் - அண்டகபாலம்**: Mythical shell which surrounds universe அண்டகோளத்தின் மேல் ஓடு.

**அண்டகோளகை - அண்டகோளம் - அண்டப் பொகுட்டு**: Globe of universe அண்ட உருண்டை.

**அண்டங்காக்கை**: Jungle crow காக்கை வகை.

**அண்டசம்**: Oviparous animal முட்டையிற் பிறப்பது.

**அண்டப் பித்தி**: Outer covering of universe அண்டச் சுவர்.

**அண்ட பகிரண்டம்**: The world and the world beyond it பூகோளமும் அதன் புறத்ததான கோளமும்.

**அண்டம்**: Egg முட்டை; Earth பூமி; Sky வானம்; Universe in shape of egg பிரபஞ்ச உருண்டை; Testicle பீசம்; Nut விதை.

**அண்டர்**: Cowherds இடையர்; Foes பகைவர்; Celestials தேவர்.

**அண்டரண்டம்**: Heaven தேவர் உலகம்.

**அண்டலர் - அண்டார் - அண்ணுர்**: Foes பகைவர்.

அண்டவாதம்: Inflammation of testicles பீசவாதம்; Scrotal hernia குடல் இறக்கம்.

அண்டா: Cauldron பெரும் பாத்திர வகை.

அண்டு-தல்: To approach கிட்டுதல்; To take shelter ஒதுங்குதல்.

அண்டை: Nearness சமீபம்; Thing attached ஒட்டு; Field bund வரப்பு; Squirt நீர் வீசும் கருவி; Prop முட்டு.

அண்ணணித்து: Very near மிகவும் சமீபமானது.

அண்ணம்: Roof of mouth மேல்வாய்ப்புறம்.

அண்ணல்: Greatness பெருமை; Superiority தலைமை; King அரசன்; Master தலைவன்; God கடவுள்.

அண்ணா - அண்ணாக்கு: Uvula உள்நாக்கு.

அண்ணா-த்தல்: To look upward மேல்நோக்குதல்; To open mouth வாயைத் திறத்தல்.

அண்ணி: Elder brother's wife அண்ணன் மனைவி.

அண்ணு-தல்: To approach கிட்டுதல்; To resemble ஒத்தல்.

அண்ணை: Idiot அறிவின்றி மயங்கியிருப்பவன்.

அண்பல்: Upper teeth மேல்வாய்ப் பல்.

அண்மை - அணிமை: Nearness சமீபம்.

அண்வா-தல் (அண்வருதல்): To be close சமீபமாயிருத்தல்.

அண-த்தல்: To be united பொருந்துதல்; To lift head தலையெடுத்தல்.

அணங்கயர்-தல்: To celebrate festival விழாக் கொண்டாடுதல்.

அணங்காடு-தல்: To dance under influence of deity தெய்வம் ஆவேசித்து ஆடுதல்.

அணங்கு: Suffering வருத்தம்; Disease நோய்; Fear அச்சம்; Killing கொலை; Deity தெய்வம்; Celestial damsel தெய்வமகள்; Devil பேய்; Beauty அழகு; Form வடிவு; Young offspring குட்டி. -தல்: To die இறந்துபடுதல்; To intertwine பின்னுதல்; To be joined பொருந்துதல்; To make noise ஒலித்தல்.

அணர்: Side of upper jaw மேல் வாய்ப்புறம். -தல்: To move upwards மேல் நோக்கிச் செல்லுதல்.

அணல்: Neck கழுத்து; Lower part of mouth, chin கீழ்வாய்ப்புறம்; Wind pipe குரல்வளை; Beard தாடி; Dewlap அலைதாடி.

அணவா-தல் (அணவருதல்): To be raised மேலெடுக்கப்படுதல்.

அணவு-தல்: To go near அணுகுதல்; To embrace புல்லுதல்; To stick ஒட்டுதல்; To go upward மேல் நோக்கிச் செல்லுதல்.

அணுப்பு-தல்: To deceive ஏமாற்றுதல்.

அணி: Decoration அலங்காரம்; Beauty அழகு; Ornament ஆபரணம்; Face முகம்; Battle array படைவகுப்பு; Pleasantness இனிமை; Love அன்பு; Row வரிசை; Figure of speech செய்யுள் அணி; Assembly கூட்டம்; Disguise வேஷம்; Pile திரள்; Tier அடுக்கு. - தல்: To wear தரித்தல்; To join பொருந்துதல்; To surround சூழ்தல்.

அணிகம்: Ornament ஆபரணம்; Conveyance வாகனம்.

அணிகயிறு: Rein கடிவாள வார்.

அணிகலம்: Ornament ஆபரணம்.

அணிந்துரை: Preface பாயிரம்.

அணிநிலை மாடம்: Storeyed house மாடிவீடு.

அணில் - அணிலம்: Squirrel அணிற்பிள்ளை.

அணில்வரிக் கொடுங்காய்: Cucumber வெள்ளரிக்காய்.

அணிவகு-த்தல்: To draw up in array வியூகப்படுத்தல்.

அணிவிரல்: Ring-finger மோதிர விரல்.

அணிவிளக்கு-தல்: To adorn அலங்கரித்தல்.

அணு: Atom நுண்மையானது; Soul உயிர்; Dust பொடி.

அணுக்கச் சேவகம்: Service as personal attendant அரசர் முதலியோரிடம் அணுகிப் புரியும் தொண்டு.

அணுக்கம்-அணுக்கு: Proximity அணிமை.

அணுகலர் - அணையார்: Enemies பகைவர்.

அணுகு-தல்: To approach கிட்டுதல்.

அணை: Dam அணைக்கட்டு; Hindrance தடை; Seat ஆசனம்; Cushion மெத்தை. - தல்: To be extinguished அவிதல்; To approach சார்தல்; To embrace தழுவுதல். - த்தல்: To tie கட்டுதல்; To tie up in bunch கட்டி முடித்தல்; To produce உண்டாக்குதல்.

அணைக்கட்டு: Anicut நீர்ப் பாய்ச்சலுக்குரிய குறுக்கணை.

அணைகு: Metallic mouthpiece of wind instrument வாத்தியத்தின் முகத்தில் அமைப்பது.

அணையாடை: Strip of cloth put under infant பிள்ளைக்கு இடும் துணி விரிப்பு.

அத்தம்: Way வழி; Rough path கடுவழி; Jungle காடு; Year ஆண்டு; Wealth பொருள்; Hand கை.

**அத்தமனம்**: Setting கிரகங்கள் மறைகை; Destruction அழிவு.
**அத்தர்**: Attar வாசனைப் பொருள் வகை.
**அத்தன்**: Father தகப்பன்; Person of eminence உயர்ந்தோன்; Priest குரு.
**அத்தாட்சி**: Evidence ருஜு; Signature of attesting witness சாட்சிக் கையெழுத்து; Example திருட்டாந்தம்.
**அத்தாணி**: Hall of audience ஓலக்க மண்டபம்.
**அத்தாளம்**: Supper இரவுச் சாப்பாடு.
**அத்தான்**: Father's sister's son அத்தை மகன்; Maternal uncle's son, when elder அம்மான் மகன்; Wife's brother, when elder மனைவியின் தமையன்; Elder sister's husband அக்காள் கணவன்.
**அத்தி**: Country fig மரவகை; Sea கடல்; Beggar பிச்சைக்காரன்; Bone எலும்பு; Murder கொலை; Elephant யானை; Avidity ஆசை.
**அத்தியயனம்**: Reciting Vēda வேதம் ஓதல்.
**அத்தியாயம்**: Chapter நூற்பிரிவு.
**அத்தியாளி**: Fabulous animal யானையாளி.
**அத்திரம்**: Missile கைவிடுபடை; That which is unstable நிலையற்றது; Horse குதிரை.
**அத்திரி**: Camel ஒட்டகம்; Horse குதிரை; Mule கோவேறு கழுதை; Forge உலைத் துருத்தி; Mountain மலை.
**அத்தினி**: Female elephant பெண் யானை.
**அத்து**: Sewing தையல்; Redness சிவப்பு; Astringent துவர்ப்பு; Limit எல்லை.
**அத்துவானம்**: Desolate place பாழிடம்.
**அத்துவிதம் - அத்துவைதம்**: Non-duality இரண்டன்மை.
**அத்தை**: Father's sister தகப்பனுடன் பிறந்தவள்; Wife's mother மனைவியின் தாய்; Husband's mother கணவன் தாய்.
**அதக்கு-தல்**: To subdue கீழ்ப்படுத்துதல்.
**அதகம்**: Medicine மருந்து.
**அதகன்**: Strong person வலியவன்.
**அதட்டம்**: Lower fang of serpent பாம்பின் கீழ்வாய்ப் பல்; Breath of snake பாம்பின் மூச்சு.
**அதம்**: Country fig அத்தி; Destruction நாசம்.
**அதமம்**: Worst கடையானது.
**அதர்**: Way வழி; Order முறைமை; Kind of wattle or excrescence under neck of goats and sheep ஆட்டின் கழுத்தில் தொங்கும் தசை.
**அதர்கோள்**: Highway robbery வழிப்பறி.
**அதர்வணம்-அதர்வம்**: Name of fourth Vēda நான்காம் வேதம்.
**அதரம்**: Lip உதடு.
**அதரிகொள்ளு-தல் - அதரிதிரித்-தல்**: To thresh grain with cattle நெற்கதிரைக் கடாவிட்டு உழக்குதல்; To tread out enemies பகையை அழித்தல்.
**அதவம்**: Country fig அத்தி; Sacrificial ladle நெய்த் துடுப்பு.
**அதவு-தல்**: To kill கொல்லுதல்; To attack எதிர்த்தல்.
**அதழ்**: Petal இதழ்.
**அதள்**: Skin தோல்.
**அதள்புனை அரணம்**: Glove used in warfare தோற் கைத்தளமென்னும் கருவி.
**அதி**: Excess மிகுதி.
**அதிக்கிரமம்**: Going beyond மீறுகை; Iniquity அநீதி.
**அதிகாரம்**: Authority ஆணையிடும் பதவி; Rule ஆட்சி; Order முறைமை; Claim உரிமை; Section of book நூற்பிரிவு; Context சந்தர்ப்பம்.
**அதிகாரி**: Superintendent விசாரணைக் கர்த்தா; Person of worth தகுதியுள்ளவன்.
**அதிகாலை**: Early dawn விடியற்காலம்.
**அதிங்கம்**: Liquorice - plant அதிமதுரம்.
**அதிசயம்**: Excellence சிறப்பு; Excess மிகுதி; Astonishment ஆச்சரியம்.
**அதிட்டி-த்தல்**: To abide in நிலைக்களமாகக் கொள்ளுதல்.
**அதிதி**: Guest விருந்தினன்.
**அதிதேவதை**: Presiding deity அதிட்டான தேவதை.
**அதிபதி - அதிபன்**: Lord தலைவன்; King அரசன்.
**அதிமேற்றிராணியார்**: Archbishop மேற்றிராணிமாரில் பிரதானமானவர்.
**அதியரையன்**: Chief of fishermen மீன்வலைஞர் தலைவன்.
**அதிர்-தல்**: To quake நடுங்குதல்; To be alarmed மனம் கலங்குதல்; To roar முழங்குதல்; To echo எதிரொலித்தல். - **த்தல்**: To rebuke அதட்டுதல்; To be confused கலங்குதல்.
**அதிர்வெடி - அதிர்வேட்டு**: Explosion of rocket குழாய்வெடி ஒலி; Rocket வெடிகுழாய்.
**அதிரசம்**: Sweet rice cake பணிகார வகை.
**அதிரல்**: Wild jasmine காட்டுமல்லிகை; Hog-creeper கொடிவகை.
**அதிரேகம்**: Excess மிகுதி.
**அதிவாசம்**: A preparatory ceremony before marriage விவாகச் சடங்குக்கு முன் அங்கமாக நிகழ்த்தும் சடங்கு வகை.

அதிவிருட்டி: Excessive rain பெருமழை.
அதீதம்: That which is beyond கடந்தது.
அதீனம்: Possession ஆளுகை.
அதுக்கு-தல்: To press with fingers அமுக்குதல்; To bite கடித்தல்; To chew மெல்லுதல்; To beat அடித்தல்.
அதும்பு-தல்: To swarm மொய்த்தல்.
அதுலன்: One who is peerless ஒப்பற்றவன்.
அதேந்து: What is that அது என்ன.
அதை-த்தல்: To wander அலைதல்; To swell வீங்குதல்.
அதோமுகம்: Face that looks downward கீழ்நோக்கிய முகம்.
அதோள் - அதோளி: There அவ்விடம்.
அந்தக்கரணம்: Inner seat of thought உட்கருவி.
அந்தக் கேணி: Hidden well மறை கிணறு.
அந்தகன்: Destroyer அழிப்போன்; Yama எமன்; Blind man குருடன்.
அந்தகாரம்: Darkness இருள்.
அந்தண் பாடி: Quarters where Brahmins reside பிராமணர் குடியிருக்கும் இடம்.
அந்தணன்: Gracious one அழகிய தட்பமுடையான்; Brahmin பார்ப்பான்; Sage முனிவன்; Brahma பிரமன்.
அந்தணட்டி - அந்தணி: Brahmin woman பார்ப்பனி.
அந்தப்புரம்: Queen's apartment in palace அரசி இருப்பிடம்; Zenana மகளிர் உறைவிடம்.
அந்தப் போதிகை: Chain fastening hind legs of elephant யானையின் பின்னங்கால் சங்கிலி.
அந்த பரம்பரை: Maxim of blind leading blind குருடரைக் குருடர் பின்பற்றும் நெறி.
அந்தம்: Beauty அழகு; End முடிவு; Blindness குருடு; Secrecy இரகசியம்.
அந்தர்: Hundredweight=112 lbs. 112 இராத்தல்.
அந்தர்த்தானம்: Disappearing மறைகை.
அந்தர்வேதி: Inside of sacrificial ground யாகசாலையின் உள்ளிடம்.
அந்தரங்கம்: Secrecy இரகசியம்; Mind உள்ளம்; Inmost thought உட்கருத்து; Intimate friendship உற்ற நட்பு.
அந்தரடி-த்தல்: To turn somersault தலைகீழாகப் பாய்தல்.
அந்தர துந்துபி: Drum of gods தேவ வாத்தியம்.
அந்தரப்படு-தல்: To be in great distress பெருந்துன்பம் உறுதல்.

அந்தரம்: Open space வெளி; Darkness இருள்; Sky ஆகாயம்; Intermediate space நடு; Place இடம்; Waist இடுப்பு; Impartiality நடுநிலை; Heaven தேவலோகம்; Difference பேதம்; Contrariety விபரீதம்; Temple தேவாலயம்; Evil தீமை; Crowd கூட்டம்; End முடிவு; Outside புறம்பு; Impediment இடையூறு; Cloud மேகம்.
அந்தரியாமி: God கடவுள்.
அந்தாதி: Kind of poetical work பிரபந்த வகை.
அந்தி: Dissolution of universe at end of Kalpa ஊழி முடிவு; Twilight சந்தியா காலம்; Red glow of sunset செவ்வானம்; Night இரவு; Junction of streets தெருக்களின் சந்தி. - த்தல்: To unite சந்தித்தல்; To approach கிட்டுதல்; To tie up in knot முடிந்துவைத்தல்.
அந்திக்கடை: Evening bazaar மாலைக் கடை.
அந்திமகாலம் - அந்திமதசை: Last moments மரண வேளை.
அந்திமாலை: Evening மாலைப்பொழுது.
அந்தியம்: That which is last கடைப்பட்டது; Time of death மரணகாலம்; 1,00,000 crores இலட்சம் கோடி.
அந்திரன்: God தேவன்.
அந்தில்: There அவ்விடம்.
அந்து: Paddy insect நெற்பூச்சி; In that way அப்படி; End முடிவு.
அந்துப்போதிகை: Stake for fastening elephant யானை கட்டும் முளை.
அநாதன்: One who has no superior தனக்குமேல் ஒரு தலைவன் இல்லாதவன்; One who has no protector திக்கில்லாதவன்.
அநாதி - அநாதை: Helpless person திக்கற்றவன்.
அநாயம்: Uselessness வீண்.
அநித்தியம்: That which is transient நிலையற்றது.
அநிதம்: That which is unlimited அளவு கடந்தது.
அநியாயம் - அநீதம் - அநீதி: Injustice அக்கிரமம்.
அப்காரி: Manufacture or sale of spirituous liquors சாராயம் முதலியவை இறக்கி விற்பனை செய்கை.
அப்தம்: Year வருஷம்.
அப்பட்டம்: That which is unmixed கலப்பற்றது.
அப்பணை: Command கட்டளை.
அப்பம்: Kind of cake பணிகார வகை.

அப்பர்: He-goat ஆண் ஆடு; Male monkey ஆண் குரங்கு.
அப்பழுக்கு: Blot அசுத்தம்; Fault குற்றம்.
அப்பால்: Further அதன்மேல்.
அப்பாவி: Simpleton பேதை.
அப்பியசி-த்தல்: To practise பழகுதல்.
அப்பிரகம்: Mica மைக்கா.
அப்பு: Water நீர்; Thigh தொடை. -தல்: To dash தாக்குதல்.
அப்பூச்சி காட்டு-தல்: To frighten children by turning back eye-lids கண் இதழை மடித்துக் குழந்தைகளைப் பயமுறுத்துதல்.
அப்ஸரஸ்: Class of celestial nymphs தெய்வப்பெண்களுள் ஒரு வகையார்.
அபகரி-த்தல்: To seize by violence கவர்தல்.
அபகாரம்: Wrong தீமை.
அபசாரம்: Disrespectful conduct மரியாதை தவறிய செயல்.
அபத்தம்: Error வழு; Falsehood பொய்.
அபயம்: Fearlessness அச்சமின்மை; Refuge அடைக்கலம்.
அபரஞ்சி: Refined gold புடமிட்ட பொன்.
அபரம்: Latter பின்.
அபராசிதன்: The invincible வெல்லப்படாதவன்.
அபராதம்: Offence குற்றம்; Penalty தண்டம்.
அபரிமிதம்: Unlimitedness அளவின்மை.
அபலை: Woman பெண்.
அபவாதம்: Slander அவதூறு.
அபாடம்: Mistake தவறு.
அபாண்டம்: Deliberate evil report இடு நிந்தை.
அபாரம்: That which is boundless அளவற்றது.
அபிசாரம்: Employment of mantras for malevolent purpose பிறருக்குத் தீங்கை நாடி மந்திரப் பிரயோகம் செய்கை.
அபிதானம்: Name பெயர்.
அபிநயம்: Gesture சைகை.
அபிநவம்: That which is quite new புத்தம் புதியது.
அபிமதம்: Desire விருப்பம்.
அபிமானம்: Attachment பற்று.
அபிமுகம்: Face turned towards நேர் முகம்.
அபிராமம்: The beautiful அழகானது.
அபின்: Opium அபினி.
அபூர்வம்: Rare அரிது.
அபேட்சை: Desire விருப்பம்.
அம்: Beauty அழகு; Water நீர்.
அம்பணம்: Grain measure மரக்கால்; Water-pipe நீர்க் குழாய்; Yāḻ யாழ்.
அம்பர்: Yonder அங்கே.
அம்பரம்: Sky ஆகாயம்; Point of compass திக்கு; Sea கடல்; Turmeric மஞ்சள்; Clothes ஆடை.
அம்பல்: Private talk concerning love intrigues சிலர் அறிந்து காதலைப்பற்றிப் புறங்கூறும் மொழி; Calumny பழிச்சொல்; Condition of flower about to blossom பூ அலர்தற்குச் சிறிது முன்னுள்ள நிலை.
அம்பலம்: Open space for use of public பலர் கூடும் வெளியிடம்; Village assembly ஊர்ச்சபை; Pit of theatre கூத்துக் காணும் இடம்; Śiva shrine at Chidambaram தில்லையம்பலம்.
அம்பலி: Ancient drum பறை வகை; White of egg முட்டையில் வெள்ளைக் கரு.
அம்பறத்தூணி: Quiver அம்புக்கூடு.
அம்பா - அம்பாள் - அம்பை: Pārvatī பார்வதி.
அம்பாரம்: Heap of paddy நெற் குவியல்.
அம்பாரி: Howdah யானைமேல் பீடம்.
அம்பாவாடல்: Ceremonial ablutions of young girls in month of Tai தைந்நீராடல்.
அம்பி: Small boat தோணி; Ship மரக்கலம்; Toddy கள்; Baling-basket இறைகூடை.
அம்பு: Bracelet வளையல்; Arrow பாணம்; World உலகம்; Cloud மேகம்; Water நீர்.
அம்புசம்- அம்புயம்-அம்புஜம்-அம்போருகம்: Lotus தாமரை.
அம்புதம்: Cloud மேகம்.
அம்புதி: Ocean சமுத்திரம்.
அம்புலி: Moon சந்திரன்.
அம்போதரம்: Cloud மேகம்; Ocean கடல்.
அம்மணம் - அமணம்: Nudity நிருவாணம்.
அம்மம்: Woman's breast ஸ்தனம்.
அம்மனை: Mother தாய்; Mistress தலைவி; Girls' game அம்மானை விளையாட்டு; Balls used in the game அம்மானை ஆடும் கருவி; Fire நெருப்பு.
அம்மை: Mother தாய்; Pārvatī பார்வதி; Small-pox, chicken-pox, measles நோய்வகை; Beauty அழகு; Calmness அமைதி; Future birth வரு பிறப்பு; Heaven மேல் உலகம்.
அமங்கலி: Widow விதவை.

**அமட்டு-தல்**: To intimidate அதட்டுதல்.

**அமண்**: Jainism சமணமதம்; Nakedness திருவாணம்.

**அமர்**: Desire விருப்பம்; War யுத்தம். - தல்: To abide இருத்தல்; To be extinguished அணைதல்; To resemble ஒப்பாதல்; To get close நெருங்குதல்.

**அமராம்**: Disease of eye கண் சூட்டு நோய்; Rudder படகைத் திருப்பும் தண்டு.

**அமரன்**: Warrior போர் செய்வோன்; Celestial தேவன்.

**அமரார்**: Foes பகைவர்.

**அமரி**: Urine சிறுநீர்; Durga துர்க்கை; Ambrosia அமிர்தம்.

**அமரோசை**: Low pitch தக்கு சுருதி.

**அமல் - அமூல்**: Authority அதிகாரம்; Supervision மேல்விசாரணை.

**அமலை**: Abundance மிகுதி; Dance of soldiers gathered round fallen enemy king பட்ட பகை வேந்தனைச் சூழ்ந்து நின்று வீரர் ஆடும் ஆட்டம்; Songs sung by soldiers gathered round fallen enemy king பட்ட பகை வேந்தனை நெருங்கி வீரர் பாடும் பாட்டு; Denseness செறிவு; Noise ஆரவாரம்; Rice ball சோற்றுத் திரளை; Goddess, as immaculate தேவி.

**அமளி**: Tumult ஆரவாரம்; Bedstead கட்டில்.

**அமாத்தியன்**: Minister மந்திரி.

**அமிர்தம் - அமிர்து - அமிழ்தம் - அமிழ்து - அமுதம் - அமுது**: Immortality அழிவின்மை; Ambrosia தேவர் உணவு; Pleasantness இனிமை; Cow's milk பசுவின் பால்; Unsolicited charity யாசியாமல் கிடைக்கும் பிச்சை; Final liberation மோட்சம்.

**அமிழ்-தல்**: To be immersed ஆழ்தல்.

**அமின் - அமீன்**: Ameen அமீனு.

**அமுதுபடி**: Rice அரிசி.

**அமை**: Bamboo மூங்கில்; Beauty அழகு. - தல்: To subside அடங்குதல்; To agree உடன்படுதல்; To close up நெருங்குதல்; To join பொருந்துதல்; To abide தங்குதல்; To prepare ஆயத்தமாதல்; To complete நிரப்புதல்; To end முடிவடைதல்; To be non-existent இல்லையாதல்; To be practicable செய்யக்கூடியதாதல்.

**அமைச்சன்**: Minister மந்திரி.

**அமைதி**: Nature தன்மை; Occasion சமயம்; Action செய்கை; Modesty அடக்கம்; Humility தாழ்வு; Grandeur மாட்சிமை; Propriety தகுதி.

**அமோகம்**: Unfailingness இலக்குத் தவறாமை; Abundance மிகுதி.

**அயக்காந்தம்**: Loadstone ஊசிக் காந்தம்.

**அயணம்-அயனம்**: Moving செலவு.

**அயம்**: Water நீர்; Spring, fountain சுனை; Ditch பள்ளம்; Tank குளம்; Sheep ஆடு; Iron இரும்பு; Horse குதிரை; Doubt சந்தேகம்.

**அயர்-தல்**: To play விளையாடுதல்; To become weary தளர்தல்; To lose consciousness உணர்வழிதல்; To perform செய்தல்; To forget மறத்தல்; To drive as chariot செலுத்துதல்; To worship வழிபடுதல்; To desire விரும்புதல்.

**அயர்ச்சி**: Anxiety மனக்கவலை.

**அயல்**: Neighbourhood பக்கம்; Outwardness புறம்பு.

**அயறு**: Excrescence from sore புண் வழலை.

**அயன்**: Brahma பிரமன்; Land, on which tax is paid directly to government அரசாங்கத்தாருக்கு நேராக வரி செலுத்தும் நிலம்.

**அயா**: Languor தளர்ச்சி.

**அயாவு-தல்**: To be distressed வருந்துதல்.

**அயாவுயிர்-த்தல்**: To take long breath நெட்டுயிர்த்தல்; To rest வருத்தம் தீர்தல்; To bubble up கொப்புளித்தல்; To give rest to இளைப்பாற்றுதல்.

**அயிர்**: Doubt ஐயம்; Subtlety நுண்மை; Fine sand நுண்மணல்; Candied sugar கண்ட சருக்கரை; Imported white fragrant substance for burning புகைக்கும் வாசனைப் பொருள் வகை.

**அயில்**: Iron இரும்பு; Surgical lancet சத்திர சிகிச்சைக்கு உதவும் கத்தி; Lance வேல்; Sharpness கூர்மை.

**அயில்-தல் (அயிலுதல்)**: To eat உண்ணுதல்; To drink பருகுதல்.

**அயினி**: Food உணவு.

**அயினி நீர்**: Water mixed with boiled rice, saffron and lime, waved before married couple, or at close of auspicious ceremony ஆலத்தி நீர்.

**அயுதம்**: Ten thousand பதினாயிரம்.

**அர்க்கியம்**: Water offered reverentially to gods or guests for washing their hands தேவர்களுக்கும் அதிதிகளுக்கும் கை கழுவத் தீர்த்தம் கொடுக்கும் உபசாரம்.

**அர்த்தம்**: Meaning சொல்லின் பொருள்; Wealth செல்வம்; Half அரை.

**அர்த்த மண்டபம்**: Hall immediately in front of innermost shrine in temple கர்ப்பக் கிருகத்தைச் சார்ந்த மண்டபம்.

**அர்ப்பணம் - அர்ப்பிதம்**: Dedication உரிமையாக்குதல்.

**அரக்கம்-அரக்கு**: Vermilion சாதிலிங்கம்; Redness சிவப்பு; Sealing wax செய்மெழுகு; Arrack கள்ளின் வகை.

**அரக்கன்**: Demon இராக்கதன்.

**அரக்கி**: Demoness இராக்கதப் பெண்.

**அரக்கு-தல்**: To rub தேய்த்தல்; To waste சிதைத்தல்; To press down அழுத்துதல்; To cause trouble வருத்துதல்; To clip off கிளை தறித்தல்; To cut வெட்டுதல்; To cause to diminish குறைத்தல்; To eat up முழுவதும் உண்ணுதல்; To conceal மறைத்தல்; To wipe துடைத்தல்.

**அரங்கம்-அரங்கு**: Stage நாடகம் ஆடும் இடம்; Gambling house சூதாடும் இடம்; Fencing school படைக்கலம் பயிலும் இடம்; Assembly சபை; Battle - field போர்க்களம்; Ait ஆற்றிடைக் குறை; Womb கருப்பை.

**அரங்கு-தல்**: To pierce as arrow அம்பு தைத்தல்; To be destroyed அழிதல்; To be pressed down அழுந்துதல்; To suffer வருந்துதல்.

**அரங்கேற்றம்**: Presentation of new work or art for acceptance before learned assembly புது நூல், நடனம் முதலியவற்றை முதல் முறையாகச் சபையில் ஏற்றும் செய்கை.

**அரசர் பின்னோர்**: Vaisyas வைசியர்.

**அரசாணி**: Branch of pipal tree அரசங் கொம்பு; Queen அரசி; Quern அம்மி.

**அரசிருக்கை**: King's audience hall இராச சபை; Throne சிங்காதனம்.

**அரசிறை**: King's tribute அரசாங்க வரி; King of kings அரசருக்கு அரசன்.

**அரசு**: Kingliness அரசனது தன்மை; King அரசன்; Kingdom இராச்சியம்; Government அரசாட்சி; That which is pre-eminent தலைமையானது; An ancient title of Vēḷāḷa chieftains பண்டை வேளாளர் பட்டப் பெயர்; Pipal tree ஒரு மரம்.

**அரசு கட்டில்**: Throne சிங்காதனம்.

**அரசுவா**: State elephant பட்டத்து யானை.

**அரட்டு**: Haughtiness கர்வம்; Petty chieftains குறும்பர்; Mischief குறும்பு; Fear அச்சம்; Prowess வலிமை.

**அரண்-அரணம்**: Defence நிலவரண் முதலியன; Fortress கோட்டை; Forest defence காவற் காடு; Compound wall சுற்று மதில்; Armour கவசம்.

**அரண்மனை-அரமனை**: Palace இராச கிருகம்; Royal zenana அந்தப்புரம்.

**அரண்யம் - அரணியம்**: Forest காடு.

**அரணி**: Pieces of pipal for kindling sacred fire தீக்கடை கோல்.

**அரணியன்**: Refugee அடைக்கலமானவன்.

**அரணை**: Smooth streaked lizard பாம்பரணை.

**அரணைக்கல்**: Uncut stone வேலை செய்யப் படாத கல்.

**அரத்தகம்**: Red lac used by women for dyeing feet செம்பஞ்சுக் குழம்பு.

**அரத்தம்**: Red colour சிவப்பு; Blood இரத்தம்; Coral பவளம்; Shoe - flower செம்பரத்தை; Red water lily செங்கழுநீர்; Common kadamba கடம்பு; Brazil cotton செம்பருத்தி; Garment துகில்வகை.

**அரதனம்**: Precious stone இரத்தினம்.

**அரந்தை**: Trouble துன்பம்.

**அரம்**: File அராவும் கருவி; Nether world of serpents பாதலம்.

**அரம்பு**: Mischief குறும்பு.

**அரம்பை**: Plantain வாழை; Celestial damsel தேவமாது.

**அரமகள்**: Celestial damsel தேவமாது.

**அரமியம்**: Palace அரண்மனை; Terrace of house நிலா முற்றம்.

**அரலை**: Sea கடல்; Tubercle கழலை; Seed விதை; Fault குற்றம்; Twist முறுக்கு; Jally சல்லிக்கல்; Oleander அரளி.

**அரவஞ்செய் - தல்**: To confuse mind மனத்தைக் கலக்குதல்.

**அரவணை-அராவணை**: Serpent couch of Visṇu திருமாலின் பாம்புப் படுக்கை; Preparation of rice, sugar and some other ingredients offered to Visṇu at midnight worship அர்த்த சாமத்தில் திருமாலுக்கு நிவேதிக்கும் சருக்கரைப் பொங்கல். - த்தல்: To embrace தழுவுதல்; To support ஆதரித்தல்.

**அரவதண்டம்**: Punishment by Yama எம தண்டனை.

**அரவம் - அரவு - அரா**: Snake பாம்பு.

**அரவிந்தம்**: Lotus தாமரை.

**அரள்-தல் (அரளுதல்)**: To be terrified பயப்படுதல்.

**அரற்று-தல்**: To lament புலம்புதல்; To shout with excitement ஆரவாரித்தல்; To blabber பிதற்றுதல்.

**அரன்**: Śiva சிவபெருமான்.

**அராகம்:** Desire இச்சை; Redness சிவப்பு.

**அராவு-தல்:** To file அரத்தால் தேய்த்தல்.

**அரி:** Cutting அறுப்பது; Toddy கள்; Paddy நெல்; Ear of paddy நெற்கதிர்; Reaped handful of grain கைப்பிடித் தானியம்; Maturity of grain கதிர் அறுக்கும் பருவம்; Sifting அரிப்பது; Interval of space or time இடைவிடுகை; Beetle வண்டு; Softness மென்மை; Line in white of eye கண் வரி; Tinkling pieces of anklet சிலம்பின் உட்பரல்; Eye கண்; Bamboo மூங்கில்; Grove சோலை; Car தேர்; Tax வரி; Fastening of drum பறையின் வார்க்கட்டு; Pig பன்றி; Sleeping place மக்கள் உறங்கும் இடம்; Couch கட்டில்; Sleep நித்திரை; Sea கடல்; Thinness and flatness தகட்டு வடிவம்; Junction of roads தெருச்சந்தி; Garland பூமாலை; Sharpness கூர்மை; Strength வலிமை; Core of tree மரக் காழ்; Fault குற்றம்; Drop of water நீர்த்திவலை; Wheel சக்கரம்; Weapon ஆயுதம்; Gold பொன்; Colour நிறம்; Beauty அழகு; Emerald மரகதம்; Viṣṇu திருமால்; Śiva சிவன்; Indra இந்திரன்; Yama எமன்; Fire நெருப்பு; Air காற்று; Smoke புகை; Light ஒளி; Sun சூரியன்; Moon சந்திரன்; Mountain மலை; Lion சிங்கம்; Leo of zodiac சிங்கராசி; Horse குதிரை; Monkey குரங்கு; Snake பாம்பு; Frog தவளை; Parrot கிளி; Basil துளசி. - த்தல்: To make intermittent noise விட்டு விட்டு ஒலித்தல்; To divide வகுத்தல்; To subtract கழித்தல்; To search through and through துருவித் தேடுதல்; To itch தினவெடுத்தல்; To graze மேய்தல்; To sift கொழித்தெடுத்தல்; To sweep கூட்டுதல்; To remove நீக்குதல்; To create படைத்தல்; To destroy சங்கரித்தல்.

**அரிக்காரன்:** Mace-bearer வெள்ளித் தடி பிடித்துக் கட்டியம் கூறுவோன்.

**அரிகால்-அரிதாள்:** Stubble கதிர் அறுத்த தாள்.

**அரிகிணை:** Kind of drum பறைவகை.

**அரிச்சுவடி - அரிவரி:** Alphabet book நெடுங்கணக்குச் சுவடி.

**அரிசனம்:** Turmeric மஞ்சள்.

**அரிட்டம்-அரிடம்:** Evil தீங்கு; Toddy கள்.

**அரிணம்:** Deer மான்.

**அரிதாரம்:** Musk of deer கஸ்தூரி; Orpiment நடிகர் முகத்தில் பூசும் ஒருவகைச் சுண்ணம்.

**அரிமணல்:** Fine sand நுண்மணல்.

**அரிமா - அரிமான்:** Lion சிங்கம்.

**அரியகம்:** Anklet பாதசரம்.

**அரியணை - அரியாசனம்:** Throne சிங்காதனம்.

**அரியல்:** Toddy கள்.

**அரில்:** Interlacing, braiding பின்னல்; Disagreement மாறுபாடு; Fault குற்றம்; Low jungle சிறு காடு; Thicket புதர்.

**அரிவை:** Woman மாது.

**அரு:** The formless உருவம் அற்றது; Material cause of world மாயை; Leech அட்டை.

**அருக்கம்:** Smallness, brevity சுருக்கம்.

**அருக்கன்:** Sun சூரியன்.

**அருக்கு:** Scarceness அருமை; Fear அச்சம்.-தல்: To show disinclination in bargain மனம் இன்மை காட்டுதல்; To boil கொதிக்கவைத்தல்; To stop விலக்குதல்; To appreciate பாராட்டுதல்; To destroy அழித்தல்.

**அருகந்தர்:** Jains அருக சமயத்தார்.

**அருகன்:** Worthy person தக்கவன்; Arhat அருகக் கடவுள்; Jain ஜைன மதத்தான்.

**அருகாழி:** Toe ring கால் விரல் மோதிரம்.

**அருகு:** Neighbourhood சமீபம்; Side பக்கம்; Border ஓரம். - தல்: To be increased பெருகுதல்; To be reduced குறைதல்; To happen rarely அரிதாதல்; To be afraid அஞ்சுதல்; To perish கெடுதல்; To approach கிட்டுதல்; To indicate one's intention குறிப்பித்தல்; To know அறிதல்.

**அருங்கு:** Rareness அருமை.

**அருச்சுனம்:** Whiteness வெண்மை; Arjan மருதமரம்.

**அருட்டு-தல்:** To confuse மயக்குதல்.

**அருணம்:** Red சிவப்பு; Deer மான்.

**அருணன்:** Sun's charioteer சூரியனின் சாரதி; Sun சூரியன்; The planet Mercury புதன்.

**அருத்தி:** Desire ஆசை; That which is desired விரும்பப்படும் பொருள்.

**அருத்து-தல்:** To feed ஊட்டுதல்.

**அருந்தல்:** Scarcity அருமை.

**அருந்து-தல்:** To eat உண்ணுதல்; To drink குடித்தல்; To contain உட்கொள்ளுதல்; To experience அநுபவித்தல்.

**அருநிலம்:** Desert tract பாலைவனம்.

**அருநிலை:** Deep water ஆழமான நீர்நிலை.

**அருநெறி:** Difficult way கவழி; Desert tract பாலைவனம்.

**அருப்பம்:** Difficulty அருமை; Mountain fortress துர்க்கம்; Firmness திண்மை; Toddy கள்; Germ of grain of paddy நெற்கதிர்க் கரு; Flour மாவு; Buttermilk மோர்; Trifle அற்பம்.

**அரும்பு:** Tender bud மொட்டின் முந்திய நிலை; Filigree work in imitation of buds நகைகளின் அரும்பு வேலை; Rice அரிசி. **-தல்:** To sprout தோன்றுதல்.

**அருமந்த - அருமந்தன்ன - அருமருந்தன்ன:** Rare அருமையான.

**அருமை:** Rareness அபூர்வம்; Greatness பெருமை; Difficulty சிரமம்; Difficulty of attainment பிரயாசை; Smallness சிறுமை; Nothingness இன்மை.

**அருவி:** Waterfall நீர்வீழ்ச்சி; River's mouth கழிமுகம்; Spring at foot of hill மலையடி நீர் ஊற்று; Row ஒழுங்கு; Stubble of Italian millet தினைத்தாள்; The formless உருவம் இல்லாதது.

**அருவு-தல்:** To afflict துன்பப்படுத்துதல்.

**அருவுடம்பு:** Subtle body சூக்கும சரீரம்.

**அருள்:** Grace கருணை.

**அருளாழி:** Wheel of Dharma தரும சக்கரம்.

**அருளிப்பாடு:** Gracious command கட்டளை.

**அரை:** Half பாதி; Waist இடை; Stomach வயிறு; Pipal tree அரச மரம்; Stem தண்டு; Trunk of tree மரத்தின் அடிப்பாகம். **-தல்:** To become macerated தேய்தல்.

**அரைக்கால்:** The fraction 1/8 எட்டில் ஒரு பங்கு.

**அரைஞாண் - அரைநாண்:** Waistcord இடுப்பிற் கட்டும் கயிறு.

**அரைநாள்:** Midnight நடு ராத்திரி.

**அரைப்பு:** Grinding அரைக்கை; Substance used for removing oil இலுப்பைக் கட்டி.

**அரைமலை:** Side of hill மலைச்சாரல்.

**அல்:** Night இரவு; Darkness இருள்; Evening அந்திவேளை; Confusion மயக்கம்.

**அல்கல்:** Staying தங்குகை; Deficiency குறைவு; Night இரவு; Day of 24 hours நாள்.

**அல்கு:** Night இரவு; Afternoon பிற்பகல். **-தல்:** To shrink சுருங்குதல்; To stay தங்குதல்; To be permanent நிலைத்து நிற்றல்; To be destroyed அழிதல்; To reach சேருதல்; To preserve சேமித்து வைத்தல்.

**அல்குநர்:** Inhabitants குடிகள்.

**அல்குல்:** Side பக்கம்; Waist அரை; Pudendum muliebre பெண்குறி.

**அல்லகண்டம்:** Affliction துன்பம்.

**அல்லங்காடி:** Evening bazaar அந்திக் கடை.

**அல்லம்:** Ginger இஞ்சி.

**அல்லல்:** Distress துன்பம்.

**அல்லா:** Supreme Being worshipped by Muslims மகம்மதியர் வணங்கும் கடவுள். **-த்தல்:** To suffer துன்பம் உறுதல்; To rejoice மகிழ்தல்.

**அல்லி:** Water lily ஆம்பல்; White water lily வெள்ளாம்பல்; Inner flower petals அகவிதழ்; Lily seeds அல்லி அரிசி; Kind of tree காயாமரம்; Lotus தாமரை.

**அல்லியம்:** Plough கலப்பை; Kind of dance ஆடல் வகை.

**அல்லோன்:** Moon சந்திரன்.

**அல்வழக்கு:** Improper conduct தகாத ஒழுக்கம்.

**அல-த்தல்:** To suffer துன்பம் உறுதல்; To be in want வறுமைப்படுதல்.

**அலக்கண்:** Affliction துன்பம்.

**அலக்கு:** Roof lath வரிச்சு; Separateness தனிமை; Bone எலும்பு.

**அலகு:** Number எண்; Measure அளவு; Standard of measurement அளவு கருவி; Cowries பலகறை; Grains of paddy நெல் மணி; Ear of paddy or grain கதிர்; Weapon ஆயுதம்; Pointedness கூர்மை; Bird's beak பறவை மூக்கு; Jaw தாடை; Rafter கைம்மரம்; Broom துடைப்பம்; Unit of measurement in musical scale சுருதி அளவு; Flaw குற்றம்.

**அலகை:** Devil பேய்; Standard அளவு.

**அலகைத் தேர்:** Mirage பேய்த் தேர்.

**அலங்கம்:** Rampart கொத்தளம்.

**அலங்கல்:** Garland பூமாலை; Waving ear of corn அசையும் கதிர்; Regularity ஒழுங்கு.

**அலங்காரம்:** Beauty அழகு; Ornament ஆபரணம்; Rhetorical embellishments செய்யுள் அணி.

**அலங்கு-தல்:** To move அசைதல்; To sympathise இரங்குதல்; To shine ஒளிர்தல்.

**அலசு-தல்:** To shake அசைதல்; To suffer வருந்துதல்; To be exhausted சோர்தல்.

**அலத்தகம்:** Red lac செம்பஞ்சுக் குழம்பு.

**அலதி குலதி:** Disorder அலங்கோலம்.

இறங்கு-தல்: To abandon விட்டு நீங்குதல்.
இறஞ்சி: Kind of garment துகில் வகை.
இறட்டு-தல்: To splash முகந்து வீசுதல்.
இறடி: Italian millet தினை.
இறப்பு: That which is superior உயர்ந்தது; Heavenly bliss மோட்சம்; Eaves வீட்டு இறப்பு.
இறல்: Ruin இறுதி.
இறவி-இறவு: Death சாவு.
இறவுளர்: Inhabitants of hilly tract குறிஞ்சி நில மக்கள்.
இறால்: Honeycomb தேன்கூடு.
இறவு-தல்: To scrape off after roasting வாட்டி வழித்தல்.
இறு - தல்: To break முறிதல்; To perish சாதல்; To end முடிவுறுதல்; To moulder கெடுதல்; To grow weak தளர்தல். -த்தல்: To smash உடைத்தல்; To destroy அழித்தல்; To bring down வீழ்த்துதல்; To pay, as tax வரி முதலியன கொடுத்தல்; To throw எறிதல்; To answer விடை கூறுதல்; To strain வடித்தல்; To stay தங்குதல்; To pierce through, as arrow அம்பு முதலியன தைத்தல்; To stop நிறுத்துதல்.
இறுகு-தல்: To become firm உறுதியாதல்; To be fixed நிலைபெறுதல்; To be dense செருங்குதல்; To swoon மூர்ச்சித்தல்.
இறுங்கு: Great millet சோளம்.
இறுதி: Termination முடிவு; Limit வரையறை.
இறுப்பு: Tax வரி.
இறும்பு: Thicket குறுங்காடு; Worm புழு.
இறும்பூது: Amazement அதிசயம்.
இறுமா-த்தல்: To be elated பெருமை பாராட்டுதல்; To be conceited கருவமடைதல்.
இறுவரை: Mountain slope மலைச்சாரல்; Foot of mountain அடிவாரம்.
இறை: Height உயரம்; God கடவுள்; King அரசன்; Justice நடுவு நிலைமை; Great person உயர்ந்தோன்; Elder brother தமையன்; Husband கணவன்; Eaves வீட்டு இறப்பு; Death சாவு; Halting தங்கல்; Seat ஆசனம்; Duty கடமை; Land tax நிலவரி; Answer விடை; Lines inside finger joints விரலிரேகை; A little சிறிது; Forearm முன்கை; Arm கை; Joints of body உடல் உறுப்பின் மூட்டுவாய்; Corner மூலை; Sheath of sword வாளின் உறை; Crowd கூட்டம். -தல்: To bow வணங்குதல்; To scatter சிதறிப் போதல். - த்தல்: To bale out water நீர் இறைத்தல்; To fill நிறைத்தல்.
இறைகூடு-தல்: To rule over அரசாளுதல்.
இறைகூர்-தல்: To dwell தங்குதல்.
இறைஞ்சு-தல்: To hang low தாழ்தல்; To prostrate வணங்குதல்.
இறைமை: Kingly superiority தலைமை; Government அரசாட்சி; Divinity தெய்வத்தன்மை.
இறைவை: Baling basket இறைகூடை; Ladder ஏணி.
இன்கண்: Delight இன்பம்; Compassion கண்ணோட்டம்.
இன்பம் - இன்பு - இன்புறவு: Joy மகிழ்ச்சி; Sexual love காமம்; Marriage கலியாணம்.
இன்மை: Negation of existence இல்லாமை; Poverty வறுமை.
இன்று: Today இந்நாள்; Without இல்லாமல்.
இன்னணம்: Thus இவ்வாறு.
இன்னர்: Portent உற்பாதம்.
இன்னல்: Affliction துன்பம்.
இன்னாங்கு: Evil தீமை; Suffering துன்பம்; Harsh words கடுஞ்சொல்.
இன்னாது: That which causes misery தீங்கு தருவது; Pain துன்பம்.
இன்னான்: Tormentor துன்பம் செய்பவன்; Person of such character இத்தன்மையன்.
இன்னே: Now இப்பொழுதே; Here இவ்விடத்தே; Thus இவ்விதமாகவே.
இனம்: Class வருக்கம்; Race குலம்; Society சேர்க்கை; Herd நிரை; Equality ஒப்பு.
இனன்: Sun சூரியன்.
இனி: Now இப்பொழுது.
இனிது: That which is sweet இன்பம் தருவது.
இனிப்பு: Sweetness தித்திப்பு; Pleasure மகிழ்ச்சி.
இனை-தல்: To grieve வருந்துதல்; To be afraid அஞ்சுதல். - த்தல்: To destroy கெடுத்தல்.

## ஈ

ஈ-தல்: To give கொடுத்தல்; To bring forth ஈனுதல்.
ஈகை: Gift கொடை; Gold பொன்; A bird காடை.
ஈங்கண்: This place இவ்விடம்.

ஈங்கு: Here இவ்விடம்; In this manner இப்படி.
ஈங்கை: A plant இண்டஞ் செடி.
ஈச்சோப்பி: Whisk for flies ஈயோட்டி.
ஈசல்: Winged white ant சிறகு முளைத்த கறையான்.
ஈசன்: Supreme Being இறைவன்; Siva சிவன்; Lord தலைவன்.
ஈசான்ம்-ஈசானியம்: The N. E. quarter வடகிழ்த்திசை.
ஈட்டம்: Earning சம்பாதிக்கை; Throng கூட்டம்; Abundance மிகுதி; Strength வலிமை.
ஈட்டி: Lance குந்தம்.
ஈடகம்: That which is charming மனத்தைக் கவர்வது.
ஈடணை: Attachment ஆசை.
ஈடு: Applying இடுகை; Handing over பிறர்பால் ஒப்பிக்கை; Fitness தகுதி; Equal ஒப்பு; Pledge அடைமானம்; Bulkiness பருமை; Power வலிமை; Condition நிலைமை; Affliction மனவருத்தம்; Content உள்ளீடு; Means உபாயம்; Coat of mail கவசம்; Proper subject ஏற்ற பொருள்.
ஈடுகொள்ளு-தல்: To soften, as heart மனம் கனிதல்.
ஈடுபடு-தல்: To be absorbed மனம் அழுந்துதல்; To be oppressed துன்பப்படுதல்; To become weak வலி அழிதல்; To be ensnared அகப்படுதல்.
ஈடேறு-தல்: To be liberated from worldly life உய்வடைதல்.
ஈண்டு: Here இவ்விடத்தில்; In present birth இம்மையில்; Now இப்பொழுது. -தல்: To be close together செறிதல்; To abound மிகுதல்; To speed விரைந்து செல்லுதல்; To dig out தோண்டுதல்.
ஈதி: Scourge to country நாட்டுக்கு வரும் கேடுகள்.
ஈந்து: Date பேரீச்சமரம்.
ஈமம்: Burning ground சுடுகாடு; Funeral pyre பிணம் சுடுதற்கான விறகடுக்கு.
ஈயன்மூதாய்: Cochineal insect இந்திரகோபம்.
ஈர்: Rib of palm leaf ஈர்க்கு; Moisture ஈரம்; Freshness பசுமை; Smoothness வழுவழுப்பு; Sweetness இனிமை. -தல்: To split பிளத்தல்; To saw அறுத்தல். -த்தல்: To drag இழுத்தல்; To excoriate உரித்தல்; To draw எழுதுதல்.
ஈர்க்கு: Rib of palm leaf ஓலை நரம்பு; Feather of arrow அம்பின் இறகு.
ஈர்ங்கட்டு: Clothing suitable for cold weather குளிர் காலத்திற் குரிய உடை.
ஈர்மை: Subtlety நுண்மை; Distress வருத்தம்.
ஈராணி: Bathing costume of women புனலாடும்போது மகளிர் அணியும் உடை.
ஈரப்பாடு: Tenderness of heart மனநெகிழ்ச்சி.
ஈரம்: Dampness நீர்ப்பற்று; Grace தயை.
ஈரி: Affectionate woman மனக்கனிவுள்ளவள். -த்தல்: To be cool as breeze குளிர்தல்.
ஈருள்: Internal organ in body as liver or spleen ஈரல்.
ஈவு: Bestowing கொடை; Distribution பங்கிடுகை; Disappearance ஒழிகை.
ஈற்றம் - ஈற்று: Giving birth ஈனுகை.
ஈற்றேறு-தல்: Grain maturing on stalk பயிர்க்கரு முதிர்தல்.
ஈறு: End முடிவு; Boundary எல்லை.
ஈன்: This place இவ்விடம்; This world இவ்வுலகம். - தல் (ஈனுதல்): To bear கருவுயிர்த்தல்; To produce உண்டாக்குதல்.
ஈனம்: Meanness இழிவு; Deficiency குறைபாடு.

## உ

உக்கம்: Waist இடை; Severity உக்கிரம்; Circular fan ஆலவட்டம்; Head தலை.
உக்கிரம்: Fierceness கொடுமை; Wrath கோபம்.
உக்கு-தல்: To rot மட்கிப்போதல்.
உகப்பு: Height உயர்ச்சி; Pleasure மகிழ்ச்சி; Happy resort விரும்பி வசிக்கும் இடம்.
உகம்: Age of world ஊழி; Earth பூமி.
உகளு-தல்: To billow தாவுதல்.
உகவை: Joy மகிழ்ச்சி; Favour அநுகூலம்.
உகள்-தல் (உகளுதல்): To frisk தாவுதல்; To run about ஓடித்திரிதல்; To slip down நழுவி விழுதல்; To turn upside down பிறழ்தல்.
உகளம்: Pair இணை.
உகிர்: Nail நகம்.
உகு-தல்: To be shed உதிர்தல்; To be strewed சிதறுதல்; To be spilled சிந்துதல்; To trickle gently சாத்தல்; To pass away கழிதல்; To die சாதல்; To melt கரைதல்; To set அஸ்தமித்தல்; To fly பறத்தல்; To be agitated நிலைகுலைதல்.

உகை-தல்: To move, as boat செல்லுதல். -த்தல்: To stir up, as dust எழுப்புதல்; To set, as gem பதித்தல்; To rise எழுதல்; To leap உயர எழும்புதல்; To set in motion செலுத்துதல்.

உங்கண் - உங்கு - உங்ஙன்: Yonder உவ்விடம்.

உச்சரி-த்தல்: To pronounce எழுத்துக்களை ஒலித்தல்.

உச்சாயம்: Stateliness உயர்வு.

உச்சி: Zenith ஆகாய முகடு; Midday நடுப்பகல்; Crown of head உச்சந்தலை; Head தலை; Summit சிகரம்; Limit எல்லை.

உச்சித்திலகம்: Kind of shrub பூஞ்செடி வகை.

உச்சியார்: Celestial beings தேவர்.

உசவு: Lubricator composed of charcoal and oil வண்டி மை. - தல்: To ponder ஆலோசித்தல்.

உசாக்கையர்: Counsellors ஆலோசனை கூறுவோர்.

உசாத்துணை: Good friend உற்ற துணை.

உசாவு-தல்: To hear செவியுறுதல்; To enquire வினவுதல்.

உசிப்பி-த்தல்: To unite சேர்த்தல்.

உசில் - உசிலம்: Kind of tree சிக்கிரி மரம்.

உசீரம்: Cuscus root இலாமிச்சைவேர்.

உசு: Wood worm உளு.

உசும்பு-தல்: To rant அதட்டுதல்.

உஞற்று-தல்: To attempt முயலுதல்; To do செய்தல்; To urge தூண்டுதல்.

உட்கார்: Foes பகைவர்.

உட்கிடை: Hamlet பெருங் கிராமத்துக்கு உள்ளடங்கிய சிறு கிராமம்.

உட்கு: Fear அச்சம்; Shame நாணம்; Strength வலிமை; Dignity மதிப்பு.

உட்சாத்து: Inner garment worn round waist அரைக்கச்சு.

உட்டை: Seeds used in Indian indoor games விளையாட்டுக் காய்.

உட்போய்: Hollow, unsubstantial thing உள்ளீடற்ற பொருள்.

உடக்கு: Body உடல். -தல்: To dart or shoot பிரயோகித்தல்; To be fitted as arrow நாணிற் பூட்டுதல்.

உடங்கு: Nearness பக்கம்.

உடம்பாடு - உடன்பாடு: Concord ஒற்றுமை; consent சம்மதம்.

உடம்பிடி: Spear வேல்.

உடல்: Body உடம்பு; Consonant மெய்யெழுத்து; Means சாதனம். - தல் (உடலுதல்): To be enraged கோபம் கொள்ளுதல்; To wrangle மாறுபடுதல்; To pine ஏங்குதல்.

உடற்கரி-த்தல்: To pat one's own shoulder as in challenging தோள் தட்டுதல்.

உடற்று - தல்: To torment வருத்துதல்; To provoke கோப மூட்டுதல்; To push on vigorously மூண்டு நடத்துதல்; To discharge briskly பிரயோகித்தல்; To spoil கெடுத்தல்.

உடன்வயிறு: Those born of same mother உடன் பிறந்தவர்.

உடனே: Immediately தாமதம் இன்றி; Simultaneously ஒருசேர; Entirely முழுக்க.

உடு: Arrow அம்பு; Point where arrow is pressed against bow string அம்பை நாணில் ஏற்றும் இடம்; Feather of arrow அம்பின் இறகு; Star நட்சத்திரம். - த்தல்: To surround சூழ்தல்.

உடுக்கை: Clothing உடை; Kind of drum பறை வகை.

உடும்பு: Big lizard ஒரு பிராணி.

உடுவம்: Shaft of arrow அம்பின் அடிப்பாகம்.

உடை-தல்: To be routed தோற்று ஓடுதல்; To die சாதல். - த்தல்: To ruin அழித்தல்; To trouble வருத்துதல்.

உடைமணி: Waist ornamant of children குழந்தைகளின் அரை அணி; Women's girdle ஒட்டியாணம்.

உடைமை: Property சொத்து; Wealth செல்வம்.

உடையவர் - உடையார்: Lord சுவாமி; The rich செல்வர்.

உண் - தல் (உண்ணுதல்): To eat or drink அருந்துதல்; To swallow விழுங்குதல்; To enjoy அநுபவித்தல்; To draw in உட்கொள்ளுதல்; To be fitted பொருந்துதல்; To harmonise இசைவாதல்.

உண்டா-தல்: To become rich செல்வச் செழிப்பாதல்; To be permanent நிலையாதல்.

உண்டாட்டம் - உண்டாட்டு: Festivity விளையாட்டு; Revelry கள்ளுண்டு மகிழ்கை.

உண்டி: Food உணவு; Experience நுகர்ச்சி.

உண்டிகை: Huge gathering பெருங் கூட்டம்.

உண்டை: Globe திரண்ட வடிவுள்ளது; Ball of rice கவளம்; Dice சூதாடு கருவி; Battle array படைவகுப்பு; Collection கூட்டம்; Woof குறுக்கிழை.

**உண்ணாழிகை**: Innermost sanctuary of temple கர்ப்பக்கிருகம்.

**உண்மை**: Existence உள்ளது; Destiny ஊழ்.

**உணக்கம்** - உணக்கு: Withering வாட்டம்.

**உணக்கு**-தல்: To cause to dry உலர்த்துதல்; To ruin கெடுத்தல்.

**உணங்கல்**: Dried grain உலர்த்திய தானியம்; Dried food stuff வற்றல்; Cooked food உணவு; Withered flower உலர்ந்த பூ.

**உணர்**-தல்: To be conscious அறிதல்; To examine ஆராய்தல்; To experience அநுபவித்தல்; To realize பாவித்தல்; To wake from sleep துயிலெழுதல்; To recover from languor அயர்வு நீங்குதல்; To become reconciled ஊடல் நீங்குதல்.

**உணர்ச்சி**: Mind மனம்.

**உணவு** - **உணா**: Food ஆகாரம்.

**உத்தண்டன்**: Cruel person உக்கிர முள்ளவன்.

**உத்தமம்**: That which is pre-eminent எவற்றுள்ளும் சிறந்தது.

**உத்தரம்**: Reply மறுமொழி; That which is superior மேம்பட்டது; Beam in building விட்டம்; North வடக்கு.

**உத்தரி**: Horse குதிரை. -த்தல்: To reply மறுமொழி கூறுதல்; To resist எதிர்த்து நிற்றல்; To raise எடுத்து நிறுத்துதல்; To annoy இமிசித்தல்.

**உத்தரிகம்**-**உத்தரியம்** - **உத்தரீயம்**: Upper garment மேலாடை.

**உத்தி**: Woman's head ornament பெண்கள் தலை அணி; Spots on hood of cobra பாம்பின் படப்பொறி; Union சேர்க்கை.

**உத்தியோகம்**: Effort முயற்சி.

**உத்து**-தல்: To discard கழித்தல்.

**உத்துங்கம்**: Height உயர்ச்சி; That which is superior உயர்ந்தது.

**உதகம்**: Water நீர்.

**உதண்** - **உதணம்**: Bud-shaped arrow-head மொட்டம்பு.

**உததி**: Sea கடல்.

**உதப்பி**: Undigested food சீரணியாத இரை.

**உதயம்**: Appearance தோற்றம்.

**உதயன்**: Sun சூரியன்.

**உதரம்**: Belly வயிறு.

**உதவடு**-த்தல்: To favour உபகாரம் செய்தல்.

**உதவு**-தல்: To give கொடுத்தல்; To help துணை செய்தல்; To withstand தடுத்து நிற்றல்; To report சொல்லுதல்; To be possible கூடியதாதல்.

**உதள்**: Ram ஆட்டுக்கடா; Kind of tree மரவகை.

**உதாசினம்**: Contempt அவமதிப்பு.

**உதாசீனம்**: Neutrality நொதுமல்.

**உதாரதை** - **உதாரம்**: Liberality கொடை.

**உதி**: Kind of tree ஒதிய மரம்; Learning வித்தை.

**உதிர்**: Crumble துகள்.

**உதிரம்**: Blood இரத்தம்.

**உதிரல்**: Fallen flowers உதிர்ந்த பூ.

**உதிரி**: That which falls off உதிர்ந்தது.

**உது**: That which is between the near and the more remote தூரத்துக்கும் சமீபத்துக்கும் மத்திமமானதைக் குறிக்கும் ஒரு சுட்டுப் பெயர்.

**உதை**-த்தல்: To discharge as arrow செலுத்துதல்.

**உதைப்பளவு**: Moment கைந்நொடிப் பொழுது.

**உந்த**: That which is near, person addressed or which is intermediate உங்கே உள்ள.

**உந்தல்**: Thrumming to test strings of yāḻ யாழ் நரம்பு தடவுகை.

**உந்தி**: Navel கொப்பூழ்; Belly வயிறு; River நதி; Ait ஆற்றிடைக் குறை; Sea கடல்; Car wheel தேரின் உருளை; Body of yāḻ யாழ்ப்பத்தல்.

**உந்து** - தல்: To push out தள்ளுதல்; To cast away வீசி எறிதல்; To shoot அம்பு முதலியன பிரயோகித்தல்; To drive செலுத்துதல்; To despatch அனுப்புதல்; To produce வெளிப்படுத்தல்; To thrum, as string of yāḻ யாழ்நரம்பு தெறித்தல்; To turn in lathe மரம் முதலியன கடைதல்; To rise or swell எழும்புதல்; To grow பெருகுதல்; To move along செல்லுதல்; To crawl நகர்தல்; To cease நீங்குதல்; To be united பொருந்துதல்.

**உந்தூழ்**: Large bamboo பெரு மூங்கில்.

**உப்பக்கம்**: Back முதுகு.

**உப்பால்**: Upper or further region மேலிடம்.

**உபகரணம்**: Instrument துணைப்பொருள்.

**உபகாரம்**: Offering காணிக்கை.

**உபசாரம்** - **உபசாரணை**: Civility மரியாதை.

**உபதை**: Test சோதனை.

**உபநிடதம்** - **உபநிடம்**: Upanishads வேதத்தின் ஞானகண்டம்.

**உபமானம்**: Analogy ஒரு பிரமாணம்.

உபமேயம்: That which is compared உவமிக்கப்பட்ட பொருள்.
உபரி: On, upon, above மேல்.
உபரிகை: Upper storey மேல் மாடம்.
உபலம்: Crystal பளிங்கு.
உபவாசம் - உபவசம்: Fast உண்ணா விரதம்.
உபாசகன்: Worshipper உபாசனை செய்வோன்.
உபாத்தியாயர்: Teacher கற்பிப்போன்.
உபாதி: Torment வேதனை; Hindrance இடையூறு.
உபாயம்: Means சாதனம்; Devise சூழ்ச்சி.
உபாலம்பனம்: Reproach நிந்திக்கை.
உபேட்சை: Neglect புறக்கணிப்பு.
உம்பர்: Higher place மேலிடம்; Sky ஆகாயம்; Celestial world தேவலோகம்; Celestials தேவர்; Yonder அப்புறம்; Overhead மேலே.
உம்பல்: Descendant வழித்தோன்றல்; Elephant யானை.
உம்பளம்: Land granted rent - free மானிய நிலம்.
உம்மை: Previous birth முற்பிறப்பு; Life beyond மறுமை.
உமட்டியர்: Fisher-women செம்படவப் பெண்கள்.
உமணன்: Dealer in salt உப்பு வாணிகன்.
உமி - உமிழ்-தல்: To gargle கொப்புளித்தல்; To spit துப்புதல்.
உமைத்தல்: To itch தினவெடுத்தல்.
உய் தல்: To live சீவித்தல்; To be redeemed ஈடேறுதல்; To be relieved நீங்குதல்; To escape தப்புதல். -த்தல்: To guide செலுத்துதல்; To discharge as arrow ஆயுதம்பிரயோகித்தல்; To despatch அனுப்புதல்; To conduct நடத்துதல்; To carry கொண்டுபோதல்; To enjoy அநுபவித்தல்; To give கொடுத்தல்; To make known அறிவித்தல்; To rule ஆளுதல்; To drive away, as darkness நீக்குதல்.
உய்தி: Salvation ஈடேற்றம்; Remedy பரிகாரம்; Ceasing நீங்குகை.
உய்யானம் - உத்தியானம்: Park பூங்கா.
உயங்கு - தல்: To suffer வருந்துதல்; To become emaciated மெலிதல்; To be flexible துவளுதல்.
உயர்-தல்: To rise மேலெழுதல்; To grow வளர்தல்; To be excellent மேன்மையுறுதல்; To vanish நீங்குதல்.
உயர்த்தி: Superiority மேன்மை.
உயர்பு-உயர்வு: Height உயரம்; Greatness மேன்மை.
உயல்-தல் (உயலுதல்): To wave அசைதல்.
உயவல்: Distress வருத்தம்.
உயவு: Means of saving life உயிர்பிழைக்கச் செய்யும் வழி. - தல்: To consult உசாவுதல்; To suffer வருந்துதல்; To lubricate cart - wheel வண்டிச் சக்கரத்துக்கு மை போடுதல்.
உயவை: Kind of creeper கொடிவகை.
உயிர்: Life சீவன்; Soul ஆன்மா; Living being பிராணி; Vowel உயிரெழுத்து; Oxygen பிராண வாயு; Voice குரல்; Measure of time நாழிகையில் ஒரு கூறு. - த்தல்: To revive உயிர் பெற்றெழுதல்; To be active தொழிற்படுதல்; To breathe hard பெருமூச்செறிதல்; To be wafted as fragrance கமழ்தல்; To breathe one's last இறத்தல்; To give birth to ஈனுதல்; To smell மோத்தல்; To declare கூறுதல்; To multiply பெருக்குதல்; To emit வெளிப்படுத்துதல்.
உயிர்க்கழு: Kind of stake கழுவகை.
உயிர் நிலை: Body உடம்பு; Regulation of breath பிராணயாமம்.
உயிர்ப்பு: Breath, respiration சுவாசம்; Wind, air காற்று; Sighing பெரு மூச்சு; Fragrance மணம்; Rest இளைப்பாறுகை; Helplessness செயலறவு; Measure of time கால அளவு.
உயிர்போ-தல்: To lose consciousness அறிவு சோதல்.
உயிர்வை-த்தல்: To die இறத்தல்.
உரகதம்-உரகம்-உரங்கம்: Serpent சர்ப்பம்.
உரசு-தல்: To rub against உராய்தல்.
உரப்பு: Resoluteness மனத்திண்மை; Intimidating shout அதட்டொலி. - தல்: To frighten பயமுறுத்துதல்.
உரம்: Fortitude திடம்; Hardness திண்மை; Chest மார்பு; Manure எரு.
உரலடி: Elephant யானை.
உரவு: Strength வலிமை; Increase மிகுதி; Poison விஷம். -தல்: To be in constant motion உலாவுதல்.
உரற்களம்: Meeting place of wise men அறிஞர் கூடிப் பேசும் இடம்.
உரற்று-உரறு-தல்: To roll, as thunder முழங்குதல்.
உரன்: Support பற்றுக்கோடு; Victory வெற்றி; Knowledge அறிவு.

உரால்: Running, as horse ஓடுகை.

உராவு-தல்: To spread over பரத்தல்; To move இடம் பெயர்தல்; To go செல்லு தல்; To become strong வலியடைதல்.

உரி: Rind தோல்; Bark பட்டை; Half measure அரை நாழி. - தல்: To divest களைதல்.

உரிஞ்சு-தல்: To rub against உராய்தல்; To wear away தேய்தல்; To smear பூசுதல்.

உரிஞு-தல்: To rub உரிஞ்சுதல்.

உரிமை: Right, claim பாத்தியதை; Wife மனைவி; Slave அடிமை; Duty கடமை; Affection பிரியம்.

உரிமை செப்பு-தல்: To negotiate marriage மணம் பேசுதல்.

உரிமைப்பள்ளி: Queen's apartment அந்தப்புரம்.

உரிவை: Skin தோல்.

உரு: Form வடிவு; Beauty அழகு; Body உடல்; Idol விக்கிரகம்; Colour நிறம்; Dice கவறு; Decorative wood-work மரத்திற் செய்த சித்திரவேலை; Repetition அனுசந்தானம்; Music இசைப் பாட்டு; Fear அச்சம்; Deer மான். - த்தல்: To get angry கோபித்தல்; To burn எரிதல்; To ripen முதிர்தல்; To resemble ஒத்தல்; To appear தோன்றுதல்; To take shape உருவெடுத்தல்; To gush சுரத்தல்.

உருக்கம்: Compassion இரக்கம்; Love அன்பு.

உருக்கு: Steel எஃகு. - தல்: To melt இளக்குதல்; To soften நெகிழ்த்தல்; To reduce மெலிவாக்குதல்.

உருக்குத்து - தல்: To cast in mould வார்த்து வடிவம் செய்தல்.

உருக்குருக்கு: Variety of camphor கர்ப்பூரவகை.

உருங்கு - தல்: To eat உண்ணுதல்.

உருசி: Taste சுவை. - த்தல்: To experience அனுபவித்தல்.

உருட்டு: Wheel சக்கரம்; Roundness திரட்சி. - தல்: To roll உருளச் செய்தல்; To form as balls உருண்டையாகச் செய்தல்; To afflict வருத்துதல்; To play upon stringed musical instrument with fingers இசை நரம்பை வருடுதல்.

உருடை: Cart வண்டி.

உருப்பு: Heat வெப்பம்; Anger சினம்; Cruelty கொடுமை.

உருபு: Form வடிவம்; Colour நிறம்.

உருமு: Thunder இடி; Fear அச்சம்.

உரும்பு: Ire கடுஞ்சினம்.

உருமம்: Noon நடுப்பகல்.

உருமு-தல்: To growl முறுமுறுத்தல்.

உருவ: Thoroughly நன்றாக.

உருவாணி: Linch-pin அச்சாணி.

உருவி: Earth பூமி; Hero of poem பாட்டுடைத்தலைவன்.

உருவு - தல்: To unsheath உறை கழித்தல்; To pierce through ஊடுருவிச் செல்லுதல்.

உருவெளி - உருவெளித் தோற்றம்: Hallucination போலித் தோற்றம்.

உருள்-உருளி-உருளை: Wheel சக்கரம்; Circle வட்டம்.

உரை: Commentary வியாக்கியானம்; Carat மாற்று; Word சொல்; Fame புகழ். -தல்: To wear away தேய்தல். -த்தல்: To smear பூசுதல்; To polish மெருகிடுதல்.

உரை முடிவு: Judgement தீர்ப்பு.

உரோசனை: Bezoar கோரோசனை.

உரோணி: Throat inflammation தொண்டை நோய் வகை.

உல்கு: Toll, custom சுங்கம்.

உல்லங்கி-த்தல்: To transgress மீறுதல்.

உல-த்தல்: To become diminished குறைதல்; To be ruined அழிதல்; To die சாதல்; To pass கழிதல்; To leave நீங்குதல்; To be complete முடிவு பெறுதல்.

உலக்கை: Pestle குற்றும் கருவி; A weapon ஆயுத வகை.

உலக நூல்: Secular literature இலௌகிக சாஸ்திரம்.

உலக நோன்பிகள்: Householders among Jains or Buddhists பௌத்த ஜைனரில் இல்லறத்தார்.

உலகம்: Earth பூமி; Region நிலப் பகுதி; Great and good people நன்மக்கள்.

உலக அறவி: Charitable institution தருமசாலை.

உலகுரை: Tradition ஐதிகம்.

உலங்கு: Mosquito கொசு; Round stone உருண்டைக் கல்.

உலண்டு: Caseworm கோற்புழு; Kind of silk பட்டு வகை.

உலப்பு: Deficiency குறைவு; Limit அளவு; Assistance உதவுகை.

உலம்: Roundness உருட்சி; Round stone உருண்டைக் கல்.

உலம்பு-தல்: To cry out பேரொலி செய்தல்; To prate அலப்புதல்.

உலம்வா-தல் (உலம்வருதல்)-உலமரு-தல்: To be confused திகைத்தல்.

உலர்-தல்: To dry காய்தல்; To fade வாடுதல்.

உலவாக்கிழி: Inexhaustible quantity of gold tied up in cloth எடுக்கக் குறைபடாத பொன்முடிப்பு.

உலவை: Branch of tree மரக்கொம்பு; Horn, tusk விலங்கின் கொம்பு; Wind காற்று.

உலறு-தல்: To dry up வற்றுதல்; To be worn out, as clothes சிதைதல்; To become shaggy பொலிவழிதல்; To cause distress வருத்துதல்; To babble குழறுதல்.

உலா: Prapantam பிரபந்த வகை.

உலாப்புறு-த்தல்: To destroy அழித்தல்.

உலாவு - உலவு - உலாத்து - தல்: To take jaunt or stroll சஞ்சரித்தல்; To go in procession பவனி வருதல்; To move இயங்குதல்; To spread பரவுதல்; To surround சூழ்தல்.

உலுக்கு-தல்: To shake குலுக்குதல்.

உலுங்கு-தல்: To make jingling noise கணீரென்று ஒலித்தல்.

உலுத்தன்: Miser உலோபி.

உலுப்பை: Offering கையுறை.

உலூகலம்: Wooden mortar உரல்.

உலை: Furnace கொல்லன் உலை; Pot of water set over fire for preparing food சமைத்தற்காகக் கொதிக்கவைக்கும் நீர்; Excitement நடுக்கம்.-தல்: To be disordered நிலைகுலைதல்; To be dispersed கலைந்து போதல்; To wander about அலைதல். -த்தல்: To ruin கெடுத்தல்.

உலைவு: Poverty வறுமை; Languor ஊக்கக் குறைவு.

உலோகாயதம்: Materialism சார்வாக மதம்.

உலோசனம்: Eye கண்.

உலோபம்: Miserliness கஞ்சத்தனம்; Deficiency குறைவு.

உவ்-உவை: They, those things, that are not far off உங்குள்ளவை.

உவ்வாதம்: Austerity தவக்கோட்பாடு.

உவ-த்தல்: To be delighted மகிழ்தல்; To be pleased விரும்புதல்.

உவகை - உவப்பு: Joy மகிழ்ச்சி; Love அன்பு; Desire விருப்பம்.

உவச்சு: Kind of drum பறை வகை.

உவட்டு: Overflowing பெருக்கு. - தல்: To loathe வெறுப்புறுதல்; To satiate தெவிட்டுதல்; To increase மிகுதல்.

உவண்: Upper place மேலிடம்.

உவணம்: Kind of kite கருடன்.

உவணை: Celestial region தேவலோகம்.

உவமன்: Dumb person ஊமை; Comparison உவமை.

உவமை: Resemblance ஒப்பு.

உவர்: Saltishness உப்புச் சுவை; Salt உப்பு; Fuller's earth உவர்மண்; Sea கடல்; Pleasantness இனிமை.

உவர்க்கம்: Seashore கடற்கரை.

உவராகம்: Eclipse கிரகணம்.

உவரி: Sea கடல்.

உவல்-உவலை: Twigs and sprays தழை; Dried leaves சருகு; Meanness இழிவு.

உவவு: Gladness உவப்பு; Fullmoon பௌர்ணிமை; Newmoon அமாவாசை.

உவள்: She, who is yonder ஊங்கே நிற்பவள். - தல் (உவளுதல்): To quiver துவளுதல்; To quake நடுங்குதல்; To spread பரத்தல்.

உவளகம்: Zenana அந்தப்புரம்; Prison சிறைச்சாலை; Portion ஒரு பக்கம்; Trench அகழி.

உவளு-தல்: To gush சுரத்தல்.

உவன்: He who is yonder உங்கே நிற்பவன்.

உவனியம்: Unguent applied to wound or sore தலைவைத்துக் கட்டும் மருந்து.

உவனி-த்தல்: To attempt to shoot எய்யத் தொடங்குதல்.

உவனியம்: Thread wearing ceremony உபநயனம்.

உவா: Youthfulness இளமை; Elephant யானை.

உவாத்தி - உவாத்திகன் - உவாத்தியன் - உவாத்து: Teacher ஆசிரியன்.

உவாதி: Limit எல்லை.

உவாவு-தல்: To fill நிறைதல்.

உவி-த்தல்: To boil அவித்தல்.

உவியல்: Boiled dish சமைத்த கறி.

உழ-த்தல்: To suffer வருந்துதல்; To practise பழகுதல்; To conquer வெல்லுதல்.

உழக்கு: Quarter measure கால்படி; Dice box கவறிட்டு உருட்டும் உழக்கு.-தல்: To stir கலக்குதல்; To trample down மிதித்தல்; To ravage கொன்று திரிதல்; To play விளையாடுதல்.

உழக்கோல்: Ox goad தாற்றுக்கோல்.

உழப்பு: Suffering வருத்தம்; Mental disquiet மனச் சஞ்சலம்; Practice

பழக்கம். - தல்: To delay காலம் கடத்துதல்.

உழல் - தல் (உழலுதல்): To oscillate அசைதல்.

உழலை: Cross bar கணைய மரம்; Heat வெப்பம்.

உழவாரம்: Hoe புற் செதுக்கும் கருவி.

உழவு: Bodily exertion உடலுழைப்பு; Agriculture வேளாண்மை.

உழவுசால்: Furrow படைச்சால்.

உழறு-தல்: To move about சஞ்சரித்தல்; To mix with அணைதல்; To be disturbed கலங்குதல்; To show oneself உருக்காட்டுதல்.

உழி: Place இடம். - தல்: To wander அலைதல்.

உழிஞ்சில்: Kind of tree வாகை மரம்.

உழிஞை: Kind of creeper கொற்றான்.

உழிதா-தல் (உழிதருதல்): To wander about அலைதல்.

உழு-தல்: To dig up நிலத்தைக் கிளைத்தல்; To arrange or adjust as hair மயிரைக் கோதுதல்.

உழுவல்: Deep love ஆழ்ந்த அன்பு.

உழுவை: Tiger புலி.

உழை: Place இடம்; Deer மான்; Flower petal பூவிதழ்; Proximity பக்கம். - த்தல்: To labour பிரயாசப்படுதல்; To be afflicted வருந்துதல்.

உள் - உள்ளான் - உள்ளல்: Kind of bird பறவை வகை.

உள்கு-தல்: To think நினைதல்.

உள்படு-தல்: To take to willingly மனமொப்பி நடத்தல்; To know அறிதல்.

உள்வரி: Disguise மாறுவேடம்; Tax வரி வகை.

உள்வீழ்-தல்: To decrease குறைதல்.

உள்ளலார்: Enemies பகைவர்.

உள்ளாலை: Inside உட்பக்கம்.

உள்ளாளம்: Mode of singing இசை வகை.

உள்ளீடு: That which is within சத்து; Inner meaning உட்கருத்து.

உள்ளு-தல்: To think கருதுதல்; To investigate ஆராய்தல்; To esteem நன்கு மதித்தல்; To recollect நினைத்தல்.

உள்ளுடை-தல்: To be compleltly destroyed முழுதுஞ் சிதைதல்.

உள்ளுறு-த்தல்: To consider கருதுதல்.

உள்ளோர்ற்று-தல்: To discern உய்த்துணர்தல்.

உளகன்: One who is subjected to உள்ளானவன்.

உளது: Stem of yāḻ யாழின் தண்டு.

உளப்படு-தல்: To be included உள்ளடங்குதல்; To be fitting உரியதாதல். - த்தல்: To include உடன் சேர்த்தல்.

உளப்பாடு: Real state உண்மை நிலை; Consent சம்மதம்; Intention எண்ணம்; Sorrow துயர்.

உளப்பு: Trembling நடுக்கம்.

உளம்: Mind மனம்; Breast மார்பு; Inside உட்பக்கம்; Soul ஆன்மா.

உளம்பு-தல்: To beat up, as game அலைத்தல்; To howl கத்துதல்.

உளமை: Truth உண்மை.

உளர்-தல்: To smooth out கோதுதல்; To shake அசைத்தல்; To scatter சிதறுதல்; To thrum, as instrument யாழ் முதலியன வாசித்தல்; To stir up கலக்குதல்; To delay தாமதித்தல்; To move அசைதல்.

உளவு: Secrecy இரகசியம்; Spying வேவு; Means உபாயம்; Real nature உள்ள தன்மை.

உளித்தலைக்கோல்: Crowbar கடப்பாரை.

உளியம்: Bear கரடி.

உளு: Kind of worm புழு வகை.

உளுக்கா-த்தல்: To sit down இருத்தல்.

உளுக்கு-தல்: To writhe நெளிதல்.

உளை: Mane பிடரி மயிர்; Man's hair ஆண் மயிர்; Head தலை; Hair plume on horse's head குதிரையின் தலையணிவகை; Mire சேறு; Weeping அழுகை. - தல்: To be in distress மனம் வருந்துதல்; To perish அழிதல்; To be vanquished தோற்றல்; To scatter சிதறுதல்; To howl ஊளையிடுதல். -த்தல்: To dislike வெறுத்தல்.

உற்கட்டிதம்: Posture of sitting இருக்கைவகை.

உற்கடம்: Severity கடுமை.

உற்கம்: Meteor எரி நட்சத்திரம்.

உற்கை: Firebrand கொள்ளிக்கட்டை; Meteor எரி நட்சத்திரம்.

உற்பவம்: Birth பிறப்பு.

உற்பனம்: That which is born தோன்றியது; Omen நிமித்தம்; Knowledge ஞானம்.

உற்பாதம்: Portent துர்க்குறி.

உற்றறி-தல்: To feel by touch தொட்டறிதல்.

உற்றார்: Relatives சுற்றத்தார்; Those who excel மிக்கவர்.

உற: Near கிட்ட.-த்தல்: To nip off கிள்ளி யெடுத்தல்; To split with force பிளத்தல்; To be very small சிறிதாதல்; To be close செறிதல்.

உறக்கம் - உறக்கு: Sleep நித்திரை.

உறப்பு: Denseness செறிவு; Cleavage பிளப்பு.

உறல்: Approach அடைகை; Tactile sense பரிசம்; Relationship உறவு.

உறவி: Ant எறும்பு.

உறவு: Entering upon உறுகை; Friendship நட்பு; Desire விருப்பம்; Relationship சுற்றம்.

உறழ்-தல்: To change திரிதல்; To be contrasted எதிராதல்; To resemble ஒத்தல்; To multiply பெருக்குதல்.

உறழ்ச்சி: Rivalry மாறுபாடு.

உறதவன்: One who is neutral அயலான்.

உறிக்கா: Balancing pole for carrying burdens இரு பக்கத்திலும் உறி தொங்கும் காவடி.

உறு: Much மிக்க.-தல்: To happen சம்பவித்தல்; To be useful நன்மையாதல்; To be lasting உறுதியாதல்; To suffer வருந்துதல்; To pass in one's mind மனத்தில் நிகழ்தல்; To be numerous மிகுதல்; To be spoiled பழுதுபடுதல்; To be attached சார்ந்திருத்தல்; To join with பொருந்துதல்; To touch தொடுதல்; To reach அடைதல்; To love அன்பு கொள்ளுதல்; To resemble ஒத்தல்; To begin தொடங்குதல்; To experience அனுபவித்தல்; To think நினைத்தல்.

உறுக்கு: Threatening அதட்டுகை.-தல்: To address with anger கோபித்து மொழிதல்; To punish தண்டித்தல்.

உறுகண்: Distress வருத்தம்.

உறுகோள்: Happening சம்பவம்.

உறுத்தா-தல் (உறுத்தருதல்): To constrict நெருக்குதல்.

உறுத்து-தல்: To originate உண்டாக்குதல்; To put up அமைத்தல்; To secure அடைவித்தல்; To smart அழுத்துதல்; To spread out விரித்தல்; To huff with anger கோபித்துச் சீறுதல்.

உறுதி: Power வல்லமை; Certainty நிச்சயம்; Aims of mankind புருஷார்த்தம்; Positive declaration திட வாக்கு; Suitable action செய்யத்தக்கது; Good நன்மை; Mantram மந்திரம்; Support ஆதாரம்; Profit இலாபம்.

உறுநன்: Follower சேர்ந்தவன்.

உறுப்பறை: Deformed person அங்கவீனன்; Dismembering limbs அங்கச்சேதம்.

உறுப்பு: Limb அவயவம்.

உறு பொருள்: Unclaimed property which one appropriates to himself உடையாரில்லாமையால் ஒருவனுக்குக் கிடைக்கும் பொருள்.

உறுமு-தல்: To murmer angrily முறுமுறுத்தல்.

உறுவர்: Celestials தேவர்.

உறுவல்: Distress துன்பம்.

உறுவன்: Great one மிக்கோன்; Saint முனிவன்; Guest விருந்தினன்; Opponent எதிர்ப்போன்.

உறை: Mnemonic பேரளவைக் குறிக்கும் சிற்றளவுக்குறி; Anything exceedingly small மிகச் சிறியது; Lifetime வாழ்நாள்; Case கூடு; Offering காணிக்கை; Rain மழை; Medicine மருந்து; Gold பொன்.-த்தல்: To reside வசித்தல்; To conduct oneself ஒழுகுதல்; To curdle இறுகுதல்.-த்தல்: To drop துளித்தல்; To fall down உதிர்தல்; To be pungent சுவை உறைத்தல்; To prick உறுத்துதல்; To become firm ஊன்றுதல்; To beat upon மோதுதல்; To increase மிகுதல்; To disgrace அவமானித்தல்; To press அமுக்குதல்; To resemble ஒத்தல்.

உறைப்பன்: Strong man வல்லான்.

உறைப்பு: Opportunity வாய்ப்பு; Severity கொடுமை.

உன்மத்தகம்: Kind of plant ஊமத்தை.

உன்மத்தம் - உன்மாதம்: Madness வெறி.

உன்மதம்: Lasciviousness மிகுந்த காமம்.

உன்மானம்: Weighing நிறுக்கை.

உன்முகம்: Taking favourable attitude அனுகூலமாயிருக்கை.

உன்னம்: Contemplation தியானம்; Kind of tree நிமித்தங் குறிக்கும் ஒரு மரம்.

உன்னி: Horse குதிரை.

உன்னுதல்: To think நினைத்தல்.

உனகன்: Mean person இழிந்தவன்.

## ஊ

ஊ: Meat தசை.

ஊக்கம்: Zeal மனக்கிளர்ச்சி; Effort முயற்சி; Strength வலிமை; Firm conviction உறுதியான எண்ணம்.

ஊக்கு: Zeal ஊக்கம்.-தல்: To shake ஆட்டுதல்; To loosen நெகிழ்த்துதல்; To miss mark தப்புதல்; To encourage உற்சாக மூட்டுதல்; To teach கற்பித்தல்.
ஊகம்: Inference எண்ணி அறிதல்; Discernment யுக்தி; Black monkey கருங் குரங்கு; Kind of grass புல் வகை; Military array படை வகுப்பு.
ஊங்கு: That which is superior மேம் பட்டது; Yonder உவ்விடம்; Before முன்பு.
ஊச்சு-தல்: To absorb உறிஞ்சுதல்.
ஊசல்: Movement அசைவு; Swing ஊஞ்சல்; Prapantam பிரபந்த வகை; That which is fetid பதனழிந்தது.
ஊசி: Iron style எழுத்தாணி; Spike கழு; Weapon ஆயுத வகை; North வடக்கு.
ஊசு-தல்: To cut off in slices சீவுதல்.
ஊட்டம்: Food உணவு.
ஊட்டி: Food உணவு; Adam's apple குரல்வளை.-த்தல்: To harrow தாளியடித் தல்.
ஊட்டு: Feeding உண்பிக்கை; Food உணவு.-தல்: To dye சாயமேற்றுதல்.
ஊட்டுவான்: Cook சமையற்காரன்.
ஊடாடு-தல்: To move about நடுவே திரிதல்; To be familiar கலந்து பழகுதல்.
ஊடு: Middle நடு; Waist இடை.-தல்: To feign displeasure பிணங்குதல்.
ஊடு போக்கு: Tax வரி வகை.
ஊண்: Eating உண்கை; Food உணவு; Experience அநுபவம்.
ஊத்தை: Dirt அழுக்கு.
ஊதம்: Herd of elephants யானைக் கூட்டம்.
ஊதல்: Cold wind குளிர் காற்று; Fullness மிகுதி.
ஊதாரி: Spendthrift வீண் செலவாளி.
ஊதியம்: Profit இலாபம்.
ஊது-தல்: To gnaw through துளைத்தல்; To feed on நுகர்தல்; To hum ரீங்காரம் செய்தல்; To swell வீங்குதல்.
ஊதை: Cold wind வாடைக் காற்று.
ஊமம்: Dumbness ஊமைத்தன்மை.
ஊமன்: Big owl கோட்டான்.
ஊமை: Kind of drum பறை வகை.
ஊமை எழுத்து: Ōm பிரணவம்.
ஊர்: Riding சவாரி செய்கை; Village கிராமம்; Halo பரிவேடம்.-தல்: To creep நகர்தல்; To spread பரவுதல்; To flow வடிதல்.-த்தல்: To suck உறிஞ்சுதல்.
ஊர்கோள்: Halo round sun or moon பரிவேடம்; To shine fully குறை வின்றி ஒளிவீசுதல்.

ஊர்தி: Vehicle வாகனம்.
ஊர்மூகம்: Battle-field போர்க்களம்.
ஊரல்: Water-bird குளுவைப் பறவை.
ஊரன்: Chief of agricultural tract மருத நிலத் தலைவன்.
ஊராண்மை: Generosity உபகாரியாந் தன்மை.
ஊரி: Parasite plant புல்லுருவி.
ஊரு: Thigh தொடை.
ஊருணி: Public drinking water tank ஊரார் உண்ணும் நீர்நிலை.
ஊழ்: That which is old பழமையானது; Karma பழவினை; Rule முறைமை; Time தடவை; Maturity முதிர்வு; End முடிவு; Blossoming மலர்ச்சி; Sun சூரியன்.
ஊழ்கு-தல்: To meditate தியானித்தல்.
ஊழி: Time of universal deluge பிரளய காலம்; Aeon யுகம்; Life time வாழ்நாள்; World உலகம்; Fate விதி; Regular order முறைமை.
ஊழ்று-தல்: To scoop out குடைதல்.
ஊற்றம்: Crutch பற்றுக்கோடு; Strength வலிமை; Ardour மனக்கிளர்ச்சி; Training பழக்கம்; Hindrance இடை யூறு; Sensation of touch பரிச உணர்ச்சி.
ஊற்றாணி: Plough-pin கலப்பை உறுப்பில் ஒன்று.
ஊற்று: Gushing forth சுரக்கை; Spring நீரூற்று; Prop பற்றுக்கோடு.-தல்: To pour out வெளியே விடுதல்.
ஊற்றுக்களம்: Common meeting place பலர் கூடும் பொதுவிடம்.
ஊறல்: Spring நீரூற்று; Juice சாறு.
ஊறு: Approaching உறுகை; Sense of touch பரிச உணர்ச்சி; Evil துன்பம்; Murder கொலை; Body உடம்பு; Royal falcon வல்லூறு.
ஊறுகறி: Pickle ஊறுகாய்.
ஊன்: Flesh தசை; Meat மாமிசம்.
ஊன்று-தல்: To be fixed நிலைபெறுதல்; To stop in place சென்று தங்குதல்; To support தாங்குதல்; To decide தீர்மானித் தல்; To press down அமுக்குதல்.
ஊனம்: Defect குறைவு; Fault குற்றம்; Calumny பழி; Evil தீமை.

## எ

எஃகு: Pointedness கூர்மை; Lance வேல்; Sword வாள்; Trident சூலம்; Steel இரும்பு வகை.-தல்: To pull with fingers பன்னுதல்; To search ஆராய்தல்; To melt இளகுதல்.

எஃகுறு-தல்: To be sawn through அறுக்கப்படுதல்.
எக்கம்: Musical instrument இசைக் கருவி வகை; Cymbal தாளம்; Kind of drum பறை வகை.
எக்கர்: Sand hill மணற் குன்று; Haughty persons இறுமாப்புடையவர்.
எக்களித்-தல்: To be overjoyed குதூகலித்தல்.
எக்கி: Syringe நீர் முதலியன வீசுங் கருவி.
எக்கியம் - எச்சம் - எக்ஞம்: Sacrifice யாகம்.
எக்கு-தல்: To rise மேலே செல்லுதல்; To contract உள்ளிழுத்தல்.
எகின்: Swan அன்னம்; Kind of tree மர வகை.
எங்ஙன்-எங்ஙனம்: How எவ்வாறு; Where எவ்விடம்.
எச்சம்: Remainder மிச்சம்; Posterity சந்ததி; Dung of birds, lizards etc. பறவை முதலியவற்றின் மலம்; Aromatic substance வாசனைப் பண்ட வகை; Defect குறைவு; Ellipsis தொக்கு நிற்பது.
எச்சிற்படு-த்தல்: To cause sore புண்படுத்தல்.
எச்சு: Defect குறைவு. - தல்: To worship வணங்குதல்.
எசமானன்: One who performs sacrifice வேள்வித் தலைவன்.
எஞ்சலார்: Strangers புதியவர்.
எஞ்சு-தல்: To remain மிஞ்சுதல்; To diminish குறைதல்; To be spoiled கெடுதல்; To cease ஒழிதல்; To be elliptical தொக்கு நிற்றல்; To transgress கடத்தல்; To refrain செய்யாதொழிதல்.
எட்கசி-எட்கசிவு: Cake பணியார வகை.
எட்டி: Title பட்ட வகை; Kind of tree மர வகை.
எடு-த்தல்: To raise உயர்த்துதல்; To carry சுமத்தல்; To hold up தூக்கிப் பிடித்தல்; To recruit திரட்டுதல்; To utter loudly உரத்துச் சொல்லுதல்; To speak highly மேம்படுத்துரைத்தல்; To select தெரிந்தெடுத்தல்; To produce உண்டாக்குதல்; To build கட்டுதல்; To bring up எடுத்து வளர்த்தல்; To be inflated புடைபருத்தல்; To be high மேல் நோக்கி இருத்தல்; To be associated பொருந்துதல்; To invade படையெடுத்தல்.
எடுத்துக்காட்டு: Illustration உதாரணம்.

எடுப்பு: Superiority ஏற்றம்; Buried treasure புதையல்.-தல்: To rouse from sleep துயிலெழுப்புதல்; To raise sounds from musical instrument இசையெழுப்புதல்; To dispel போக்குதல்.
எடுவு-தல்: To hold up எடுத்தல்.
எடை: Weight நிறை; Rousing from sleep துயிலெழுப்புகை; Increasing மிகுதல்.
எண்: Calculation கணக்கிடுகை; Thought எண்ணம்; Deliberation ஆலோசனை; Knowledge அறிவு; Mind மனம்; Esteem மதிப்பு; Mathematics கணிதம்; Astronomy சோதிடநூல்; Limit வரையறை; Logic தர்க்கம்; Fineness of gold or silver மாற்று; Mantras மந்திரம்; Sesame எள்.
எண்கு: Bear கரடி.
எண்குணத்தான்: God கடவுள்.
எண்ணல்: Intention கருத்து; Deliberation ஆலோசனை.
எண்ணுப்பு: Arrogance இறுமாப்பு.
எண்ணார் - எண்ணலார்: Foes பகைவர்.
எண்பேராயம்: Eight groups of attendants of monarch அரசர்க்குரிய எட்டு வகைக் கூட்டத்தார்.
எண்மை: Easiness சுலபம்; Lowness of rank தாழ்மை.
எத்தனை - எத்துணை: Many பல; How much எவ்வளவு.
எத்தாப்பு: Garment ஆடை.
எத்து: Cheating வஞ்சகம்.
எதி: Ascetic சந்நியாசி.
எதிர்: Return கைம்மாறு; Target இலக்கு; In front முன்; Obstacle முரண்; Rival எதிரிடையானது; Comparison ஒப்பு; Future tense வருங்காலம். - தல்: To appear தோன்றுதல்; To receive பெறுதல்; To give கொடுத்தல்; To rest on பொருந்துதல்; To meet சந்தித்தல்.
எதிர்த்தீர்: Obverse மறுதலை.
எதிர்கொள்-தல் (எதிர்கொள்ளுதல்): To welcome வரவேற்றல்; To accept ஏற்றுக்கொள்ளுதல்.
எதிரெடுத்தல்: To vomit வாந்திபண்ணுதல்.
எதிரேறு: Strength வலிமை.
எதோன் - எதோளி: Where எவ்விடம்.
எந்திர நாழிகை: Machine which throws out water in sprays நீர் வீசுங் கருவி வகை.
எந்திரி-த்தல்: To draw mystical diagram மந்திர சக்கரம் வரைதல்.
எந்திரி: Puppet controller பாவையை ஆட்டுவிப்போன்.

எந்து: How எப்படி; what என்ன.

எந்தை: My father என் தந்தை; My elder brother என் அண்ணன்; My master என் தலைவன்.

எமர்-எமரங்கள்: Our relatives எம்மவர்.

எமி: Solitude தனிமை.

எப்: Arrow அம்பு; Porcupine முள்ளம் பன்றி. -தல்: To grow weary இளைத்தல்; To know அறிதல்.

எய்த: Carefully கவனமாக; Very much நிரம்ப.

எய்து-தல்: To approach அணுகுதல்; To obtain அடைதல்; To revere பணிதல்; To be suitable பொருந்துதல்; To happen சம்பவித்தல்; To be adequate போதிய தாதல்.

எய்யாமை: Ignorance அறியாமை.

எயில்: Fortification மதில்.

எயிறு: Tooth பல்.

எயின்: Hunting tribe வேடச் சாதி.

எரி: Brightness பிரகாசம்; Fire நெருப்பு; Comet வால் நட்சத்திர வகை; Fire drill தீக்கடைகோல்.

எரிகரும்பு: Firewood விறகு.

எரிநகை: A flower வெட்சி மலர்.

எரிமலர்: Kind of flower முருக்கு மலர்; Red lotus செந்தாமரை.

எரிவு: Envy பொறாமை; Anger கோபம்.

எருக்கு: Plant செடி வகை; Harm துன்பம்.-தல்: To harass வருத்துதல்; To cut வெட்டுதல்; To strike அடித்தல்; To destroy அழித்தல்.,

எருத்தம்: Neck கழுத்து.

எருத்தன்: Man who is as strong as bull காளைபோல் வலியவன்.

எருந்து: Oyster shell கிளிஞ்சில்.

எருமன்றம்: Open gathering place for cattle மாடுகள் கூடும் வெளியிடம்.

எருவை: Copper செம்பு; Kind of kite பருந்து வகை; Eagle கழுகு; Kind of reed நாணல் வகை.

எல்: Lustre ஒளி; Sun சூரியன்; Strength வலிமை; Night இரவு.

எல்லரி: Kind of drum பறைவகை; Hand bell கைம்மணி.

எல்லி: Night இரவு; Daytime பகல்; Darkness இருள்.

எல்லிருள்: Darkness preceding dawn விடியற்காலத்து இருள்.

எல்லு-தல்: To become dim ஒளி மங்குதல்.

எல்லை: Boundary வரம்பு; Goal முடிவு; Period தறுவாய்; Place இடம்; Daytime பகல்.

எலுவல்: Man-friend தோழன்.

எலுவை: Lady companion தோழி.

எவ்: Which எவை.

எவ்வது: How எவ்விதம்.

எவ்வம்: Affliction துன்பம்; Lowness இழிவு; Incurability ஒன்றானுந் தீராமை; Self-respect மானம்; Deceitfulness கபடம்; Dislike வெறுப்பு.

எவ்வு-தல்: To cause pain துன்பம் இழைத்தல்; To discharge as arrow செலுத்துதல்.

எவ்வை: Our younger sister எம் தங்கை.

எவண்: Where எவ்விடம்; How எப்படி.

எவன்: What யாது, யாவை; How எவ்வண்ணம்.

எழாநிலை: Stable for elephant யானை கட்டுங் கூடம்.

எழால்: Kind of bird புல்லூறு என்னும் பறவை; Musical notes of yāḻ யாழில் எழும் இன்னிசை; Yāḻ யாழ்; Musical voice குரல் இசை.

எழில்: Beauty அழகு; Bigness பருமை.

எழிலி: Cloud மேகம்.

எழினி: Curtain இடுதிரை; Cover உறை.

எழு: Wooden bolt மரத்தாழ்.-தல்: To rise மேல் எழும்புதல்; To appear தோன்றுதல்; To awake துயிலெழுதல்; To spread பரவுதல்; To begin தொடங்குதல்; To start புறப்படுதல்.

எழுத்தாளன்: Scholar புலவன்.

எழுத்து: Letter அட்சரம்; Grammar இலக்கணம்; Letters கல்வி; Signature கையெழுத்து; Painting, drawing சித்திரம்.

எழுமை: Seven successive births எழு பிறவி.

எழுவாய்: First முதல்.

எழுவு-தல்: To raise எழச்செய்தல்.

எள்கு-தல்: To despise இகழ்தல்; To fear அஞ்சுதல்; To deceive ஏய்த்தல்; To shy கூசுதல்; To suffer வருந்துதல்.

எள்ளு-தல்: To equal ஒப்பாதல்; To disregard இகழ்தல்.

எளி-தல்: To become feeble எளிமையடைதல்.-த்தல்: To disparage தாழ்த்திக் கூறுதல்.

எளிமை: Ease சுலபம்; Meanness தாழ்வு; Weakness வலியின்மை.

எற்பாடு: Afternoon பிற்பகல்; Sunrise காலை.

எற்றம்: Decision மனத்துணிவு.
எற்று-தல்: To strike அடித்தல்; To butt மோதுதல்; To cut வெட்டுதல்; To get rid of நீக்குதல்; To cease முடிவடைதல்; To pity இரங்குதல்; To lift எடுத்தல்.
எற்று நூல்: Carpenter's line for sawing மரமறுக்கப் போடும் நூல்.
எறி: Blowing as wind வீசுகை.-தல்: To throw வீசுதல்; To hack வெட்டுதல்; To pick பறித்தல்; To destroy அழித்தல்; To beat as drum அடித்தல்; To sting கொட்டுதல்; To drive off ஓட்டுதல்; To outvie வெல்லுதல்; To rob கொள்ளையிடுதல்; To shower பொழிதல்; To fasten செறித்தல்; To cause to experience நுகர்வித்தல்; To finger, string of musical instrument தெறித்தல்; To pounce பாய்ந்தெடுத்தல்; To rebuke இடித்துரைத்தல்; To pat தடவுதல்.-த்தல்: To shine ஒளி வீசுதல்; To nail தைத்தல்; To affect உறைத்தல்; To spread பரத்தல்.
எறும்பி: Elephant யானை; Ant எறும்பு.
எறுழ்: Strength வலிமை; Kind of tree மரவகை.
எறுழி: Pig பன்றி.
என்பு: Bone எலும்பு.
என்றவன் - என்று: Sun சூரியன்.
என்றூழ்: Summer கோடைக்காலம்; Sunshine வெயில்; Sun சூரியன்.
என்னது - எனையதும்: Even a little சிறிதும்.
என்னர் - என்னும்: Who யாவர்; Even a little சிறிதும்.
எனை: All எல்லாம்; However much எவ்வளவு.
எனைவர்: Whoever யாவர்.

## ஏ

ஏ: Increase பெருக்கம்; Pile அடுக்கு; Looking upward மேனோக்குகை; Pride இறுமாப்பு; Shooting as arrow எய்யுந்தொழில்; Arrow அம்பு.
ஏக்கம்: Yearning மன வாட்டம்; Fear அச்சம்.
ஏக்கழுத்தம்: Superciliousness தலை யெடுப்பு.
ஏக்கறு-தல்: To languish இளைத்து வருந்துதல்; To stoop ஆசையால் தாழ்தல்; To desire விரும்புதல்.
ஏக்கேறி-தல்: To be frightened அச்சமுறுதல்.
ஏகதேசம்: One side ஒரு சார்; Small degree சிறுபான்மை.
ஏகம்: Unit ஒன்று; That which is unique ஒப்பற்றது; Unity அபேதம்.
ஏகராசி: New moon அமாவாசை.
ஏகவட்டம் -ஏகவடம் -ஏகவல்லி -ஏகாரம்-ஏகவிடுகோடி-ஏகாவலி-ஏகாவல்லி: Necklace of single string ஒற்றைச் சர மாலை.
ஏகாசம்-ஏகாயம்: Upper cloth மேலாடை.
ஏகாந்தம்: Solitude தனிமை; Certainty நிச்சயம்; Sole-aim ஒரே நாட்டம்; That which is fit தகுதியானது.
ஏகு-தல்: To go போதல்.
ஏகோபித்-தல்: To be united ஒன்றுபடுதல்.
ஏங்கு-தல்: To scream ஒலித்தல்; To pine இளைத்தல்; To yearn மனம் வாடுதல்; To fear அஞ்சுதல்.
ஏசு-தல்: To reproach இகழ்தல்; To hurl எறிதல்.
ஏட்சி: Rising of heavenly body உதயம்; Firmness உறுதி.
ஏட்டை: Poverty வறுமை; Pining இளைப்பு.
ஏடமம்: Flower பூ.
ஏடணை: Ardent desire ஆசை.
ஏடன்: Slave தொழும்பன்.
ஏடா: Form of address ஒரு விளிச்சொல்.
ஏடு: Flower மலர்; Book சுவடி; Cream பாலின் ஆடை; Body சரீரம்; Greatness மேன்மை; Blemish குற்றம்.
ஏண்: Limit எல்லை; Strength வலிமை; Firmness திண்மை; Greatness உயர்ச்சி; Haughty word கர்வப் பேச்சு.
ஏணி: Number எண்; Tier அடுக்கு; Limit எல்லை.
ஏணிப்படிகால்: Woman's girdle மேகலை.
ஏணை: Children's hammock துணித் தொட்டில்; Firmness உறுதி நிலை.
ஏத்து: Praise புகழ். -தல்: To bless வாழ்த்துதல்.
ஏதம்: Fault குற்றம்; Calamity கேடு.
ஏதலன் - ஏதிலன்: Foe பகைவன்; Stranger அந்நியன்.
ஏதன்: He who is first cause மூல காரணன்.
ஏதி: Weapon ஆயுதம்.
ஏதிலார்: Prostitutes பரத்தையர்.
ஏது: Fault குற்றம்; Cause காரணம்; Illustration திருஷ்டாந்தம்; Connection சம்பந்தம்.
ஏதும்: Even a little சிறிதும்.

ஏந்தல்: Wide shallow pool தேக்கம்; Height உயர்ச்சி; Great man பெருமையிற் சிறந்தோன்.

ஏந்திரம்: Magic கண்கட்டு வித்தை.

ஏந்திலே: Lance வேல்.

ஏந்திழை: Beautiful ornament அழகிய ஆபரணம்.

ஏந்து-தல்: To rise high ஓங்குதல்; To be eminent சிறத்தல்; To be abundant மிகுதல்.

ஏப்புழை: Loop-hole in fort wall for discharging arrows அம்பு எய்ய அமைந்த மதிலின் துவாரம்.

ஏம்: Pleasure இன்பம்; Perplexity மயக்கம்.

ஏம்பல்: Pleasure களிப்பு; Pain வருத்தம்.

ஏம்பலித்தல்: To long அவாக் கொள்ளுதல்.

ஏமம்: Protection காவல்; Night இரவு; Gold பொன்.

ஏமா-த்தல்: To be protected காக்கப்படுதல்; To desire ஆசைப்படுதல்; To be overjoyed இன்புறுதல்; To be distressed கலக்கமுறுதல்; To feel proud செருக்குறுதல்; To make certain நிச்சயித்தல்.

ஏமாற்றம்: Deceit வஞ்சகம்; Confusion of mind மனக்கலக்கம்.

ஏமுறு-தல்: To be changed in nature தன்மை திரிதல்; To be vexed வருத்தமுறுதல்; To be mad பித்துறுதல்; To be suited பொருத்தமுறுதல்.

ஏய்-தல்: To be suited பொருந்துதல்; To be similar ஒத்தல்; To meet எதிர்ப்படுதல். -த்தல்: To tell seeming truth மெய் போலச் சொல்லுதல்.

ஏர்: Plough கலப்பை; Team of oxen and plough கலப்பையும் இரண்டு மாடும்; Ploughing உழவு; Fine appearance தோற்றப்பொலிவு; Goodness நன்மை. -தல்: To be similar ஒத்தல்.

ஏர்க்களம்: Threshing floor நெற்களம்.

ஏர்மங்கலம்: Prapantam பிரபந்த வகை.

ஏரண்டம்: Kind of bird பறவை வகை.

ஏரணம்: Logic தருக்க நூல்.

ஏல்: Fitness பொருத்தம்; Revival புத்துணர்ச்சி. - தல் (ஏற்றல்): To change மாறுபடுதல்; To awake துயிலெழுதல்; To happen சம்பவித்தல்; To admit ஒப்புக்கொள்ளுதல்; To supplicate இரத்தல்; To undertake மேற்கொள்ளுதல்; To love அன்பு கொள்ளுதல்; To encounter எதிர்த்தல்; To bear சுமத்தல்; To equal ஒத்தல்.

ஏல்வை: Time காலம்.

ஏல: Already முன்னமே; Liberally மிக.

ஏலம்: Hair shampoo மயிர்ச்சாந்து.

ஏலா: Form of familiar address விளிச்சொல் வகை.

ஏவதும்: Each ஒவ்வொன்றும்.

ஏவல்: Recital ஓதுகை; Command ஆணை; Services பணிவிடை.

ஏழில்: Music இசை; Plant செடி வகை.

ஏழை: Ignorance அறியாமை; Woman பெண்.

ஏற்றம்: Praise புகழ்; Excess மிகுதி; Thought நினைவு; Confidence துணிவு; Picottah ஏற்ற மரம்.

ஏற்று-தல்: To pile அடுக்குதல்; To eulogise மேம்படுத்துதல்; To found ஸ்தாபித்தல்; To think நினைத்தல்; To decide துணிதல்; To offer as oblation நிவேதித்தல்; To prove நிரூபித்தல்.

ஏற்றுத் தொழில்: Art of riding சவாரிக் கலை.

ஏற்றை: Male animal ஆண் விலங்கு.

ஏற: More than விட, அதிகமாக; On high உயர; Completely முழுவதும்; In advance முற்பட.

ஏறங்கோள்: Kind of drum பறை வகை.

ஏறடு-தல்: To place over மேல் வைத்தல்; To undertake மேற்கொள்ளுதல்.

ஏற வேணி: Stand கோக்காலி.

ஏறிடு-தல்: To string, as bow நாணேற்றுதல்; To lift up தூக்குதல்.

ஏறு: Height உயரம்; Bull இடபம்; Male animals ஆண் விலங்கு; Throw எறிகை; Thunderbolt இடி; Scar வடு.-தல்: To terminate முற்றுப் பெறுதல்; To cross கடத்தல்.

ஏறு நீர்: Flow tide கடல்நீரின் ஏற்றம்.

ஏறுமாறு: Improper தாறுமாறு; Competing இகலுகை.

ஏன்-ஏனம்: Pig பன்றி.

ஏன்றுகோள்-தல் (ஏன்றுகொள்ளுதல்): To oppose எதிர்த்து நிற்றல்; Supporting ஆதரிக்கை.

ஏனை: The rest பிற.

ஏனுதி: Title ஒரு பட்டம்.

## ஐ

ஐ: Wonder வியப்பு; Beauty அழகு; Slenderness மென்மை; Minuteness நுண்மை; Phlegm கோழை; Master தலைவன்; Father தந்தை.

ஐந்தை: Mustard கடுகு.
ஐம்படை: Five weapons of Viṣṇu விஷ்ணுவின் ஐந்து ஆயுதங்கள்.
ஐம்பால்: Woman's hair மகளிர் கூந்தல்.
ஐம்பெருங் குழு: Five chief officers of king ஐவகை அரசியற்றலைவர்.
ஐய: Weak நொய்ய.
ஐயம்: Doubt சந்தேகம்; Figure of speech ஓர் அணி; Alms பிச்சை.
ஐயர்: Respectable persons பெரியோர்.
ஐயவி: White mustard வெண்சிறு கடுகு; Weight ஒரு நிறை; Upright bar for gate of fort துலா மரம்; Bundle of arrows அம்புகளின் கட்டு.
ஐயவித்துலாம்: Machine set on walls of fort ஒரு மதிற் பொறி.
ஐயன்: Elder brother மூத்தோன்.
ஐயிருவட்டம்: Shield கேடகம்.
ஐராவணம்: State elephant பட்டத்து யானை.
ஐவண்ணம்: Henna மருதோன்றி.
ஐவர்: Pandavas பாண்டவர்.
ஐவனம்: Mountain paddy மலை நெல்.
ஐவாய்மான்: Lion சிங்கம்.

## ஒ

ஒஃகுதல்: To retreat பின்வாங்குதல்.
ஒக்க: Together ஒரு சேர; Equally சமமாக.
ஒக்கடி-த்தல்: To keep time தாளங் கொட்டுதல்; To repair செப்பனிடுதல்.
ஒக்கல்: Relations சுற்றத்தார்.
ஒக்கலி-த்தல்: To shout in joy சந்தோஷத்தால் ஆரவாரித்தல்.
ஒக்கலை: Hip இடுப்பு.
ஒசி-தல்: To shiver நடுங்குதல்; To lean சாய்தல்; To be coy நாணுதல்; To suffer வருந்துதல்.-த்தல்: To break முறித்தல்.
ஒட்ட: Similar போல.
ஒட்டகை: Camel ஒட்டகம்.
ஒட்டல்: Shrinking உள்ளொடுங்குகை.
ஒட்டலன்: Enemy பகைவன்.
ஒட்டியான்: Attendant கையாள்.
ஒட்டு: Tax வரி; Compound தொகை நிலை; Kind of ear-ring கடுக்கன் வகை; Bird-lime புட்படுக்கும் பசை; Connection சார்பு; Oath ஆணை; Comparison ஒப்பு; Bark மரப்பட்டை; Wager பந்தயம்.-தல்: To resolve துணிதல்; To attack தாக்குதல்; To approach கிட்டுதல்; To acquiesce சம்மதித்தல்; To make friends நட்பாக்குதல்; To be suitable பொருந்துதல்; To unite கலத்தல்.
ஒட்பம்: Intelligence அறிவு.
ஒடி-தல்: To break முறிதல்.-த்தல்: To shine ஒளி செய்தல்.
ஒடிவு: Decrease குறைவு; Destruction of universe சங்காரம்; Fault குற்றம்.
ஒடு - ஒடுவை: Kind of tree மர வகை; Festering sore முதுபுண்.
ஒடுக்கம்: Self restraint அடக்கம்; Place of concealment மறைவிடம்; End முடிவு.
ஒடுங்கு-தல்: To be lazy சோம்புதல்.
ஒண்ணு-தல்: To be possibe இயலுதல்.
ஒண்மை: Brilliancy விளக்கம்; Natural beauty இயற்கை யழகு; Knowledge நல்லறிவு.
ஒத்தன்: Some one ஒருவன்.
ஒத்திடம் - ஒற்றடம்: Fomentation வெப்பம்பட ஒற்றுகை.
ஒத்து-தல்: To keep time தாளம் போடுதல்; To strike against தாக்குதல்.
ஒதி: Kind of tree மர வகை.
ஒதுக்கம்: Walk நடை; Abode இருப்பிடம்; Defective note in music அபசுரம்.
ஒதுக்கு: Living as tenant ஒட்டுக் குடி இருக்கை; Refuge புகலிடம்; Gait நடை வகை.
ஒதுங்கு-தல்: To retreat பின்னடைதல்.
ஒப்பணி-தல்: To decorate அலங்கரித்தல்.
ஒப்பம்: Oneness ஒரு தன்மை; Gloss மெருகு; Decoration அலங்காரம்.
ஒப்பனை: Decoration அலங்காரம்.
ஒப்பாரி: Equal ஒப்பு; Hoax போலி.
ஒப்பான்: Man of character ஒழுங்கான இயல்புடையவன்.
ஒப்பி-த்தல்: To compare உவமித்தல்; To distribute பங்கிடுதல்; To adorn அலங்கரித்தல்.
ஒப்பு: Resemblance போலுகை; Beauty அழகு; Attention கவனம்; That which is fit ஏற்புடையது.
ஒப்புரவு: Established usage உலக நடை; Philanthrophy உபகாரம்.
ஒப்போலை: Contract உடன்படிக்கைச் சீட்டு.
ஒய் - தல்: To drag இழுத்தல்; To launch செலுத்துதல்; To give கொடுத்தல்;

To efface போக்குதல்; To escape தப்புதல்.
ஒய்யென: Quickly விரைவாக.
ஒரால்: Withdrawing நீங்குகை.
ஒருக்க: Always எப்பொழுதும்.
ஒருக்கடு-த்தல்: To consider equally சமமாக நினைத்தல்.
ஒருக்கம்: Oneness ஒரு தன்மை.
ஒருக்கல்: Defective note in music அபசுரம்.
ஒருக்கு-தல்: To destroy அழித்தல்.
ஒருங்கு: Altogether முழுதும்.
ஒருத்தல்: Male animal ஆண் விலங்கு.
ஒருத்தன்: Unique being ஒப்பற்றவன்.
ஒருத்து: Concentration மன ஒருமைப்பாடு.
ஒருதலைப்படு-தல்: To come to conclusion முடிவுக்கு வருதல்.
ஒருப்படு-தல்: To become one ஒன்றுதல்; To consent சம்மதித்தல்; To dare துணிதல்; To appear தோன்றுதல்.
ஒருப்படுத்து-தல்: To bid adieu வழி அனுப்புதல்; To settle முடிவுசெய்தல்.
ஒருப்பு: Certainty நிச்சயம்.
ஒருபோகு: Land of uniform character ஒரு படித்தான நிலம்.
ஒருமை: Loneliness தனிமை; Uniqueness ஒப்பற்ற தன்மை; Concentration மனம் ஒன்றுகை; Decision தீர்மானம்; Salvation மோக்ஷம்; Truthfulness மெய்ம்மை; One birth ஒரு பிறப்பு.
ஒருமொழி: Command ஆணை.
ஒருவந்தம்: Certainty நிச்சயம்; Firm footing நிலைபேறு.
ஒருவன்: Incomparable one ஒப்பற்றவன்.
ஒருவாமை: Unchangeableness பிறழாமை.
ஒருவு-தல்: To abandon கைவிடுதல்; To cross over கடத்தல்; To resemble ஒத்தல்; To escape தப்புதல்; To be excepted ஒழிதல்.
ஒரோவழி: Sometimes சிறுபான்மையாய்.
ஒரோவொன்று: One in each ஒவ்வொன்று.
ஒல்கு-தல்: To grow weak தளர்தல்; To shrink சுருங்குதல்; To shake அசைதல்; To move to side ஒதுங்குதல்; To incline சாய்தல்; To walk நடத்தல்; To be impoverished வறுமைப்படுதல்; To come in contact தொடுபடுதல்; To be self - controlled மனமடங்குதல்; To be spoiled கெடுதல்; To receive எதிர்கொள்ளுதல்.
ஒல்லு-தல்: To be able இயலுதல்; To agree உடன்படுதல்; To be fit தகுதல்; To join பொருந்துதல்; To tolerate பொறுத்தல்.
ஒல்லே: Quickly விரைவாக.
ஒல்லை: Promptly கால தாமதமின்றி; Oldness பழமை.
ஒலி: Sound ஓசை.-தல்: To thrive தழைத்தல்.-த்தல்: To wash, as clothes ஆடை வெளுத்தல்; To remove, as dirt விளக்குதல்.
ஒலியல்: Garland of flowers பூமாலை; Fly whisk ஈயோட்டுங் கருவி; River நதி.
ஒலியன்: Cloth ஆடை.
ஒலோவு-தல்: To be wanting குறைவாதல்.
ஒவ்வு-தல்: To be consistent பொருந்துதல்.
ஒழி-தல்: To cease தீர்தல்; To remain தங்குதல்; To be settled தீர்மானமாதல்.
ஒழிந்தார்: The rest மற்றவர்.
ஒழிவு: End முடிவு.
ஒழுக்கல்: Applicability பொருந்துகை; Arranging வரிசையாக வைக்கை; Pouring வார்த்தல்.
ஒழுக்கு: Leakage கசிவு; Flow நீரோட்டம்.
ஒழுக: Slowly மெதுவாக.
ஒழுகு-தல்: To act according to laws முறைப்படி நடத்தல்; To be long or tall நெடுமையாதல்; To spread out பரத்தல்; To sink அமிழ்தல்; To melt இளகுதல்.
ஒழுகுமாடம்: Human body உடம்பு.
ஒழுகை: Cart வண்டி.
ஒழுங்கு: Row வரிசை; Order நேர்மை.
ஒழுங்கை: Portico கட்டட முகப்பு.
ஒள்ளிமை: Bright intelligence கூரான அறிவு.
ஒள்ளியன்: Good man நல்லவன்.
ஒளி: Light பிரகாசம்; Distinction மேன்மை; Artificial beauty செயற்கை அழகு; Divinity தெய்வத் தன்மை; Wisdom ஞானம்.-தல்: To hide மறைதல்; To fail தவிர்தல்.
ஒளிர்-தல்-ஒளிர்வா-தல் (ஒளிர்வருதல்): To shine பிரகாசித்தல்.
ஒளிவட்டம்: Mirror கண்ணாடி; Discus சக்கராயுதம்; Halo பிரபை; Moon சந்திரன்.
ஒளிறு: Light பிரகாசம்.

ஒற்கம்: Poverty வறுமை; Weakness தளர்ச்சி; Deficiency குறைவு; Modesty அடக்கம்.

ஒற்றடல்: Employment of spies வேவு காரரை விடுத்து வினை செய்கை.

ஒற்றி: Mortgage அடைமானம்.-த்தல்: To be united ஒற்றுமைப்படுதல்; To be odd ஒற்றையாயிருத்தல்.

ஒற்று: Espionage வேவு; Spy வேவு காரன்; Part of yāḻ யாழின் ஓர் உறுப்பு; Consonant மெய்யெழுத்து. - தல்: To bring into contact ஒன்றில் படும்படி சேர்த்தல்; To wipe away துடைத்தல்; To push, as door தள்ளுதல்; To tie கட்டுதல்; To approach அடுத்தல்; To shoot, as arrow எய்தல்; To decide தீர்மானித்தல்; To move by jerks தத்துதல்; To hide மறைதல்.

ஒற்றை: One ஒன்று; Incomparableness ஒப்பின்மை; Kind of musical instrument தோற்கருவி வகை.

ஒற்றைக் குச்சி: Art of using quarter staff சிலம்ப வித்தை.

ஒறு-த்தல்: To punish தண்டித்தல்; To reprove கடிதல்; To ridicule இகழ்தல்; To destroy அழித்தல்; To be miserly உலோபம் பண்ணுதல்.

ஒறுவாய்: Sunken mouth சிதைவடைந்த வாய்; Broken edge ஒடிந்த விளிம்பு.

ஒன்பதோத்து: Mode of beating time ஒருவகைத் தாளம்.

ஒன்று-தல்: To be first முதலாதல்; To be unique இணையின்றாதல்.

ஒன்று: Person of consequence மதிப்புக்குரியவன்; Union ஒற்றுமை; Truth வாய்மை; Semen இந்திரியம்; The unique ஒப்பற்றது.-தல்: To agree சம்மதித்தல்; To concentrate ஒரு முகப்படுதல்; To resemble உவமையாதல்.

ஒன்று மொழிதல்: To declare with oath வஞ்சினங் கூறுதல்.

ஒன்னலர்-ஒன்றுதோர்-ஒன்றூர்: Enemies பகைவர்.

## ஓ

ஓ: Going and staying சென்று தங்குகை; Sluice மதகுநீர் தாங்கும் பலகை.

ஓக்கம்: Height உயரம்; Bigness பெருமை.

ஓக்கு-தல்: To set apart ஒதுக்கிவைத்தல்; To give கொடுத்தல்; To throw எறிதல்; To make ஆக்குதல்.

ஓகம்: Crowd கூட்டம்.

ஓகை: Delight மகிழ்ச்சி; Loud noise ஆரவாரம்.

ஓங்கல்: Height உயர்ச்சி; Mountain மலை; Tree மரம்; Kind of bird பறவை வகை.

ஓங்காரம்: Ōm பிரணவம்.

ஓங்கு-தல்: To grow வளர்தல்; To spread பரவுதல்.

ஓச்சம்: Eminence உயர்வு.

ஓச்சு-தல்: To discharge எறிதல்; To raise உயர்த்துதல்; To wield ஆளுதல்; To drive away ஓட்டுதல்.

ஓசம்: Light பிரகாசம்.

ஓசனி - த்தல்: To flap wings சிறகடித்தல்.

ஓசுநன்: Oilmonger எண்ணெய் வாணிகன்; Sailor மீகாமன்.

ஓசை: Sound ஒலி; Fame கீர்த்தி; Snake பாம்பு.

ஓட்டம்: Purifying by melting உருக்கிச் சுத்தம் செய்கை.

ஓட்டன்: Runner காலாற் செல்லுந் தூதன்.

ஓட்டு: Defeat புறங்கொடுக்கை.-தல்: To insert புகுத்துதல்; To destroy அழித்தல்; To complete செய்து முடித்தல்; To delay காலந் தாழ்த்தல்; To darn நூலால் இழையிடுதல்.

ஓட்டை மனம்: Tender heart இளநெஞ்சு.

ஓடு-தல்: To run மிக விரைந்து செல்லுதல்; To suffer வருந்துதல்; To happen நேரிடுதல்; To come off கழலுதல்; To spread பரத்தல்.

ஓடை: Tank குளம்; Frontlet for elephants முகபடாம்; Vessel for holding sandal சந்தன மடல்.

ஓத்திரம்: Anything fit to be offered, as oblation ஓமத்திற்குரிய பொருள்.

ஓத்து: Reciting ஓதுகை; Vēda வேதம்; Section of book இயல்; Rule விதி.

ஓதம்: Flood வெள்ளம்; Sea கடல்; Wave அலை; Noise ஒலி; Moisture ஈரம்.

ஓதவனம்: Sea கடல்.

ஓதா: Officiating priest at sacrifice யாகஞ் செய்யும் ஆசிரியருள் ஒருவன்.

ஓதி: Knowledge ஞானம்; Woman's hair பெண்ணின் கூந்தல்; Swan அன்னம்; Hill மலை.

ஓதிமம்: Swan அன்னம்; Hill மலை.

ஓது-தல்: To read படித்தல்; To sing பாடுதல்; To recite Vēdas வேதம் ஓதுதல்.

ஓதை: Wind காற்று.
ஓப்பு-தல்: To drive away ஓட்டுதல்; To raise உயரவெடுத்தல்.
ஓபாதி: Ignorance அவித்தை.
ஓம்படை: Protection பாதுகாப்பு; Place where religious instruction is imparted மதநூல் போதிக்கும் இடம்; Remedy பரிகாரம்; Remembering மறவாமை.
ஓம்பு-தல்: To protect பாதுகாத்தல்; To bring up வளர்த்தல்; To consider சீர் தூக்குதல்; To concentrate மனத்தை ஒருமுகப்படுத்துதல்.
ஓமற-த்தல்: To be unceasing ஒழிவறுதல்.
ஓமாலிகை: Fragrant substances வாசனைச் சரக்குகள்.
ஓமி-த்தல்: To perform home sacrifice ஓமஞ்செய்தல்.
ஓமியம்: Sacrifice யாகம்.
ஓய்-தல்: To change மாறுதல்; To diminish சுருங்குதல்; To expire அழிதல்.
ஓர்-தல்: To investigate ஆராய்ந்தறிதல்.
-த்தல்: To think நினைத்தல்; To listen கூர்ந்து கேட்டல்.
ஓர்கை: Elephant யானை.
ஓர்ச்சி: Feeling உணர்ச்சி.
ஓர்வம்: Partiality ஒருபாற் சார்கை.
ஓரம்: Edge விளிம்பு; Partiality பட்சபாதம்.
ஓரவாரம்: Partiality பட்சபாதம்.
ஓராங்கு: Ceaselessly இடைவிடாமல்.
ஓராயம்: Combination சேர்க்கை.
ஓரி: Old jackal முதுநரி; Mane குதிரைப் பிடரிமயிர்; Dark blue colour of matured honey தேன் முதிர்தலால் பிறக்கும் நீல நிறம்; Husband's brother's wife கணவனுடன் பிறந்தான் மனைவி.
ஓரியர்: Vidyādaras வித்தியாதரர்; Nāgas நாகர்.
ஓருயிர்ப் புள்: Bird பறவை வகை.
ஓரை: Women's play மகளிர் விளையாட்டு; Sign of zodiac இராசி; Muhurttam ஒரு முகூர்த்தம்; Time நேரம்.
ஓல்: Sound ஒலி; Lullaby தாலாட்டு.
ஓலக்கம்: Durbar அத்தாணிக்காட்சி; Hall சபாமண்டபம்.
ஓலம்: Lamentation அபயக் குரல்; Noise சத்தம்.
ஓலம்போழ்: Split leaf of palmyra வார்ந்த ஓலை.
ஓலை: Ear-ring காதணி வகை; Letter ஓலை முடங்கல்.
ஓலைக் கணக்கர்: Pupils பள்ளி மாணவர்.
ஓலைப் பூ: A flower தாழம்பூ.
ஓவம் - ஓவி - ஓவியம் - ஓவு: Picture சித்திரம்.
ஓவர்: Eulogists ஏத்தாளர்.
ஓவியகாயம்: Tiger புலி.
ஓவு: Cessation ஒழிகை.
ஓனி: Row வரிசை; Place where elephants drink water யானை நீருண்ணுமிடம்.

## ஔ

ஔரதன்: Son born in wedlock சொந்த மகன்.
ஔவியம்: Envy பொறாமை.

## க

க: Brahma பிரமன்; Agni அக்கினி.
கஃசு: A measure of weight $\frac{1}{4}$ பலம்.
கக்கம்: Armpit அக்குள்.
ககணி: Astronomer வானநூல் வல்லோன்.
ககனம்: Sky ஆகாயம்.
கதளம்: A musical scale ஸ்வர வகை.
ககேசன்: Sun சூரியன்.
ககோதரம்: Snake பாம்பு.
கங்கு: Ridge வரப்பு; Dam அணை; Row வரிசை; Eagle கழுகு.
கங்குல்: Night இரவு.
கங்கை: River நதி.
கச்சங்கம்: Agreement ஒப்பந்தம்.
கச்சம்: A number ஓர் எண்; Tortoise ஆமை; Agreement ஒப்பந்தம்.
கச்சாரம்: Mat making பாய் முடையுந் தொழில்.
கச்சு: Belt அரைப்பட்டிகை; Band கயிறு; Corset முலைக்கச்சு.
கச்சை: Ornament அணிவகை.
கச்சைகட்டுதல்: To gird up one's loins ஒன்றைச் செய்ய மூண்டு நிற்றல்.
கச்சோதம்: Glowworm மின்மினி.
கச்சோலம்: Kind of aromatic substance வாசனைப் பண்ட வகை.
கசடு: Fault குற்றம்; Scar வடு.
கசனை: Attachment பற்று.
கசாக்கிரம்: A linear measure ஒரு நீட்டலளவை.
கசி-தல்: To grow tender நெகிழ்தல்.

**கசிகை**: Friendship சிநேகம்.
**கசை**: Whip சாட்டை.
**கஞ்சகம்**: Kind of tree கறிவேப்பிலை மரம்.
**கஞ்சங்குல்லை**: Kind of reed கோரை வகை.
**கஞ்சம்**: Water நீர்; Lotus தாமரை; Bell metal வெண்கலம்.
**கஞ்சரி**: Kind of tabor வாத்திய வகை.
**கஞ்சனை**: Mirror கண்ணாடி; Censer தூப கலசம்.
**கஞ்சிகை**: Curtain திரை.
**கஞ்சுகம்**: Liquorice plant அதிமதுரம்; Tunic அங்கி.
**கஞ்சுகி**: Bodyguard மெய்காப்பாளன்; Snake பாம்பு.
**கஞல்-தல் (கஞலுதல்)**: To be close நெருங்குதல்; To shine forth விளங்குதல்.
**கஞற்று-தல்**: To fill நிரப்புதல்; To do செய்தல்.
**கட்கண்**: Physical eye ஊனக் கண்; Throughout அங்கங்கே.
**கட்கம்**: Sword வாள்; Horn of rhinoceros காண்டாமிருகத்தின் கொம்பு; Armpit அக்குள்.
**கட்சி**: Forest காடு; Refuge புகலிடம்; Battle field போர்க்களம்.
**கட்டகம்**: Artistic design சித்திர வேலைப்பாடு; Loadstone காந்தக் கல்.
**கட்டங்கம்**: Battle axe of Siva மழுவாயுதம்.
**கட்டணம்**: Building கட்டடம்; Doolie டோலி; Bier பாடை; Fees கூலி.
**கட்டம்**: Dung மலம்.
**கட்டல்**: Weeding களை யெடுக்கை.
**கட்டளை**: Mould வார்க்கும் அச்சு; Image படிவம்; Touchstone உரைகல்; Fate விதி; Grade தரம்; Manner முறைமை; Saddle குதிரைச் சேணம்; Protection காவல்.
**கட்டாணி**: Ear-ring pin காதணியின் பூட்டாணி.
**கட்டாரி**: Dagger குத்துவாள்; Trident சூலம்.
**கட்டி**: Jaggery வெல்லம்; Gold பொன்.
**கட்டியம்**: Panegyric புகழுரை.
**கட்டு**: Fastening பந்தம்; Fabrication பொய்யுரை; Commandment ஆணை; Guard காவல்; Section வகுப்பு; Strength உறுதி; Abundance மிகுதி; Decorum மரியாதை; Divination ஆரூடம்; Instruction கற்பிக்கை; Encirclement வளைப்பு.-தல்: To harden இறுகச் செய்தல்; To win வெல்லுதல்.
**கட்டுக்கிடை**: Old stock நாள்பட்ட சரக்கு.
**கட்டுப்படு-த்தல்**: To consult woman-soothsayer கட்டுவிச்சிபாற் குறிகேட்டல்.
**கட்டுப்பவளம்**: Coral wristlet பவளத் தாலான கையணி.
**கட்டுமா**: Grafted mango tree ஒட்டு மா.
**கட்டுரை**: Meaningful expression பொருள் பொதிந்த சொல்; Proverb பழமொழி; Figurative language புனைந்துரை; Falsehood பொய்.
**கட்டுவடம்**: Necklace கழுத்தணிவகை; Anklet காலணி வகை.
**கட்டுவை**: Cot கட்டில்.
**கட்டூர்**: Military camp பாசறை.
**கட்டேறு-தல்**: To become possessed ஆவேசம் வருதல்.
**கட்டை**: Funeral pyre ஈம விறகு; Defect in singing இசைக் குற்ற வகை.
**கட-த்தல்**: To pass through கடந்து போதல்; To measure அளத்தல்; To win வெல்லுதல்; To destroy அழித்தல்.
**கடக்கை**: Kind of musical instrument வாத்திய வகை.
**கடகம்**: Fibre box அகணிப் பெட்டி; Bracelet கங்கணம்; Gesture of nātya நாட்டியப் பிடிகளுள் ஒன்று; Army படை.
**கடகன்**: Agent காரியத்தைக் கூட்டி வைப்பவன்.
**கடகு**: Shield கேடகம்.
**கடப்பாடு**: Duty கடமை; Order முறைமை; Gift கொடை; Abundance அதிகப்படுகை.
**கடம்**: Debt கடன்; Forest காடு; Anger கோபம்; Must யானை மதம்; Difficult path in barren tract பாலை நிலத்து வழி; Water pot குடம்.
**கடம்பு**: Evil தீங்கு; Kind of tree மர வகை.
**கடமா-கடமான்**: Wild cow காட்டுப் பசு; Must elephant மத யானை.
**கடமை**: Ewe பெண்ணாடு; Elk மரை வகை.
**கடவன்**: Master எசமானன்.
**கடவுதல்**: To drive செலுத்தல்; To enquire கேட்டல்.
**கடவு**: Male buffalo எருமைக்கடா.
**கடவுட்டீ**: Submarine fire ஊழித்தீ.
**கடவுண் மங்கலம்**: Consecration of new idol தெய்வப் பிரதிஷ்டை.
**கடவுள் மண்டிலம்**: Sun god சூரியன்.
**கடவுள்**: God இறைவன்; Celestial தேவன்; Sage முனிவன்; Goodness நன்மை.

கடறு: Forest காடு; Desert பாலைநிலம்; Mountain slope மலைச் சாரல்.

கடன்: Nature இயல்பு; Order முறைமை; Hospitality விருந்தளித்தல்; Cause காரணம்; Honour மானம்.

கடன்மரம்: Wooden sailing craft மரக்கலம்.

கடா: Question வினா.

கடாம்: Must யானையின் மத நீர்.

கடாவிடு-தல்: To thresh grain with buffaloes or bulls பிணையடித்தல்.

கடாவு-தல்: To drive செலுத்துதல்; To cuff குட்டுதல்; To impel தூண்டுதல்.

கடி: Pickle ஊறுகாய்; Scent வாசனை; Wedding கலியாணம்; Protection காவல்; Newness புதுமை; Brightness விளக்கம்; Abundance மிகுதி; Speed விரைவு; Worship பூசை; Excellence சிறப்பு; Sound ஓசை; Fear அச்சம்; Certainty தேற்றம்; Doubt சந்தேகம்; Pungency கரிப்பு; Devil பேய்; Drum stick குறுந்தடி; Waist இடுப்பு; Removal நீக்கம். - தல்: To drive off ஓட்டுதல்; To destroy அழித்தல்; To reprove கண்டித்தல்; To cut அறுத்தல். - த்தல்: To be successful சித்தித்தல்.

கடுதுரங்கு: An ancient military engine மதிற்பொறி வகை.

கடிகை: Piece துண்டம்; Handle காம்பு; Pike-staff குத்துக் கோல்; Shield கேடகம்; Curtain திரைச் சீலை; Astrologer கணி; Bard மங்கலப் பாடகன்; Necklace கட்டு வடம்; Epaulette தோள்வளை; Bracelet கைக் காப்பு.

கடிகையர்-கடிகையார்: Court bards who keep time அரசனுக்குக் கவியால் நாழிகை சொல்வார்.

கடிஞை: Beggar's bowl பிச்சைப் பாத்திரம்.

கடித்தகம்: Shield கேடகம்.

கடிது: Quickly விரைவாக; Exceedingly மிக.

கடிப்பகை: Margosa வேம்பு; White mustard வெண்கடுகு.

கடிப்பம்: Drinking vessel with spout கெண்டி.

கடிப்பு: Drum stick பறையடிக்கும் குறுந்தடி; Weapon ஆயுத வகை; Handle of bellows துருத்தியின் கைப்பிடி; Tambourine bells குமிழ்; Ear ornament காதணி.

கடி முரசம்: Royal drum அரசாங்க முரசம்.

கடு: Kind of nut கடுக்காய்; Poison விஷம்; Snake பாம்பு. - தல்: To weed களை பிடுங்குதல்.-த்தல்: To ache நோதல்; To run fast விரைந்து ஓடுதல்; To be full நிறைதல்; To be angry கோபித்தல்; To dislike வெறுத்தல்; To doubt சந்தேகித்தல்; To resemble ஒத்தல்.

கடுக்கம்: Speed விரைவு.

கடுக்கு-தல்: To show signs of anger கோபக் குறி காட்டுதல்.

கடுக்கை: Kind of tree கொன்றை மரம்.

கடுகு-தல்: To move fast விரைதல்; To increase மிகுதல்; To grow short குறுகுதல்.

கடுங்கண்: Ferocity தறுகண்மை.

கடுஞ் சூல்: First pregnancy முதற் கருப்பம்.

கடுந்தேறு: Wasp குளவி வகை.

கடுப்பு: Throbbing pain கடுவலி; Ire கோபம்; Speed வேகம்; Likeness ஒப்பு.

கடும்பு: Gathering கூட்டம்; Relations சுற்றம்.

கடுமான்: Lion சிங்கம்.

கடுமை: Excessiveness மிகுதி; Anger சினம்; Heat வெம்மை; Quickness விரைவு.

கடுவாய்: Kind of drum பறை வகை; Kind of tiger புலி வகை.

கடை: Limit எல்லை; Inferiority கீழ்மை; Gate வாயில்; Handle காம்பு; Succeeding பின். - தல்: To churn மத்தாற் கடைதல்; To increase பெருக்குதல்; To trickle சொட்டுதல்.

கடைக்கருவி: Kind of drum உடுக்கை என்னும் பறை.

கடைக் கூட்டு-தல்: To carry out செய்து முடித்தல்; To bring to head ஒருப்படுத்தல்; To acquire சம்பாதித்தல்; To cause death சாகச் செய்தல்.

கடைக் கோம்பு: Edge of lake bund ஏரிகரையின் கோடி.

கடைக்கோள்-தல் (கடைக்கொள்ளுதல்): To hold fast உறுதியாகக் கொள்ளுதல்; To follow பின்செல்லுதல்; To bring together சேர்த்தல்; To be finished முடிவு பெறுதல்.

கடைச்சி - கடைசி: Woman of agricultural tract மருதநிலப் பெண்.

கடைஞ்சன்-கடைஞன்: Man of low caste இழிகுலத்தோன்.

கடைத்தலை: Outer gate புறத்தலை வாயில்.
கடைநன்: Turner கடைசல் வேலை செய்வோன்.
கடைப்படு-தல்: To be fulfilled நிறைவேறுதல்.
கடைப்பிடி: Doctrine சித்தாந்தம்; Attachment பற்று; Not forgetting மறவாமை. - த்தல்: To ascertain clearly தெளிவுற அறிதல்; To accumulate சேர்த்து வைத்தல்.
கடைபோ-தல்: To end முற்றுப்பெறுதல்; To last நிலை நிற்றல்.
கடைமணி: Handle of spear வேல் முதலியவற்றின் அடிப் பகுதி; Edge of eyeball கண்மணிக் கடை; Bead attached to tāli தாலியுடன் சேர்த்தணியும் மணி.
கடைமுகம்: Gateway தலைவாயில்.
கடைமுறை: Meanest condition மிக இழிந்த நிலை.
கடை யிலக்கம்: Final figures arrived at in account கணக்கின் முடிவு.
கடையுவா: New moon அமாவாசை.
கடையெழுத்து: Signature கையொப்பம்.
கடையேடு: Death warrant மரணச் சீட்டு.
கண்: Benignity கண்ணோட்டம்; Aperture துவாரம்; Joint in bamboo etc. கணு; Centre of drum-head முரசு முதலியவற்றின் அடிக்குமிடம்; Knowledge ஞானம்; Seed விதை; Place இடம்; Front முன்பு; Support பற்றுக்கோடு; Body உடம்பு.
கண்கண்ணி: Small garland குறுங் கண்ணி.
கண்கல-த்தல்: To come in sight எதிர்ப்படுதல்.
கண்காரன்: Supervisor மேற்பார்ப்போன்; Shroff நோட்டக்காரன்.
கண்கூடு: That which is seen பிரத்தியட்சம்; First view of lovers காட்சித் துறை. - தல்: To be dense நெருங்குதல்.
கண்சாத்து-தல்: To look upon with favour அன்போடு நோக்குதல்.
கண்சாய்-தல்: To grow cold in love அன்பு குறைதல்.
கண்டகம்: Thorn முள்; A plant நீர் முள்ளி; Jungle காடு; Cruelty கொடுமை.
கண்டகி: Fragrant screw-pine தாழை; Bamboo மூங்கில் வகை.
கண்டங்கி-கண்டாங்கி: Kind of saree சேலை வகை.
கண்டசித்தி-கண்டசுத்தி: Ability to compose impromptu verses ஆசுகவி சொல்லும் வல்லமை.
கண்டபேரம்: Fabulous bird பறவை வகை.
கண்டம்: Piece துண்டம்; Curtain made of particoloured material பல வர்ணத் திரை; Kind of sugar கண்ட சர்க்கரை.
கண்டயம்: Ankle ring வீரக்கழல்.
கண்டல்: Fragrant screw-pine தாழை.
கண்டன்: Cruel man கொடியோன்; Warrior வீரன்.
கண்டாமணி: Big bell பெரிய மணி.
கண்டி: Necklace of rudrākṣa beads உருத்திராக்க மாலை.
கண்டிகை: Species of greens சிறுகீரை.
கண்டில் வெண்ணெய்: Chinese anise பெருஞ் சீரகம்.
கண்டு: Sugar candy கற்கண்டு.
கண்டுகாண்-தல் (கண்டு காணுதல்): To look attentively கவனமாய்ப் பார்த்தல்.
கண்டு சருக்கரை: An incense நறும் புகைச் சரக்கு.
கண்டுமுட்டு: Pollution by sight கண்டால் வரும் தீட்டு.
கண்டுயில்-தல்: To grow dim as sight பார்வை மங்குதல்.
கண்டேதி-கண்டேயம்-கண்டேயை: Itching அரிப்பு.
கண்ணஞ்சு-தல்: To fear பயப்படுதல்.
கண்ணடி: Mirror கண்ணாடி.
கண்ணய-த்தல்: To long for intensely மிக விரும்புதல்.
கண்ணரி-தல்: To cease நீக்குதல்.
கண்ணவர்: Ministers அமைச்சர்.
கண்ணழிவு: Defect குறைவு; Delay தாமதம்; Interpreting word by word பதப்பொருள் கூறுகை.
கண்ணழுத்தங் கோல்: Painter's brush தூரிகை.
கண்ணறு-தல்: To cease to be friendly நட்புக் குலைதல்; To depart நீங்குதல்.
கண்ணறை: Blindness குருடு; Hard-heartedness வன்னெஞ்சு.
கண்ணார்: Enemies பகைவர்.
கண்ணாளன்: Lover நாயகன்; Affectionate friend அன்பன்.
கண்ணறு: Small hole சிறு துவாரம்.
கண்ணி: Chaplet தலையிற் சூடும் பூமாலை; A flower போரில் அணியும் பூ; Bud அரும்பு; Snare பறவை பிடிக்கும் பொறி; Net வலை.

**கண்ணி** குத்து-தல்: To set noose பறவைப் பொறி வைத்தல்.
கண்ணிரங்கு-தல்: To sound ஒலித்தல்.
கண்ணில்-தல் (கண்ணிற்றல்): To stand opposite எதிர் நிற்றல்.
கண்ணிறை: Sleep தூக்கம்.
கண்ணு-தல்: To consider கருதுதல்; To be attached பொருந்துதல்.
கண்ணுமை: Sight காட்சி.
கண்ணுள்: Fine workmanship in jewelry அரும்புத் தொழில்.
**கண்ணுள்** வினைஞன்: Painter சித்திரகாரன்.
**கண்ணுளன் - கண்ணுளாளன்**: Flutist குழல் வாசிப்போன்.
**கண்ணுறு**-தல்: To see பார்த்தல்; To meet எதிர்ப்படுதல்; To approach கிட்டுதல்; To be possible இயலுதல்.
**கண்ணுறை**: Curry கறி; Curry-stuff மசாலை; Fear at sight கண்டு அஞ்சும் அச்சம்.
கண்ணூறு -கண்ணேச்சில்-**கண்**ணேறி-**கண்**ணேறு: Evil eye திருஷ்டி தோஷம்.
கண்ணெழுத்தாளன்: Amanuensis to king அரசனது திருமுகம் எழுதுவோன்.
கண்ணேறி: Skilful playing on drum தோற்கருவி திறம்பட வாசிக்கை.
**கண்ணேணி**: Single bamboo pole used as ladder in climbing up steep slopes மலை முதலியவற்றில் ஏற உதவும் ஒற்றை மூங்கில் ஏணி.
கண்ணோடு-தல்: To be sympathetic இரங்குதல்.
**கண்படு**-தல்: To sleep தூங்குதல்; To spread பரவுதல்; To be sympathetic கண்ணோடுதல்.
கண்படை: Sleep நித்திரை.
கண்பு: Elephant grass சம்பங்கோரை.
கண்புதையல்: Hide and seek கண்ணாமூச்சி.
**கண்மணி**: Rudrākṣa bead உருத்திராக்கம்.
**கண்மயம்**: Mercy தாட்சிணியம்.
**கண்மாயம்**: Evil eye கண்ணேறு.
கண்மாறுதல்: To appear and disappear in twinkling தோன்றி உடனே மறைதல்; To lose caste நிலை கெடுதல்; To neglect புறக்கணித்தல்.
கண்மூகிழ்: Eyelid இமை.
**கண்மை**: Sight காட்சி; Sympathy கண்ணோட்டம்.
**கண்வளர்-தல்**: To sleep தூங்குதல்.
**கண்வாங்கு-கண்வாரு-தல்:** To attract attention கண்ணைக் கவர்தல்; To clean out as well தூர்வை எடுத்தல்.
**கண்விடு தூம்பு**: Kind of drum தோற்கருவி வகை.
கணக்காயன்: Teacher ஆசிரியன்.
கணக்கு: Number எண்; Account book கணக்குப் புத்தகம்; Stratagem சூழ்ச்சி; Affair காரியம்; Limit எல்லை; Literature, science நூல்; Litigation வழக்கு; Manner விதம்.
கணந்துள்: Kind of bird பறவை வகை.
கணம்: Group கூட்டம்; Sphericity திரட்சி; Moment க்ஷணம்.
கணவம்: Pipal tree அரசமரம்.
கணவலர்: Sweet oleander அலரி.
கணவிரம்-கணவீரம்: Red oleander செவ்வலரி.
கணன்: Thief திருடன்.
கணுதர்: Logicians தார்க்கிகர்.
கணி: Learned man நூல்வல்லவன்; Painter சித்திரமெழுதுவோன்; Astrologer சோதிடன்; Any branch of knowledge கலை. -த்தல்: To estimate அளவு குறித்தல்; To esteem மதித்தல்; To read படித்தல்; To create சிருஷ்டித்தல்; To repeat mentally மனத்தால் உருவேற்றுதல்.
**கணிகாரம்**: Red cotton tree இலவமர வகை.
**கணிகை**: Harlot பொதுமகள்; Eared jasmine முல்லை.
**கணிச்சி**: Battle axe மழு; Elephant goad அங்குசம்.
**கணிசம்**: Estimation மதிப்பு; Measure அளவு.
**கணிப்பு**: Computing அளவிடுகை; Esteeming கௌரவிக்கை.
கணுவை: Kind of drum பறை வகை.
கணை: Cylindrical or globular shape திரட்சி; Arrow அம்பு; Arrow-head அம்பின் அலகு; Mortar of oil press செக்குரலின் அடிப்பாகம்.
கணைக்கால்: Shin முழந்தாளுக்கும் கரண்டைக்கும் இடைப்பட்ட உறுப்பு.
கணையம்: Club தண்டாயுதம்; Curved club வளைதடி; Elephant staple யானை கட்டும் தூண்; Fort கோட்டை; Wooden bolt of fortress door மதிற் கதவின் மரத்தாழ்; Kind of drum பறை வகை.
**கத்தணம்**: Coat of mail கவசம்.
**கத்தம்**: Dung mire மலச்சேறு.

**கத்தரிகை-கத்திரிகை:** Scissors கத்தரிக் கோல்; Hand pose in dance நாட்டியப் பிடிவகை.
**கத்திகை:** Kind of garland மாலை வகை; Kind of plant குருக்கத்தி.
**கத்தியம்:** Prose style வசன நடை.
**கத்திரிகம்:** Standing with legs crossed கால் மாறி நிற்கை.
**கத்திரிபாவல் - கத்திரிபாவிலி:** Ear ornament காதணி வகை.
**கத்தூரி:** Musk-deer கஸ்தூரி மிருகம்; Musk கஸ்தூரி.
**கதகம்:** Clearing nut தேற்றாங் கொட்டை.
**கதம்:** Anger கோபம்; Movement ஓட்டம்.
**கதலி:** Plantain tree வாழை; Banner துகிற்கொடி; Kite காற்றாடி.
**கதவம்:** Door கதவு.
**கதவு:** Anger கோபம்.
**கதழ்-தல்:** To cleave பிளத்தல்; To speed up விரைதல்; To be furious உக்கிரமாதல்; To abound மிகுதல்.
**கதழ்வுறு-தல்:** To shriek with terror அச்சத்தால் அலறுதல்.
**கதறு-தல்:** To cry aloud உரக்க அழுதல்; To scream கத்துதல்.
**கதாவு-தல்:** To pass செல்லுதல்.
**கதி:** Way வழி; Swiftness விரைவு; Refuge புகலிடம்; Heaven மோக்ஷம்; Pace of horse குதிரை நடை; Stages of birth உயிரின் பிறப்பு வகை; Nature இயல்பு; True principles தத்துவம்; Chapter படலம். -த்தல்: To tell சொல்லுதல்; To be angry கோபித்தல்; To hasten விரைதல்; To grow big பருத்தல்; To abound மிகுதல்; To know அறிதல்.
**கதிப்பு:** Denseness இறுகல்.
**கதிர்:** Ray கிரணம்; Light ஒளி; Sunlight வெயில்; Sun சூரியன்; moon சந்திரன்; Ear of grain பயிர்க் கதிர்; Spindle நூல் நூற்குங் கருவி. -த்தல்: To become manifest வெளிப்படுதல்.
**கதிர்ச்சிலை:** Sun stone சூரியகாந்தக் கல்.
**கது:** Scar வடு; Mountain cleft மலைப் பிளவு.
**கதுப்பு:** Cheek கன்னம்; Human hair தலை மயிர்.
**கதுவாய்:** Diminishing குறைபடுகை.
**கதுவு-தல்:** To seize பற்றுதல்; To be reflected பிரதிபலித்தல்.
**கதை:** Club தண்டாயுதம். - தல்: To speak well of சிறப்பித்துச் சொல்லுதல்.
**கந்தப்பட்டி:** Braces குறுக்குச் சட்டம்.
**கந்தம்:** Scent வாசனை; Pillar தூண்.
**கந்தர்ப்பர்-கந்தருவர்:** Gandarvas தேவ சாதியார்.
**கந்தரம்:** Neck கழுத்து; Mountain cave மலைக் குகை.
**கந்தரமுட்டி:** A method of holding bow விற்பிடிக்கும் வகையுள் ஒன்று.
**கந்தருவம்:** Music இசை; Form of marriage மண வகை.
**கந்தவர்க்கம் - கந்தவுத்தி:** Perfumes வாசனைத் திரவியங்கள்.
**கந்தழி:** Supreme Being பரம்பொருள்.
**கந்தாரம்:** Kind of liquor மதுவகை; Musical mode ஒரு பண்.
**கந்தி:** Spices வாசனைப் பொருள்; Areca palm கமுகு.
**கந்து:** Post தூண்; Elephant staple யானைகட்டுந் தறி; Posts for cows to rub against ஆதீண்டு குற்றி; Post worshipped as deity தெய்வம் உறையும் தூண்; Support பற்றுக்கோடு; Full gallop முழுப் பாய்ச்சல்.
**கந்துகம்:** Ball பந்து; Horse குதிரை.
**கந்துள்:** Charcoal கரி.
**கப்படம்:** Rags கந்தற் சீலை; Garment ஆடை.
**கப்படி:** Sting கொடுக்கு.
**கப்பணம்:** Small caltrop இரும்பாலான நெருஞ்சிமுட் படை.
**கப்பம்:** Tribute திறை.
**கப்பரை:** Beggar's bowl பிச்சைக்கலம்; Earthen vessel மட்கலம்.
**கப்பி:** Grits பெருநொய். -த்தல்: To fork கவர்படுதல்; To grow in size பெருத்தல்.
**கப்பியம்:** Diet உண்ணத்தக்கது.
**கப்பு:** Bough கிளை; Cleft பிளவு; Shoulder தோள்; Support ஆதாரம்; Charm கவர்ச்சி. -தல்: To overspread மூடிக்கொள்ளுதல்; To cram into mouth கொள்ளும் அளவு வாயில் திணித்தல்.
**கப்புரம்-கற்பூரம்:** Camphor கர்ப்பூரம்; Kind of spice பச்சைக் கர்ப்பூரம்.
**கபடம்-கபடு:** Deceit வஞ்சகம்.
**கபம்:** Phlegm கோழை.
**கபாய்:** Frock நிலையங்கி.
**கபால்-கபாலம்:** Skull தலையோடு; Beggar's bowl பிச்சைப் பாத்திரம்.
**கபிலர்:** Rudras உருத்திரர்.
**கபிலை:** Brown colour புகர் நிறம்.

கபோதம்: Dove புறு; Overhanging projection of house வீட்டின் கொடுங்கை; Dance pose நாட்டியப் பிடி வகை.
கபோலம்: Cheek கன்னம்.
கம்: Water நீர்; Skull கபாலம்; Soul உயிர்; Final bliss வீட்டின்பம்; Smith's work கம்மியர் தொழில்.
கம்பதாளி: Kind of hysteria வலிப்பு நோய் வகை.
கம்பம்-கம்பனம்-கம்பிதம்: Shaking அசைவு.
கம்பல்: Garment ஆடை; Noise ஆரவாரம்.
கம்பலம்-கம்பளம்: Woollen blanket கம்பளித் துணி; Canopy மேற்கட்டி.
கம்பலி: Kind of drum பறைவகை.
கம்பி: Kind of ear-ring காதணி வகை; Bit of bridle கடிவாளம். -த்தல்: To roar முழங்குதல்.
கம்பு: Elephant staple யானைத் தறி; Rod கழி; Stem தண்டு; Conch-shell சங்கு.
கம்புகட்டி: Irrigator நீர்பாய்ச்சுவோன்.
கம்புள்: Kind of water fowl நீர்ப் பறவை வகை.
கம்மகாரர்: Sailors கப்பலோட்டிகள்.
கம்மம்: Smith's work கம்மியர் தொழில்.
கம்மி: Labourer தொழிலாளி; Scantiness குறைவு.
கம்மிய நூல்: Science of architecture சிற்ப சாஸ்திரம்.
கம்மு-தல்: To become hoarse தொண்டை கட்டுதல்.
கமஞ்சூல்: Cloud மேகம்.
கமடம்: Tortoise ஆமை.
கமலை: Lakṣmi இலக்குமி.
கமழ்-தல்: To emit fragrance மணத்தல்; To appear தோன்றுதல்; To spread பரத்தல்.
கமறு-தல்: To roar மிக ஒலித்தல்; To be excessively heated மிக வேகுதல்.
கமித்-தல்: To endure பொறுத்தல்; To support தாங்குதல்.
கமுகு: Areca palm பாக்கு மரம்.
கமை: Endurance பொறுமை; Mountain மலை.
கய: Big பெரிய; Tender மெல்லிய.
கயக்கம்: Weariness வாட்டம்; Intermission இடையீடு; Confusion கலக்கம்.
கயம்: Inferiority கீழ்மை; King-crow கரிக் குருவி; Tank குளம்; Depth ஆழம்; Elephant யானை; Decay தேய்வு; Consumption க்ஷயம்.
கயமை: Inferiority கீழ்மை.
கயல்: Carp கெண்டை மீன்.
கயவாய்: Estuary சங்கமுகம்; King-crow கரிக்குருவி; Buffalo எருமை.
கயிரவம்: Water-lily ஆம்பல்.
கயில்: Nape பிடரி.
கயிலி: Kind of checkered cloth பலவர்ணத் துணி.
கயிற்கடை: Curved extremity of hook கொக்கிவாய்.
கயினி: Widow கைம்பெண்.
கர்ணு: Kind of musical instrument வாத்திய வகை.
கர்த்தபம்-கர்த்தவம்: Donkey கழுதை.
கர்த்தவியம்: Duty கடமை.
கர-த்தல்: To conceal மறைத்தல்; To steal திருடுதல்; To destroy அழித்தல்; To join அடைதல்.
கரகேத்திரம்: Kind of dance கூத்து வகை.
கரடம்: Elephant's must hole யானைக் கவுளின் மதம் பாயும் துவாரம்.
கரடி - கரடிகை: Kind of drum பறை வகை.
கரடு: Roughness முருடு; Knot in wood மரக்கணு; Running amuck of elephant யானையின் மதவெறி.
கரண்: Grass sod புற்பற்றை.
கரண்டகம் - கரண்டிகை: Basket of coconut leaves தென்னை ஓலையால் முடைந்த பூக்குடலை.
கரண்டம்: Water crow நீர்க்காக்கை.
கரணை: Mode of flight பறவையின் கதிவிசேடம்; Water vessel கமண்டலம்.
கரணம்: Work தொழில்; Sense organ இந்திரியம்; Ceremony சடங்கு; Kind of dance கூத்து வகை; Implement கருவி; One of five elements of Indian almanac பஞ்சாங்க உறுப்பு ஐந்தனுள் ஒன்று; Accountant கணக்கன்.
கரந்துறை: Closed drain மூடிய நீர்க் கால்.
கரந்தை: Kind of plant விஷ்ணுக் கரந்தை; Priest குரு.
கரப்பிரசாரம்: Dance pose அபிநய வகை.
கரப்பு: Concealment மறைப்பு; Deceit வஞ்சகம்; Cockroach கரப்பான்பூச்சி.
கரபம்: Metacarpus மணிக்கட்டிலிருந்து விரல்வரையில் உள்ள பகுதி; Elephant யானை.

**கரம்**: Hand கை; Cubit முழம்; Ray of light கிரணம்; Light ஒளி; Ass கழுதை; Poison நஞ்சு; Firmness திடம்.

**கரம்பை**: Hard clayey soil வறண்ட களிமண் நிலம்; Waste land தரிசு.

**கரவடம்**: Theft களவு; Deceit வஞ்சகம்.

**கரவாளம்**: Dagger கைவாள்.

**கரவு**: Concealment மறைவு; Deceit வஞ்சனை; Falsehood பொய்; Alligator முதலை.

**கரன்**: Steady person நிலையுள்ளவன்.

**கரா-கராம்**: Species of alligator முதலை வகை.

**கரி**: Black pigment for eye கண்ணுக்கு இடும் மை; Elephant யானை; She-ass பெட்டைக்கழுதை; Witness சாட்சி; Guest விருந்தாளி. -தல்: To become black கருமையாதல்; To be scorched தீய்தல். -த்தல்: To despise வெறுத்தல்.

**கரிகரம்**: Mode of sexual enjoyment காதல் லீலைவகை.

**கரிகாடு**: Burning ground சுடுகாடு.

**கரிசம்**: Emaciation தேய்கை.

**கரிசனம்**: Elephant's tusk யானைக் கொம்பு.

**கரிசு**: Fault குற்றம்; Sin பாவம்; Firm hold உறுதிப் பிடி; Measure of capacity கரிசை.

**கரிஞ்சம்**: A bird அன்றில்.

**கரிணி**: Cow elephant பெண்யானை.

**கரிப்பு**: Nagging நிந்திக்கை; Pungency காரம்.

**கரிபோக்கு-தல்**: To paint eyelids black கண்ணுக்கு மை எழுதுதல்; To give testimony சான்று கூறுதல்.

**கரியல்**: Kind of cloth ஆடை வகை; Kind of dish வெஞ்சன வகை.

**கரியார்**: Degraded people இழிமக்கள்.

**கரு**: Black colour கறுப்பு; Prong ஆயுதப் பல்; Embryo கருப்பம்; Body உடம்பு; Birth பிறப்பு; Child குழந்தை; The young குட்டி; Mould அச்சுக் கரு; Efficient cause நிமித்த காரணம்; Middle நடு; Foundation அஸ்திவாரம்; Characteristic regional features of the five tracts கருப் பொருள்; Gold பொன்.

**கருக்கம்**: Rain cloud கார் மேகம்.

**கருக்காய்**: Immature fruit முற்றாத காய்.

**கருக்கு**: Jagged edge of palmyra leaf stalk பனைக்கருக்கு; Narcotic drug போதை வஸ்து; Engraving பொறித்த சித்திரம்; Beauty அழகு; Sharpness கூர்மை.

**கருகூலம்-கருவூலம்**: Treasury பொக்கிஷம்.

**கருங்கலம்**: Earthen vessel மட்பாத்திரம்.

**கருங்காலி**: Ebony மர வகை.

**கருங்கூத்து**: Drama of low order இழிவான நாடகம்.

**கருஞ்சரக்கு**: Grain தானியம்.

**கருஞ்சிறைப் பறவை**: Peafowl மயில்.

**கருடப்பச்சை**: Kind of emerald மரகத வகை.

**கருணம்**: Ear காது.

**கருணிகன்**: Village accountant கிராமக் கணக்கன்.

**கருத்தளவை-கருதல்**: Inference அநுமானப் பிரமாணம்.

**கருத்து**: Object நோக்கம்; Substance தாற்பரியம்; Wish இச்சை; Discrimination விவேகம்; Agreement சம்மதம்; Mind மனம்; Will சங்கற்பம்; Self-esteem தன்மதிப்பு.

**கருது-தல்**: To recall to mind மறந்ததை நினைத்தல்; To judge calmly நிதானித்தறிதல்; To regard மதித்தல்; To infer அநுமானித்தல்; To think deeply தீர்க்கமாக ஆலோசித்தல்; To resemble ஒத்தல்.

**கருந்தலை**: A quarter கால் பாகம்.

**கருநாய்**: Wolf ஓநாய்.

**கருநாழிகை**: Night இரவு.

**கருப்பக்கிருகம்**: Sanctum sanctorum மூலஸ்தானம்.

**கருப்பம்**: Inner meaning உட்பொருள்.

**கருப்பாசயம்**: Womb கருப்பப் பை.

**கருப்பு**: Famine பஞ்சம்.

**கருப்பை**: Rat எலி.

**கருப்பொருள்**: God கடவுள்.

**கரும்பன்**: Cupid மன்மதன்.

**கரும்பிள்ளை**: Crow காக்கை.

**கரும்புறம்**: Blackness கருமை.

**கரும்பொன்**: Iron இரும்பு.

**கருமகன்**: Black-smith கொல்லன்.

**கருமணி**: Apple of eye கண்மணி.

**கருமம்**: Deed செயல்; Duty கடமை.

**கருமா**: Hog பன்றி; Elephant யானை.

**கருமான்**: Stag ஆண்மான்; Hog பன்றி.

**கருமேனி**: Corpulent body தூல சரீரம்.

**கருமை**: Greatness பெருமை; Strength வலிமை; Freshness பசுமை; Cruelty கொடுமை.

**கருவறு-த்தல்**: To root out நிர்மூலமாக்குதல்.

கருவன்: Destroyer சங்காரமூர்த்தி.
கருவி: Implement ஆயுதம்; Shield கேடயம்; Collection தொகுதி; Painting சித்திரம்; Musical instrument இசைக் கருவி; Secondary cause துணைக் காரணம்.
கருவிளை: Kind of Creeper காக்கணம்.
கருவுயிர்-த்தல்: To bring forth ஈனுதல்.
கருவுறு-தல்: To blossom மலர்தல்.
கருவை: Millet straw வரகு வைக்கோல்.
கருள்: Blackness கறுப்பு; Blot குற்றம்; Wrath சீற்றம்.
கருனை: Fried dish பொரிக்கறி.
கரை: Sea shore கடற்கரை; Bund நீர்க்கரை; Limit எல்லை.-தல்: To dissolve கரைந்துபோதல்; To wear away தேய்தல்; To suffer வருந்துதல்; To delay தாமதித்தல்; To sound ஒலித்தல்; To weep அழுதல்; To invite அழைத்தல்; To expound விளக்குதல்; To carry சுமத்தல்.
கரோடி-கரோடிகை: Skull - garland சிரமாலை.
கல்: Mountain மலை; Precious stone இரத்தினம்; Red ochre காவிக்கல்; Pearl முத்து; Memorial stone for hero வீரக்கல்.-தல் (கற்றல்): To learn படித்தல்.
கல்யாணம்: Prosperity சுபம்; Marriage மணம்.
கல்லகாரம்: Kind of water plant நீர்க்குளிரி.
கல்லடார்: Animal trap விலங்குப் பொறி.
கல்லல்: Confusion குழப்பம்.
கல்லலகு - கல்லலகு: Kind of musical instrument வாத்திய வகை.
கல்லவடம்: Kind of drum பறைவகை.
கல்லளை - கல்லறை: Cave மலைக் குகை.
கல்லன்: Wicked fellow தீயோன்.
கல்லு-தல்: To dig தோண்டுதல்; To cause to sound ஒலித்தல்.
கல்லூரி: Educational institution கல்வி பயிலும் இடம்.
கல்லெரிப்பு: A disease ஒரு நோய்.
கல்லை: Leaf cup தொன்னை.
கல்லோலம்: Wave அலை.
கல-த்தல்: To mix கூடுதல்; To spread பரத்தல்.
கலக்கம் - கலக்கு: Discomposure மனக் கலக்கம்; Distress துன்பம்; Terror அச்சம்.
கலக்கு: Joint பொருத்து.
கலங்கல்: Muddy water கலங்கல் நீர்; Toddy கள்.
கலலை-கலனை: Horse saddle சேணம்.
கலதி: Ruin கேடு; Villain தீயவன்.
கலபி: Peacock மயில்.
கலம்: Vessel பாத்திரம்; Boat மரக் கலம்; Jewel ஆபரணம்; Yāl யாழ்; Weapon ஆயுதம்; Document written on palm leaf ஓலைப்பத்திரம்.
கலமலக்கு-தல்: To stir உழக்குதல்.
கலர்: The vulgar கீழோர்; The wicked தீயோர்.
கலலம்: Thin membrane covering foetus கருவைச் சூழ்ந்த தோல்.
கலவம்: Peacock's tail மயிற்றோகை; Peacock மயில்; Woman's girdle பெண்கள் இடையணி; Boat தோணி.
கலவர்: Passengers of ship கப்பற் பிரயாணிகள்; Inhabitants of maritime tract நெய்தல் நில மக்கள்.
கலவிருக்கை: Pleasant abode இன்ப இருக்கை; Store house பண்டசாலை.
கலவினர்: Friends and relations உற்றார்.
கலவு: Joint of body உடலின் மூட்டுவாய்.
கலவை: Perfumed sandal paste சந்தனக் குழம்பு.
கலவை நீர்: Scented water வாச நீர்.
கலனம்: Prattling பிதற்றுகை.
கலாபம்: Kind of woman's girdle மாதர் இடையணி வகை; Peacock's tail மயிற்றோகை.
கலாய்-த்தல்: To quarrel கலகித்தல்; To get angry கோபித்தல்.
கலாவு-தல்: To be confused கலக்கமடைதல்; To be angry கோபமடைதல்.
கலி: Sound ஒலி; Haughtiness செருக்கு; Thriving தழைக்கை; Perturbation கலக்கம்; Animation மனவெழுச்சி; Kind of poetry பா வகை; Mishap துன்பம்; Poverty வறுமை; Deceit வஞ்சகம்.-த்தல்: To increase மிகுதல்; To be swift வேகமாதல்; To be dense நெருங்கியிருத்தல்; To drive செலுத்துதல்; To remove நீக்குதல்.
கலிகம்-கலிக்கம்: Pungent eye salve கண்ணில் இடும் மருந்து வகை.
கலிகோள்ளு-தல்: To be revealed வெளிப்படுதல்.

கலிங்கம்: Garment ஆடை.
கலிங்கு: Sluice மதகு.
கலிநடம்: Acrobatic performance கழைக் கூத்து.
கலியன்: Hungry man பசித்தவன்; Kalipurusha கலி புருஷன்.
கலிழ் - கலுழ்: Muddiness நீர்க்கலக்கம். - தல்: To move இடம் பெயர்தல்; To be disturbed கலங்குதல்; To join with பொருந்துதல்.
கலினம்: Bit of bridle கடிவாளம்.
கலுழன்: Kind of kite கருடன்.
கலை: Stag ஆண்மான்; Male black monkey ஆண் குரங்கு; Garment ஆடை; Saddle சேணம்; Portion பகுதி; Brightness ஒளி; Minute portion of time நுட்பமான கால அளவு; Arts and sciences எழுத்தும் எண்ணும்; Treatise நூல்; Language பாஷை; Body சரீரம்; Woman's girdle பெண்கள் இடையணி; Kind of camphor கர்ப்பூரவகை.
கலைக்கணாளர்: Ministers அமைச்சர்.
கவ்வு-தல்: To seize eagerly வௌவுதல்; Eating தின்கை.
கவ்வை: Sound ஒலி; Slander பழிச்சொல்; Affliction துன்பம்; Anxiety கவலை; Business காரியம்; Green sesamum seed எள் இளங்காய்.
கவடி: Kind of millet வெள் வரகு; Cowry பலகறை.
கவடு: Branch of tree மரக்கிளை; Division பகுப்பு; Fraud கபடம்.
கவடு வட்டம்: Kind of pearl முத்து வகை.
கவண்-கவணை: Sling கல் வீசும் கருவி.
கவந்தம்: Headless body தலையற்ற உடல்; Water நீர்.
கவந்தி-கவந்திகை: Quilt made of rags கந்தைகளாலான மெத்தைப் போர்வை.
கவய மா: Wild cow காட்டுப் பசு.
கவர்: Deception வஞ்சகம்.-தல்: To branch பிரிதல்; To seize பற்றுதல்; To rob கொள்ளையிடுதல்; To receive பெற்றுக் கொள்ளுதல்; To enjoy நுகர்தல்; To copulate முயங்குதல்; To summon அழைத்தல்; To deviate மாறுபடுதல்.
கவர்வு: Desire விருப்பம்; Sorrow துக்கம்.
கவரி: Buffalo எருமை; Yak tail fan சாமரை.
கவரிமா-கவரிமான்: Yak மான் வகை.

கவல் - கவல்வு - கவலம்: Anxiety விசாரம்.
கவலை: Distress மனச் சஞ்சலம்; Street junction தெருச் சந்தி; Diverging roads கவர்த்த வழி; Kind of creeper கொடி வகை.
கவவு: Being contained அகத்திடுகை; Contents உள்ளீடு; Embracing தழுவுகை. -தல்: To desire விரும்புதல்; To crowd நெருங்குதல்; To be connected பொருந்துதல்.
கவழம்-கவளம்: Morsel of food வாயளவுகொண்ட உணவு; Ball of food for elephant யானைக்கு அளிக்கும் உணவு.
கவளி-கவளிகை: Bundle கட்டு.
கவற்சி-கவற்றி: Anxiety விசாரம்; Desire விருப்பம்.
கவற்று மடி: Kind of silk பட்டாடை வகை.
கவறு: Dice சூதாடு கருவி; Gamble சூது.
கவனம்: Attention கவனிக்கை; Swiftness வேகம்.
கவாடம்: Door கதவு.
கவான்: Thigh தொடை; Mountain slope மலைப் பக்கம்; Multitude திரள்.
கவி: Poem பாட்டு; Poet பாவலன்; Sage ஞானி; Monkey குரங்கு.-தல்: To cover மூடுதல்; To be absorbed கருத்தூன்றுதல்; To break down இடிதல்.
கவிகை: Umbrella குடை; Good and evil நன்மை தீமை; Liberality வண்மை.
கவிசனை: Wrapper உறை.
கவிஞன்: Venus சுக்கிரன்.
கவித்தம்: Woodapple விளா; Closed fist முட்டி; Dance pose அபிநய வகை.
கவிர்: Indian coral tree முள் முருக்கு.
கவிரம்: Celestial tree தேவ தரு.
கவின்: Beauty அழகு.
கவுசனை: Wrapper உறை.
கவுசி: Kind of dance கூத்து வகை; Kind of disease நோய் வகை.
கவுசுகம்: Sāma Vēda சாமவேதம்.
கவுடம்: Hidden meaning மறை பொருள்.
கவுடி: Musical mode ஒரு பண்.
கவுத்துவம்: Jewel worn by Viṣṇu திருமால் மார்பில் அணியும் மணி; Guise வேஷம்.
கவுதாரி: Indian partridge பறவை வகை.
கவுரம்: Whiteness வெண்மை.

கவுள்: Cheek கன்னம்; Jaw of elephant யானையின் உள்வாய்; Side பக்கம்.
கவுளி: Lizard பல்லி.
கவை: Cleavage கவர்; Fork கவைக் கோல்.-தல்: To be உளதாதல்; To include அகத்திடுதல்; To embrace அணைத்தல்.
கவைக்கோல்: A burglar's instrument கொடிற்றுக்கோல்; Pike staff குத்துக் கோல்.
கவைத் தாம்பு: Noose சுருக்கிட்ட கயிறு.
கழகண்டு: Mischief தீம்பு.
கழகம்: Assembly சபை; Public school கல்விச்சாலை; Gambling house சூதாடும் இடம்.
கழங்கு: Molucca bean கழற்சிக்காய்.
கழஞ்சு: A weight ஓர் எடுத்தலளவை; A small quantity ஒரு சிற்றளவு.
கழப்பு: Laziness சோம்பல்.
கழல்: Anklet காலணி; Toe ring கால் விரல் மோதிரம்; Sandal செருப்பு; Foot பாதம்; Molucca bean creeper கழற்சிக் காய்க் கொடி.-தல் (கழலுதல்): To become loose நெகிழ்ந்து போதல்; To pass through ஊடுருவுதல்; To run away ஓடுதல்; To protrude பிதுங்குதல்; To fall விழுதல்.
கழறு-தல்: To thunder இடித்தல்; To declare solemnly பிரதிக்ஞை செய்தல்; To urge earnestly உறுதி சொல்லுதல்; To speak பேசுதல்; To be angry கோபித்தல்; To dishonour அவமதித்தல்.
கழனி: Field வயல்.
கழாய்க் கூத்து-கழைக் கூத்து: Pole dancing மூங்கிற் கம்பத்தின்மேல் நின்றாடும் கூத்து.
கழால்: Weeding களைகை.
கழி: Backwater உப்பங் கழி; Rod கோல்; Yoke pin நுகக்காற் குச்சி; Handle of tool ஆயுதக் காம்பு; Lath வரிச்சல்; Flesh மாமிசம்; Rope கயிறு.-தல்: To pass கடந்துபோதல்; To be abated குறைபடுதல்; To be ruined அழிதல்; To suffer வருந்துதல்; To resemble ஒத்தல்; To be much மிகுதல்.-த்தல்: To reject நீக்குதல்; To unsheath உருவுதல்.
கழிச்சியர்: Women of maritime tract நெய்தல் நிலப் பெண்டிர்.
கழிந்தோர்: Strong men வலிமிக்கோர்.
கழிப்பு-தல்: To spend போக்குதல்; To complete முடித்தல்.
கழி முள்ளி: Kind of plant முள்ளிச்செடி.
கழு: Impaling stake கழுமரம்; Device for controlling cow பசுவை அடக்கும் இணைப்புக் கழி; Eagle கழுகு.

கழுக்கடை: Spike சிறிய ஈட்டி; Trident சூலம்.
கழுச்காணி: Pestle உலக்கை; Stout fool அறிவற்ற தடியன்; Lotus தாமரை.
கழுத்து: Elevation or depression in floor for placing big pots பூமியில் பானை முதலியன வைத்தற்கேற்ற இடம்.
கழுதாழி-கழுதிரதம்: Mirage பேய்த்தேர்.
கழுது: Demon பேய் வகை; Elevated platform for guarding field காவற் பரண்.
கழுந்து: Rounded end, as of pestle or bow உலக்கை, வில் முதலியவற்றின் திரண்ட நுனி; Rashness முருட்டுத்தனம்.
கழுநீர்: Purple Indian water-lily செங்குவளை; Blue Indian water-lily நீலோற்பலம்; Sacred water புண்ணிய தீர்த்தம்.
கழுமம்: Fault குற்றம்.
கழுமல்: Confusion குழப்பம்.
கழுமலை: Mound of carcasses பிணக் குன்று.
கழுமு-தல்: To join சேர்தல்; To be fitting பொருந்தியதாதல்; To be full நிறைதல்; To be charmed மயங்குதல்.
கழுவாய்: Expiation பிராயச்சித்தம்.
கழுவு-தல்: To melt and mould வட்டாக உருக்குதல்.
கழை: Bamboo மூங்கில்; Flute வேய்ங் குழல்; Boat propelling rod ஓடக் கோல்; Elephant goad குத்துக் கோல்; Stem தண்டு.
கள்: Toddy மது; Honey தேன்; Bee வண்டு. -தல் (கட்டல்): To weed களைதல்; To steal திருடுதல்.
கள்வன் - களவன்: Crab நண்டு.
கள்ளப் பூமி: Pit trap பொய்க் குழிப் பொறி.
கள்ளம்: Deception வஞ்சனை; Lie பொய்; Stealing களவு; Ignorance அறியாமை.
களக்கம்: Fault குற்றம்.
களகம்: Sheaf of paddy நெற்கதிர்; Lime mortar சுண்ணாம்புச் சாந்து; Swan அன்னம்.
களகம்பளம்: Bull's dewlap எருத்தின் அலைதாடி.
களங்கம்: Fault குற்றம்; Mark அடையாளம்.
களஞ்சம்: Intoxicating drugs போதை வஸ்துக்கள்.
களஞ்சியம்: Barn தானியம் சேமிக்கும் இடம்.

**களபம்**: Mortar சுண்ணச் சாந்து; Perfumery கலவைச் சாந்து; Young elephant யானைக் கன்று.

**களம்**: Place இடம்; Threshing floor நெற்களம்; Assembly சபை; Hall of sacrifice யாகசாலை; Battle field போர்க் களம்; Melodious sound இன்னோசை; Throat தொண்டை.

**களமர்**: Inhabitants of agricultural tract மருத நில மக்கள்; Warriors வீரர்; Slaves அடிமைகள்.

**களர்**: Saline soil உவர் நிலம்; Bog சதுப்பு நிலம்.

**களரி**: Battle field போர்க்களம்.

**களவம்-களா**: A shrub செடிவகை.

**களாசம்**: Rattan பிரம்பு.

**களாசி-களாஞ்சி - காளாஞ்சி**: Spittoon தம்பலம் துப்பும் கலசம்.

**களி**: Joy மகிழ்ச்சி; Revel கள்ளுண்டு களிக்கை; Honey தேன்; Toddy கள்; Drunkard குடியன்; Arrogance செருக்கு; Elephant must யானை மதம்; Thick pulp குழம்பு; Gruel கஞ்சி; Liquid metal உருகின உலோகம். - த்தல்: To enjoy அநுபவித்தல்.

**களிகை**: Kind of necklace கழுத்தணி வகை.

**களிப்பு**: Mental delusion மயக்கம்.

**களிம்பு**: Verdigris செம்பின் மலப்பற்று; Blemish மாசு.

**களிற்றுயிர்-களிற்றுயிர் தூம்பு**: Kind of blow pipe பெருவங்கியம்.

**களிறு**: Bull elephant ஆண் யானை; Boar ஆண் பன்றி.

**களேபரம்**: Body உடம்பு; Bone எலும்பு; Corpse பிணம்.

**களை**: Weed பூடு; Defect குற்றம்; Weariness அயர்வு; Digit of moon சந்திர கலை; Beauty அழகு. - தல்: To pluck out பிடுங்கியெறிதல்; To tie up, as hair கட்டி முடிந்துகொள்ளுதல்.

**களைக்கோட்டு**: Weeding hook களை பறிக்குங் கருவி.

**களைகண்**: Support பற்றுக்கோடு.

**கற்கவி**: Portal stone கதவு நிலையின் மேற்கல்.

**கற்கி**: Temple கோயில்; Horse குதிரை.

**கற்குளி-த்தல்**: To dive for pearls முத்துக் குளித்தல்.

**கற்பகம்**: Celestial tree தெய்வலோகத் தரு வகை; Coconut tree தென்னை மரம்.

**கற்பணம்**: Javelin கைவேல்.

**கற்பம்**: Celestials' lifetime தேவர்க்குரிய வாழ்நாள் அளவு; Period of Brahma's life time பிரமன் வாழ்நாள்; Medicine to promote longevity ஆயுளை நீடிக்கச் செய்யும் மருந்து; Sacred ashes திருநீற்று வகை.

**கற்பன்**: Learned person கல்வியறிவாளி.

**கற்பனை**: Learning கல்வி; Teaching போதனை; Determination சங்கற்பம்; Command கட்டளை; Scheme காரிய ஏற்பாடு; Description வருணனை; Guile கபடம்; Imagination மனோசிருஷ்டி.

**கற்பி-த்தல்**: To create புதிதாக உண்டாக்குதல்; To arrange ஏற்பாடு செய்தல்; To teach போதித்தல்.

**கற்பிதம்**: Falsehood பொய்.

**கற்பு**: Chastity பதிவிரதா தர்மம்; Learning கல்வி; Meditation தியானம்; Workmanship வேலைப்பாடு; Vow சங்கற்பம்; Command ஆணை; Refuge கதி.

**கற்பொறி**: War machine placed on ramparts மதிற் பொறிவகை.

**கறங்கு**: Whirling சுழற்சி; Kite காற்றாடி. - தல்: To sound ஒலித்தல்; To surround சூழ்தல்.

**கறடு**: That which is short குள்ளமானது.

**கறம்**: Harshness கொடுமை.

**கறவு**: Tribute கப்பம்.

**கறவை**: Milch cow பால் கறக்கும் பசு.

**கறி**: Chewing மென்று தின்னுகை; Meat இறைச்சி; Pepper மிளகு.

**கறு**: Rancour குரோதம்.-த்தல்: To grow black கருமையாதல்; To mature முற்றுதல்; To get angry கோபித்தல்.

**கறுப்பு**: Anger வெகுளி; Fault குற்றம்; Scar தழும்பு.

**கறும்பு-தல்**: To torment துன்புறுத்தல்.

**கறுவு-தல்**: To entertain malice குரோதங் கொள்ளுதல்.

**கறுழ்**: Bridle கடிவாளம்.

**கறை**: Stain மாசு; Fault குற்றம்; Blackness கருமை; Darkness இருள்; Poison விஷம்; Blood இரத்தம்; Menstruation மாதவிடாய்; Mortar உரல்; Tax வரி.

**கறையடி**: Elephant யானை.

**கன்**: Workmanship வேலைப்பாடு; Copper செம்பு; Small scale pan சிறு தராசுத் தட்டு.

**கன்கூட்டு**: Cave கற்சுருங்கை.

கன்மி: Labourer தொழிலாளி; Official உத்தியோகஸ்தன்.

கன்று: Young of certain animals ஒரு சார் விலங்குகளின் குட்டி; Sapling மர நாற்று; Bracelet கைவளை.-தல்: To mature முதிர்தல்; To get accustomed அடிப்படுதல்; To feel compassion மனம் உருகுதல்; To suffer வருந்துதல்; To fade வாடுதல்.

கன்னக்கிருமி: Kind of disease நோய் வகை.

கன்னகம்-கன்னக்கோல்: Iron crow of thieves கள்ளர் கருவி.

கன்னசாலை: Balcony மாளிகையின் முகப்பு முற்றம்.

கன்னம்: Small image சிறு படிமம்; Ear காது; Cheek கதுப்பு; Theft களவு; Honour பெருமை.

கன்னல்: Earthen pot மட்பாண்டம்; Hour-glass நாழிகை வட்டில்; Measure of time நாழிகை; Sugar-cane கரும்பு;

கன்னி: Virgin குமரி; Youthfulness இளமை; Freshness புதுமை; Earliest action முதல் நிகழ்ச்சி; Imperishable state அழிவின்மை; Durga துர்க்கை; Tubular vessel of human body தச நாடியில் ஒன்று.

கன்னிகாரம்: Kind of tree கோங்கு.

கன்னெசி: Kind of disease நோய் வகை.

கன - கனு: Dream கனவு.

கனகம்: Gold பொன்.

கனகி: Thorn apple ஊமத்தை.

கனதை: Honour கௌரவம்.

கனப்பாடு: Expanse அகற்சி.

கனம்: Fimness உறுதி; Cloud மேகம்; Gold பொன்.

கனல்: Fire நெருப்பு.-தல் (கனலுதல்): To boil கொதித்தல்; To be angry சினத்தல்; To redden சிவத்தல்; To burn சுடுதல்.

கனலி: Sun சூரியன்; Hog பன்றி.

கனவட்டம்: Horse குதிரை.

கனவு: Sleep நித்திரை.

கனற்கோடி: Comet தூமகேது.

கனற்று-தல்: To shine brightly மிக விளங்குதல்.

கனனம்: Digging கல்லுகை.

கனி: Ripeness கனிவு; Fruit பழம்; Essence சாரம்; Sweetness இனிமை.-தல்: To grow tender இளகுதல்.

கனிட்டன்: Younger brother தம்பி.

கனிட்டை: Younger sister தங்கை; Little finger சுண்டுவிரல்.

கனிய: Wholly முழுவதும்.

கனை: Abundance மிகுதி.-தல்: To be crowded நெருங்குதல்; To be intense மிகுதல்; To sound ஒலித்தல்.-த்தல்: To mature திரளுதல்; To proceed eagerly முண்டு செல்லுதல்.

### கா

கா: Pleasure grove சோலை; Balancing pole காவடித் தண்டு; A weight ஒரு நிறை; Flower basket பூக்கூடை; Sarasvati கலைமகள். - த்தல்: To protect பாதுகாத்தல்; To restrain தடுத்தல்.

காகளம்: Trumpet எக்காளம்.

காதளி: Harsh demoniac sound பேய்க் குரல்.

காகோதம்-காகோதரம்: Snake பாம்பு.

காங்கி: Avaricious person பேராசைக் காரன்.

காங்கிசை: Desire விருப்பம்.

காங்கு: Dark blue colour கருநீல நிறம்.

காசம்: Sky ஆகாயம்; Cataract கண்ணோய்வகை; Kind of disease நோய் வகை.

காசறை: Musk - deer கஸ்தூரிமான்; Musk கஸ்தூரி; Pomatum மயிர்ச்சாந்து.

காசா-காயா-காசை: Iron wood tree மரவகை.

காசினி: Earth பூமி.

காசு: Defect குற்றம்; Gold பொன்; Necklace of gold coins காசுமாலை; Small coin நாணய வகை; Cash ரொக்கம்; Gem மணி; Women's girdle மேகலாபரணம்; Red ochre காவி.

காஞ்சி: River portia ஆற்றுப் பூவரசு; Instability நிலையாமை; Women's girdle மேகலாபரணம்; Hair கூந்தல்.

காஞ்சிரம்-காஞ்சிரை: Nux vomica எட்டிமரம்.

காஞ்சுகன்-காஞ்சுகி: King's bodyguard மெய்காப்பாளன்.

காட்சி: Sight கண்ணுறல்; Appearance தோற்றம்; Perception பிரத்தியட்சப் பிரமாணம்; Beauty அழகு; Nature தன்மை; Doctrine கோட்பாடு.

காட்டு: Rubbish குப்பை; Illustration உதாரணம்; Means துணைக்கருவி.-தல்: To create உண்டாக்குதல்.

காடி: Vinegar புளித்த கள்; Gruel கஞ்சி; Pickles ஊறுகாய்; Ghee நெய்;

Neck கழுத்து; Neck like elevation on floor தரையில் கழுத்துப் போல் அமைக்கப்பட்ட மேடை.

**காடு**: Place இடம்; Density நெருக்கம்; Burning ground சுடுகாடு.

**காடை**: Kind of bird பறவை வகை.

**காண்**: Sight காட்சி; Beauty அழகு. -தல் (காணுதல்): To create உண்டாக்குதல்; To regard மதித்தல்; To put to flight புறங்காணுதல்; To attain பெறுதல்; To resemble ஒத்தல்; To be fit பொருந்துதல்.

**காண்கையன்**: Learned man அறிஞன்.

**காண்டம்**: Water நீர்; Canto நூலின் பெரும் பிரிவு.

**காண்வரி**: Kind of dance கூத்து வகை.

**காண்வா-தல் (காண் வருதல்)**: To come into view கண்ணுக்குத் தெரிதல்.

**காணம்**: Gold coin பொற்காசு வகை; Wealth பொருள்; Share பாகம்; Oil press செக்கு.

**காணன்**: One eyed man ஒற்றைக் கண்ணன்.

**காணி**: A fraction ஒரு பின்ன எண்; Land measure நில அளவு; Right உரிமை; A weight ஒரு நிறை.

**காணிக்கை**: Debt கடன்; Present to guru or great person கையுறை.

**காத்திரம்**: Body உடல்; Elephant's fore-leg யானையின் முன்னங்கால்; Corpulence பருமன்.

**காத்தூலம்**: Kind of garment ஆடை வகை.

**காதம்**: Distance of about 10 miles சுமார் பத்து மைல் தூரம்.

**காதரம் - காதரவு**: Fear அச்சம்; Effect of evil deeds தீவினைத் தொடர்பு.

**காதல்**: Affection அன்பு; Desire வேட்கை.

**காது**: Grove in sling in which stone is placed கவணில் கல் வைக்கும் இடம். -தல்: To kill கொல்லுதல்; To cut வெட்டுதல்.

**காதை**: Story சரித்திரம்; Chapter நூற் பகுதி.

**காந்தர்ப்பம் - காந்தருப்பம் - காந்தருவம்**: Kind of marriage மண வகை.

**காந்தள்**: Kind of flower பூ வகை.

**காந்தன்**: Husband கணவன்.

**காந்தாரம்**: One of seven musical notes ஏழிசைகளுள் ஒன்று; Secondary melody யாழ்த் திறம்.

**காந்து-தல்**: To burn எரிதல்; To shine பிரகாசித்தல்; To be angry கோபித்தல்.

**காந்தை**: Wife மனைவி; Woman பெண்.

**காப்பு**: Protection பாதுகாவல்; Sacred ashes திருநீறு; Bangle வளை; Prison சிறை; Objects of enjoyment போக்கியம்.

**காம்பு**: Flower or leaf stalk இலை, பூ முதலியவற்றின் தாள்; Handle கைப்பிடி; Bamboo மூங்கில்; Border of cloth ஆடைக் கரை; Kind of silk cloth பட்டாடை வகை.

**காமகாண்டம்**: Kind of flower பூ வகை.

**காமம்**: Desire விருப்பம்; Sexual pleasure புணர்ச்சி இன்பம்.

**காமர்**: Desire விருப்பம்; Beauty அழகு.

**காமரம்**: A musical mode ஒரு பண்.

**காமவல்லி**: Kind of creeper கற்பகத்தில் படரும் கொடி.

**காமவாயில்**: Love இயற்கை அன்பு.

**காமன்**: Indian cupid மன்மதன்; Kind of dance கூத்து வகை.

**காமுறு-தல்**: To desire ஆசைப்படுதல்: To beseech வேண்டிக்கொள்ளுதல்.

**காய்**: Deceit வஞ்சனை. -தல்: To be wearied களைத்தல்; To burn சுடுதல்; To dislike வெறுத்தல்; To be angry வெகுளுதல். - த்தல்: To be of ripe experience அநுபவம் முதிர்தல்.

**காயக்கம் - காயகம்**: Stupor due to lust மோக மயக்கம்.

**காயகன்**: Musician பாடகன்.

**காயம்**: Pepper மிளகு; Bits of vegetables in soup குழம்புத் தான்; Curry stuffs கறிச் சம்பாரம்; Maturity முதிர்வு; Scar வடு; Body உடல்; Sky ஆகாயம்; Asafoetida பெருங்காயம்; Permanence நிலைபேறு.

**காயல்**: Backwater கழி.

**கார்**: Blackness கருமை; Cloud மேகம்; Rain மழை; Rainy season மழைக்காலம்; Paddy harvested in rainy season கார்காலத்தில் விளையும் நெல்; Black leprosy கருங்குட்டம்; Darkness இருள்; Freshness பசுமை; Ripeness முதிர்ச்சி. -த்தல்: To bud அரும்புதல்; To hate வெறுத்தல்.

**கார்கோள்**: Sea கடல்.

**கார்முகம்**: Bow வில்.

**காரகம்**: **காராகிருகம்** Prison சிறை.

**காரணிகன்**: Arbitrator மத்தியஸ்தன்.

காரம்: Ruin அழிவு; Sacred ashes திருநீறு; Act தொழில்.
காரா: Buffalo எருமை.
காரி: Blackness கருமை; Saturn சனி; Venom நஞ்சு; Doer செய்பவன்.
காரிகை: Woman பெண்; Beauty அழகு; Ornament அலங்காரம்.
காரிடம்: Rainy season கார் காலம்.
காரு - காருவாகன்: Washerman வண்ணான்.
காருகபத்தியம்: One of three sacred fires வேதாக்கினி மூன்றனுள் ஒன்று.
காருகவடி: Position of planet கிரக நிலே.
காருகன்: Weaver நெசவுகாரன்.
காருகரல்: Incensory தூபமுட்டி.
காருடம்: Green stone பச்சைக் கல்.
காரை: A thorny shrub முட்செடி வகை; Cloth ஆடை; Mortar சுண்ணச் சாந்து.
காரோடன்: Whetstone maker சாணைக் கல் செய்வோன்.
கால்: Quarter நாலில் ஒன்று; Lower part அடிப்பாகம்; Wheel சக்கரம்; Cart வண்டி; Handle கைப்பிடி; Post தூண்; Source பிறப்பிடம்; Channel வாய்க்கால்; Division பிரிவு; Pace நடை; Place இடம்; Point முனை; A measure மரக்கால்; Ray கிரணம்; Wind காற்று; Rheumatism வாத ரோகம்; Five elements பஞ்ச பூதம்; Time பொழுது; Bloom செவ்வி; Turn தடவை; Black colour கருநிறம்.-தல் (காலுதல்): To flow out வெளிப்படுதல்; To leap forth குதித்தல்; To reveal தோற்றுவித்தல்.
கால்கிளர்-தல்: To invade படையெடுத்தல்.
கால்கொள்-தல் (கால்கொள்ளுதல்): To commence தொடங்குதல்; To mount ஆரோகணஞ் செய்தல்.
கால்தாழ்-தல்: To be absorbed ஈடுபடுதல்; To be drowned மூழ்கிவிடுதல்.
கால்பரி-தல்: To break as rope அறுபடுதல்.
கால்யா-த்தல்: To be crowded நெருங்குதல்; To conceal மறைத்தல்; To store water தேக்குதல்.
கால்வழி: Lineage வமிசம்.
காலஞ் செய் - காலஞ் செல் - தல் (காலஞ் செல்லுதல்): To die மரணமடைதல்.
காலதர்: Window ஜன்னல்.
காலமேகம்-காளமேகம்: Black cloud கார் மேகம்.
காலன்: Yama எமன்; Yama's messenger எம தூதன்.
காலாறு-தல்: To be prosperous செழித்திருத்தல்.
காலாந்தரம்: Different occasion வேறுபட்ட காலம்.
காலி: Herd of cows பசு மந்தை; Cow பசு; Vicious life துன்மார்க்கம்; Vacancy வெறுமை.
காலேகம்: Pearl முத்து.
காலேசம் - காலேயம்: Eaglewood அகில்.
காலை: Time பொழுது; Lifetime வாழ் நாள்; Opportunity தருணம்; Turn முறை; Early morning விடியற்காலம்; Sun சூரியன்; Day பகல்; Waking drum பள்ளியெழுச்சி முரசம்.
காவணம்: Pandal பந்தல்; Grove சோலை; Open hall மண்டபம்.
காவதன்: Kind of dance கூத்து வகை.
காவல்: Defence பாதுகாப்பு; Armour கவசம்; Prison சிறை.
காவலன்: King அரசன்; Husband கணவன்.
காவற்கணிகை: Class of dancing girls களத்தாடும் கூத்தி.
காவற்பெண்டு: Nurse செவிலி.
காவன் மரம்: Sacred tree of ruler அரசர் தம் குலதெய்வம்போல் காக்கும் மரம்.
காவி: Red ochre காவிக்கல்; Blue nelumbo கருங்குவளை மலர்.
காவிதி: A title ஒரு பட்டம்.
காவு-தல்: To carry on shoulder தோளிற் சுமத்தல்; To long for இச்சித்தல்.
காவோலை: Ripe palm leaf முற்றிய ஓலை.
காழ்: Core மர வைரம்; Staple கட்டுத்தறி; Pillar தூண்; Oar தடுப்பு; Iron rod இரும்புக் கம்பி; Elephant goad அங்குசம்; Handle காம்பு; Rafter வரிச்சல் கழி; Gem மணி; Pearl முத்து; Garland of gems மணி மாலை; Garland of flowers பூ மாலை; Thread, string நூற்சரடு; Seed விதை; Kernel கொட்டை; Blackness கருமை; Blemish குற்றம்; Piece of wood மரத்துண்டு.-த்தல்: To mature முதிர்தல்; To abound அளவு கடந்து மிகுதல்.
காழ்ப்பு: Essence சத்து.

**தானவர்:** Asuras அசுரர்; A class of celestial musicians வித்தியாதரர்.
**தானுத்திபதி-தானுபதி:** Commander படைத்தலைவன்.
**தானை:** Army சேனை; Cloth ஆடை; Stage curtain நாடகத் திரை.
**தானைமாலை:** A prapanta பிரபந்த வகை.

## தி

**திக்கரி-த்தல்:** To shun திராகரித்தல்.
**திக்கிராந்தம்:** Kind of dance கூத்து வகை.
**திகம்பரம்:** Nakedness நிர்வாணம்.
**திகழ்-தல்:** To shine பிரகாசித்தல்; To be eminent சிறப்பு மிகுதல்.
**திகிரி:** Circle வட்டம்; Royal authority அரசாணை; Sun சூரியன்.
**திகை:** Direction திக்கு. -த்தல்: To subside அடங்குதல்; To be exhausted சோர்தல்.
**திங்கள் மணி:** Moonstone சந்திர காந்தக் கல்.
**திங்கள்:** Moon சந்திரன்; Month மாதம்.
**திசை-த்தல்:** To be bewildered மயங்குதல்.
**திட்கு-தல்:** To get troubled in mind மனங்குலைதல்.
**திட்டி:** Sight பார்வை.
**திட்பம்:** Solidity உறுதி; Strength வலிமை.
**திடம்:** Strength வலிமை; Certainty உறுதி.
**திடல்:** Open space வெளியிடம்.
**திடுக்கம்:** A disease நோய் வகை.
**திண்டி:** Bulk பருமன்.
**திண்டிமம்-திடிமம்:** Kind of drum பறை வகை.
**திண்ணகம்:** Polishing tool மெருகிடுங் கருவி வகை.
**திண்ணம்:** Certainty நிச்சயம்; Strength வலிமை; Tightness இறுக்கம்.
**திண்மை:** Strength வலிமை.
**திணர்:** Denseness செறிவு.
**திணி:** Solidity திட்பம்; Denseness செறிவு.
**திணுங்கு-தல்:** To become dense செறிதல்; To congeal உறைதல்.
**திணை:** House வீடு; Tribe குலம்; Region பிரதேசம்; Conduct ஒழுக்கம்.
**தித்தி:** Bellows துருத்தி; Yellow spots on skin தேமல்.
**தித்தியம்:** Sacrificial pit வேள்விக் குண்டம்.
**திதலை:** Yellow spots on skin தேமல்; Paleness வெளிறு.
**திதி:** Stability நிலைபேறு; Preservation காப்பு.
**திதை-தல்:** To spread பரவுதல்.
**திப்பியம்:** Divine quality தெய்வத் தன்மை; Heaven சுவர்க்கம்.
**திப்பை:** Mound மேடு.
**திமிசு:** Kind of tree வேங்கை மரம்.
**திமிதம்:** Dancing கூத்து.
**திமிர்-தல்:** To smear பூசுதல்; To scatter சிதறுதல்; To tremble நடுங்குதல். -த்தல்: To determine நிச்சயித்தல்; To beat அடித்தல்.
**திமிரம்:** Blackness கருநிறம்.
**திமில்:** Fishing boat மீன் படகு; Great noise பேரொலி; Hump முசுப்பு.
**தியக்கம்:** Exhaustion சோர்வு.
**திரங்கு-தல்:** To shrivel சுருங்குதல்; To curl up சுருளுதல்; To droop தளர்தல்.
**திரணம்:** Straw துரும்பு; Dried leaves செத்தை.
**திரள்:** Ball உண்டை; Kind of song பாடல் வகை.
**திரி:** Grinding stone திரிகை.-தல்: To whirl சுழலுதல்; To return திரும்புதல்; To change வேறுபடுதல்; To abandon கைவிடுதல். - த்தல்: To cut வெட்டுதல்.
**திரிகை:** A dance gesture நாட்டியப் பிடி வகை.
**திரிசொல்:** Literary word இலக்கியச் சொல்.
**திரிபதாகை:** A dance gesture நாட்டியப் பிடி வகை.
**திரிபதை:** Kind of song இசைப்பா வகை.
**திரிபன்றி:** Whirling target இலக்கு வகை.
**திரிபு:** Change வேறுபாடு.
**திரிமரம்:** Wooden grinder மரத் திரிகை.
**திரு:** Goddess of wealth இலக்குமி; Wealth செல்வம்; Beauty அழகு; Brilliance ஒளி; Fertility செழுமை; Fortune பாக்கியம்; Good karma நல்வினை; Astrologer சோதிடன்; Wedding badge மாங்கலியம்.
**திருக்கு:** Twist முறுக்கு; A garment ஆடை வகை; Crookedness of mind மாறுபாடு; Difficulty சங்கடம்.
**திருக்கை வழக்கம்:** Distribution of offerings to worshippers தெய்வப் பிரசாதம் வழங்குகை; Fixed allowance for

daily routine service in temple கோயில் படித்தரம்.

திருக்கோசகம்: Kind of ornament அணி வகை.

திருக்கோள்கை: Kind of ornament அணி வகை.

திருகு-தல்: To braid, as hair பின்னுதல்; To be intense முறுகுதல்; To be perverse மாறுபடுதல்.

திருச்சந்தம்: Kind of ornament அணி வகை.

திருச்சரி: Kind of ornament அணி வகை.

திருச்சுற்றுமாளிகை: Porches surrounding inner shrine of temple திருமாளிகைச் சுற்று.

திருச்சேந்நடை: Current expenses of temple கோயிலின் நடப்புச் செலவு.

திருஞானம்: Sacred hymns திருப்பாட்டு; Sweet food பாற் சோறு.

திருத்து: Land brought under cultivation சாகுபடிக்கு வந்த நிலம். -தல்: To perform well செம்மையாகச் செய்தல்; To supervise மேற்பார்த்தல்.

திருந்து-தல்: To be finished தொழில் முற்றுதல்; To be beautiful அழகு பெறுதல்.

திருப்புறக்கோடை: Backyard பின் பக்கத்து முற்றம்.

திருமஞ்சனம்: Bath of idol அபிஷேகம்.

திருமணுத்தானம்: Gift made after bath தலை முழுகியபின் செய்யும் தானம்.

திருமந்திரஓலை: Kings ministerial officer இராச காரியஸ்தன்.

திருமால்: King அரசன்.

திருமு-தல்: To turn திரும்புதல்.

திருமுகத்தேவை: Personal services in temple or palace கோயில், அரண்மனைகளிற் செய்யும் வேலை.

திருமுகம்: Letter நிருபம்; Royal order அரசரது சாசனம்.

திருவடி: The deity சுவாமி; Sage முனிவன்; Hanuman அநுமன்; Garuda கருடன்.

திருவடிநிலை: Sandals பாதுகை.

திருவாடுதண்டு: Kind of palanquin பல்லக்கு வகை.

திருவாய்க் கேள்வி: Royal order அரசாணை; Investigation by king இராச விசாரணை.

திருவாழிக்கல்: Boundary stone எல்லைக் கல்.

திருவிடு: Deed of endowment தான சாசனம்.

திருவிடையாட்டம்: Temple endowment தேவதான மானியம்.

திருவில்: Rainbow வானவில்.

திரை: Wrinkle உடற்றோலின் சுருங்கல்; Wave அலை; Roll of betel leaves வெற்றிலைச் சுருள். -தல்: To float on water மிதத்தல்; To coagulate திரிதல்; To be drifted into heaps திரளுதல். -த்தல்: To contain தன்னுள் அடக்குதல்; To plait ends of cloth ஆடை கொய்தல்; To hug அணைத்தல்; To lie படுத்தல்.

திரைப்பு: Place screened by curtain திரையால் மறைத்த இடம்.

தில்லம்: Forest காடு.

தில்லை: Kind of tree மர வகை.

திலகம்: Kind of tree மர வகை. Circular mark on forehead நெற்றிப் பொட்டு; That which is excellent சிறந்தது.

திவசம்: Day நாள்.

திவலை: Small drop சிறு துளி.

திவவு: Bands of catgut in yāḻ யாழின் நரம்புக்கட்டு.

திவள்-தல் (திவளுதல்): To be supple துவளுதல்; To fade வாடுதல்; To swing அசைதல்; To shine விளங்குதல்; To sport, as in water நீர் முதலியவற்றில் திளைத்தல்; To gladden by touch தொட்டு இன்புறுத்தல்.

திவாகரன்: Sun சூரியன்.

திவி: Heaven சுவர்க்கம்.

திளை-த்தல்: To be close நெருங்குதல்; To swing அசைதல்; To play விளையாடுதல்; To dive முழுகுதல்; To flow இடைவிடாது ஒழுகுதல்; To rejoice மகிழ்தல்; To fight போர் செய்தல்.

திற்றி: Meat இறைச்சி.

திறம்: Constituents கூறுபாடு; Party சார்பு; A secondary melody type இசை வகை; Way வழி; History வரலாறு; Family குலம்; Relations சுற்றம்; Body உடம்பு; Garb வேடம்; Doctrine கோட்பாடு; Quality இயல்பு; Matter விஷயம்; News செய்தி; Wealth பாக்கியம்; Crowd கூட்டம்; Excellence மேன்மை; Moral conduct ஒழுக்கம்.

திறம்பு-தல்: To change மாறுபடுதல்.

திறல்: Victory வெற்றி; Lustre ஒளி.

திறலோன்: A male aged 15 பதினைந்தாண்டுள்ளவன்.

திறவு: Open space வெளியிடம்; Cause காரணம்.

திறவோன்: Person of discrimination அறிவுள்ளவன்.

திறை: Tribute கப்பம்.

தின்-தல் (தின்னுதல்): To cut வெட்டுதல்; To receive பெறுதல்.

தின்மை: Evil தீமை; Death சாவு.

தினம்: Constellation நட்சத்திரம்.

தினமணி: Sun சூரியன்.

## தீ

தீ: Lamp விளக்கு; Anger கோபம்; Evil தீமை; Hell நரகம்.

தீக்கலம்: Funeral pyre ஈமப்பள்ளி.

தீஞ்சேறு: Molasses இனிய பாகு.

தீட்டு: Hand note சீட்டு; Plastering பூச்சு; Touching தொடுகை.-தல்: To smooth, as hair கோதுதல்; To draw picture சித்திரித்தல்; To express சொல்லுதல்; To wear சாத்துதல்.

தீண்டல்: Field வயல்.

தீது: Evil தீமை; Fault குற்றம்; Suffering துன்பம்; Body உடம்பு.

தீந்தொடை: String of yāḻ யாழ் நரம்பு; Bee hive தேன்கூடு.

தீ நாய்: Dog that frequents burning ground மயானத்தில் திரியும் நாய்.

தீநீர்: Pure water நன்னீர்.

தீபகம்: Lamp விளக்கு.

தீபம்: Island தீவு.

தீபனம்: Stimulant அதிகப்படுத்துவது; Hunger பசி.

தீம்: Sweetness இனிமை.

தீம்பு: Wickedness துஷ்டத்தனம்; Evil கேடு.

தீம்புழல்: Sweet pastry இனிய பணிகாரம்; Mahua flower இருப்பைப் பூ.

தீம்புளி: Tamarind cured with jaggery கருப்புக்கட்டி கூட்டிப் பொரித்த புளி.

தீம்பூ: A tree மர வகை; A spice ஒரு வாசனைத் திரவியம்.

தீமானம்: Disgrace மானக்கேடு.

தீமுறை: Fire sacrifice அக்கினியிற் செய்யும் ஓமம்.

தீர் - தல்: To be completed முற்றுதல்; To exceed மிகுதல்; To perish அழிதல்; To pass கழிதல்; To belong உரிமையாதல்; To leave விடுதல்.-த்தல்: To finish முடித்தல்.

தீர்த்தகரர்-தீர்த்தங்கரர்: Jaina Arhats ஜைனருள் அருக பதவியை அடைந்தவர்.

தீர்த்தம்: Purity பரிசுத்தம்.

தீர்வு: Result முடிவு; Expiation பிராயச்சித்தம்.

தீர்வை: Mongoose கீரிப்பிள்ளை.

தீரம்: Shore கரை.

தீற்று-தல்: To smear பூசுதல்.

தீன்: Food தீனி.

தீனம்: Poverty வறுமை.

## து

து: Food உணவு.

துக்கம்: Consumption க்ஷயரோகம்.

துகள்: Dust தூள்; Fault குற்றம்.

துகிர்: Red coral பவளம்.

துகிரிகை-துகிலிகை: Painter's brush சித்திரமெழுதும் கோல்.

துகில்: Fine cloth மெல்லாடை.

துகின்மனை: Tent கூடாரம்.

துத-தல்: To be gathered தொகுதியாதல்.

துங்கம்: Height உயர்ச்சி; Purity பரிசுத்தம்.

துச்சம்: Lowness இழிவு; Instability நிலையின்மை.

துச்சில்: Shelter ஒதுக்கிடம்.

துசம்-துவசம்: Flag கொடி.

துஞ்சரி-த்தல்: To wake up கண் விழித்தல்.

துஞ்சு-தல்: To sleep தூங்குதல்; To hang தொங்குதல்; To be indolent சோம்புதல்; To die சாதல்; To diminish குறைதல்; To abide தங்குதல்; To settle permanently நிலைபெறுதல்; To become solidified உறைதல்.

துஞ்சுமரம்: Wooden bolt கணையமரம்.

துஞ்சை: Kind of hair dressing கூந்தல் முடிக்கும் வகை.

துட்கு: Fear அச்சம்.

துடக்கு: That which entangles தன்னகப்படுத்துவது; Connection சம்பந்தம்.

துடி: Speed வேகம்; A small drum உடுக்கை; Kind of dance கூத்து வகை; Unguent for hair மயிர்ச்சாந்து.

துடிப்பு: Arrogance கருவம்; Anger கோபம்; Brandishment வீச்சு.

துடியடி: Young of elephant யானைக் கன்று.

துடும்பு-தல்: To heave and flow ததும்புதல்; To combine கூடுதல்.

துடுமை: Kind of drum பறை வகை.

துடுவை: Ghee ladle நெய்த்துடுப்பு.

துண்டம்: Beak பறவை அலகு; Nose மூக்கு.

துணங்கை: Kind of dance கூத்து வகை.

துணர்: Bunch கொத்து.

துணி: Piece துண்டு.-தல்: To become clear தெளிவாதல்; To determine நிச்சயித்தல்; To commence தொடங்குதல்.
துணிவு: Doctrine கொள்கை.
துணுக்கம்: Fear அச்சம்.
துணை: Two இரண்டு; Companion கூட்டாளி; Comparison ஒப்பு; Measure அளவு; Conjugal union புணர்ச்சி; Until வரை.-த்தல்: To string, as garland மாலை முதலியன கட்டுதல்.
துணையல்: Garland பூமாலை.
துத்தம்: Second note of gamut இரண்டாம் சுரம்; A scent ஒரு வாசனைப் பொருள்.
துத்தரி: Kind of bugle ஊது கொம்பு வகை.
துத்தி: Streaky spots on skin வரித் தேமல்; Spots on hood of cobra பாம்பின் படப் புள்ளி.
துத்துரு: Kind of ornament ஆபரண வகை.
துதி: Sharp edge நுனி; Fame புகழ்; Bellows துருத்தி; Sheath உறை.
துதை: Denseness நெருக்கம்.
துந்தி: Navel தொப்புள்.
துந்துபி-துந்துமி: Large drum பேரிகை.
துப்பம்: Ghee நெய்.
துப்பு: Strength வலிமை; Ability சாமர்த்தியம்; Greatness பெருமை; Good நன்மை; Support பற்றுக்கோடு; Instrument கருவி; Enjoyment நுகர்ச்சி; Food உணவு; Purity தூய்மை; Enmity பகைமை; Red coral பவளம்.
துப்புரவு: Ability சாமர்த்தியம்; Gratification of senses ஐம்பொறி நுகர்ச்சி; Purity சுத்தம்; Experience அநுபவம்.
தும்பி: Elephant யானை; Bee வண்டு; Calabach சுரை.
தும்பு: Fault குற்றம்; Frayed ends, as of gut நரம்பு முதலியவற்றின் பிசிர்; Rope கயிறு.
தும்புரு: Kind of yāḻ யாழ் வகை.
தும்பை: Flower worn by warrior engaged in battle வீரர் போரில் அணியும் அடையாளப் பூ; A major theme of purapporuḷ புறத் திணை வகை; Kind of grain தானிய வகை.
துமி: Cut வெட்டு; Drop of water நீர்த்துளி.-தல்: To spit உமிதல்.-த்தல்: To keep off விலக்குதல்.
துமிலம்: Din பேராரவாரம்.

துய்: Food உணவு; Cotton பஞ்சு; Soft end of cotton thread பஞ்சு நூலின் நுனி; Soft part மெல்லிய பகுதி; Fibre நார்; Sharpness கூர்மை.-த்தல்: To enjoy அநுபவித்தல்.
துயக்கு: Fatigue சோர்வு; Confusion மனக்குழப்பம்; Sorrow துக்கம்; Bondage பந்தம்; Desire ஆசை.
துயர்: Sorrow துன்பம்.
துயரி: yāḻ string யாழ் நரம்பு.
துயல்:தல் (துயலுதல்): To wave அசைதல்; To hang தொங்குதல்; To fly பறத்தல்.
துயவு: Confusion மனக்குழப்பம்.
துயில்: Sleep உறக்கம்; Dream கனவு; Death சாவு; Abiding தங்குகை; Cohabitation புணர்ச்சி.
துர-த்தல்: To drive ஓட்டிச் செலுத்துதல்; To shoot, as arrow எய்தல்; To dispel போக்குதல்; To urge தூண்டுதல்; To beat அடித்தல்; To try முயலுதல்; To blow வீசுதல்; To burn எரிதல்.
துரக்கு: Doubt ஐயம்.
துரகதம்-துரகம்: Horse குதிரை.
துரந்தரன்: Conqueror வென்றவன்.
துரப்பு-தல்: To seek தேடுதல்.
துரம்: A musical instrument வாத்திய வகை.
துரவு: Large well இறைவைக் கிணறு.
துராய்: Quitch grass rope அறுகம் புல்லால் ஆன புரி.
துரால்: Rubbish செத்தை.
துரி: Burden பாரம்.-தல்: To search தேடுதல்.
துரிசு: Fault குற்றம்.
துரிதம்-துரியம்-துருசு: Speed வேகம்.
துரு: Flaw குற்றம்; Sheep செம்மறியாடு.
துருக்கல்: Iron stone செம்புறைக் கல்.
துருத்தி: Ait ஆற்றிடைக் குறை; A throw in dice சூதாட்டத்தில் ஒரு வீச்சு; Leather bag தோற் பை; Water squirt நீர் வீசுங் கருவி; A musical instrument இசைக் கருவி வகை.
துருப்புக்கூடு: Unwinnowed heap of grain தூற்றாத தானியக் குவியல்.
துருவம்: Resemblance ஒப்பு.
துருவு: Searching தேடுகை.
துருவை: Piece of musical composition கீத உறுப்பு வகை; Sheep செம்மறியாடு.
துரை: Speed வேகம்; Abundance மிகுதி.

துரோணம்: A measure of capacity 2 மரக்கால் கொண்ட அளவை.
துல்லியம்: Resemblance ஒப்பு; Exactness சரி.
துலங்கு-தல்: To be clear தெளிவாதல்; To shine பிரகாசித்தல்; To swing தொங்கி அசைதல்; To be disturbed நிலை கலங்குதல்.
துலா - துலாக்கோல் - துலாம் - துலை: Balance தராசு.
துலாம்: Main beam in house roof துலாக்கட்டை; Ornamental portion in pillar capital போதிகையின் அலங்கார உறுப்பு.
துலுக்கு: Gesticulation of head or body குலுக்கு.
துலை: Resemblance ஒப்பு.
துவ்வாமை: Poverty வறுமை.
துவ்வு: Food உணவு.-தல்: To eat நுகர்தல்; To leave நீங்குதல்.
துவக்கு: Tie கட்டு; Connection தொடர்பு; Skin தோல்.-தல்: To fascinate வசீகரித்தல்.
துவட்டு-துவட்டல்: Kind of curry கறி வகை.
துவர்: Astringency துவர்ப்பு; Firewood விறகு; Dry leaves சருகு; Red colour சிவப்பு; Coral பவளம்.-தல்: To dry உலர்தல்; To be complete முழுதுமாதல்.
துவர்ச்சிகை: Immature gall-nut கடுக்காய்ப் பிஞ்சு.
துவரி: Salmon colour காவி நிறம்; Flower of silk cotton tree இலவம் பூ.
துவல்: Flowers offered in worship அருச்சிக்கும் பூ.
துவலை: Spray நீர்த் திவலை; Drizzle மழைத் தூற்றல்; Crowd கூட்டம்.
துவள்: Flexibility ஒசிவு; Fading வாடுகை; Exhaustion சோர்வு; Instability சலனம்; Fault குற்றம். - தல் (துவளுதல்): To quiver துடித்தல்; To be distressed வருந்துதல்; To disappear ஒழிதல்; To be dense அடர்தல்.
துவற்று-தல்: Te sprinkle தூவுதல்; To ruin கெடுத்தல்.
துவன்று: Fullness நிறைவு.-தல்: To be close நெருங்குதல்; To join கூடி நிற்றல்; To be heaped குவிதல்.
துவனம்-துவனி: Noise ஒலி.
துவிதம்: Duality இருமை.
துவை: A dish புளிங்கறி.-த்தல்: To make great noise ஆரவாரித்தல்; To be praised புகழப்படுதல்; To churn கடைதல்; To gather together சேர்த்து வைத்தல்.
துழ-த்தல்: To stir, as with ladle துழாவுதல்.
துழதி: Sorrow துன்பம்.
துழவு-துழா-துழாவு-தல்: To grope தடவுதல்; To seek நாடுதல்; To row தண்டு வலித்தல்; To be perplexed தடு மாறுதல்.
துழனை: Porridge கூழ்.
துழனி: Sound ஒலி.
துழாய்-துளபம்: Sacred basil துளசி.
துள்ளம்: Little drop of water சிறு துளி.
துள்ளல்: A dance கூத்து வகை.
துள்ளற்செலவு: A mode of playing yāḻ யாழ் வாசிக்கும் முறையுள் ஒன்று.
துள்ளு-தல்: To quiver பதைத்தல்; To be abundant மிகுதல்.
துள்ளொலி: Noise of rippling water அலையொலி.
துளக்கு: Shaking அசைவு; Sorrow வருத்தம்.-தல்: To bow வணங்குதல்.
துளங்கு-தல்: To droop தளர்தல்; To sound ஒலித்தல்; To shine பிரகாசித்தல்.
துளப்பு: Belly வயிறு.
துளம்: Common pomegranate மாதுளை; Root of peacock's feather மயில் இறகின் அடி.
துளர்: Weeds பயிரின் களை; Weeding hook களைக்கொட்டு.-தல்: To hoe நிலம் முதலியவற்றைக் கொத்துதல்; To spread, as fragrance மணம் முதலியன வீசுதல்.
துளும்பு-தல்: To be agitated அசைதல்; To brim over ததும்புதல்; To shine விளங்குதல்; To melt இளகுதல்; To rise up மேலெழுதல்; To be troubled வருந்துதல்; To abound மிகுதல்.
துளை: Curl சுருட்சி. -தல்: To be immersed முழுகிக் கிடத்தல்.
துளைநிறை-துளைப்பொன்: Refined gold of superior quality சொக்கத் தங்கம்.
துளையம்: Disporting in water நீர் விளையாட்டு.
துற்று: Food உணவு; Mouthful of food கவளம்.-தல்: To seize with mouth கௌவுதல்; To be close நெருங்குதல்; To undertake மேற்கொள்ளுதல்.
துற-த்தல்: To renounce விடுதல்.
துறக்கம்: Heaven சுவர்க்கம்.
துறட்டு: Danger அபாயம்.
துறவு: Secret இரகசியம்; Favourable juncture வாய்ப்பு; Renunciation சந்நியாசம்.

துறு: Denseness நெருக்கம். -தல்: To reach அடைதல்; To bedeck சூட்டுதல். -த்தல்: To stuff திணித்தல்; To set up அமைத்தல்.

துறு கல்: Rock பாறை.

துறும்பு-துறுமு-தல்: To be crowded நெருங்குதல்.

துறை: Place இடம்; Way நெறி; Section பகுதி; Sea port கடற் றுறை; Sea கடல்; Ghat நீர்த் துறை; Branch of knowledge கலை; Theme in akam and puram அகமும் புறமும் பற்றிய தமிழ்ப் பொருட் கூறு; Proper arrangement ஒழுங்கு; Kind of verse பா வகை.

துறைபோ-தல்: To be accomplished காரியம் முடிவு போதல்; To be complete நிரம்புதல்.

துறைவன்: Chief of maritime tract நெய்தல் நிலத் தலைவன்.

துன்று-தல்: To be close நெருங்குதல்; To get attached பொருந்துதல்.

துன்னம்: Sewing தையல்; A tree மர வகை.

துன்னலர்-துன்னார்: Enemies பகைவர்.

துன்னு-தல்: To do செய்தல்; To gain அடைதல்; To consider ஆலோசித்தல்; To sew தைத்தல்; To be close நெருங்குதல்.

துனி: Disgust வெறுப்பு; Anger கோபம்; Protracted love quarrel புலவி நீடித்தல்; Separation பிரிவு; Sorrow துன்பம்; Disease நோய்; Sin பாவம்; Flaw குற்றம்; Obstacle இடையூறு; Poverty வறுமை.

துனைவு: Quickness விரைவு.

## தூ

தூ: Purity தூய்மை; Whiteness வெண்மை; Strength வலிமை; Support பற்றுக்கோடு; Meat இறைச்சி; Feather இறகு.

தூக்கணம் - தூங்கணம்: Weaver bird தூக்கணங் குருவி.

தூக்கம்: Delay தாமதம்; Fatigue அயர்வு; Pendant பதக்கம்; Kind of garland மாலை வகை.

தூக்கு: Pendant பதக்கம்; A bazaar weight ஓர் எடை; Comparison ஒப்பு; Deliberation ஆராய்ச்சி; Poem செய்யுள்; Music இசை.

தூசு-தல்: To sweep பெருக்குதல்.

தூங்கு-தல்: To hang தொங்குதல்; To sway அசைதல்; To dance கூத்தாடுதல்; To pour ஊற்றுதல்; To sound ஒலித்தல்; To die சாதல்; To droop வாடுதல்; To delay தாமதித்தல்; To abide நிலையாகத் தங்குதல்; To walk softly மெத்தென நடத்தல்; To be dense செறிதல்; To abound மிகுதல்.

தூசம்: Elephant's neck band யானைக் கழுத்துக் கயிறு.

தூசி: Van of army முன்னணிப் படை; Kind of gesture in dancing அபிநய வகை.

தூசு: Cleanliness சுத்தம்; Garment ஆடை; Cotton பஞ்சு; Van of army முன்னணிப் படை.

தூண்டில்: Kind of dance வரிக்கூத்து வகை.

தூண்டு-தல்: To urge செலுத்துதல்; To pound குற்றுதல்; To push தள்ளுதல்.

தூணி: Quiver அம்புப் புட்டில்; A measure of capacity 4 மரக்கால் அளவை.

தூது: Small pebble கூழாங்கல்; Message செய்தி; A prapanta ஒரு பிரபந்தம்.

தூதுணம்: Kind of bird புறா வகை.

தூதை: Small earthen pot சிறு மட்கலம்; Joy utensils of wood விளையாட்டு மரச் செப்புகள்; A measure of capacity ஒரு முகத்தலளவை.

தூபம்: Smoke புகை; A dance gesture அபிநய வகை.

தூபி-தூபிகை-தூபை: Top உச்சி; Tower கோபுரம்.

தூம்பு: Tubularity புரை; Sluice மதகு; Drain சலதாரை; Bamboo tube மூங்கிற் குழாய்; Flute துளைக் கருவி வகை; A measure ஓர் அளவு.

தூமகேது-தூமக்கோள்-தூமம்: Comet வால் நட்சத்திரம்.

தூமணி: Pearl முத்து.

தூய்மை: Purity பரிசுத்தம்; Salvation முத்தி; Goodness நன்மை; Whiteness வெண்மை.

தூர்: Bottom அடிப்பகுதி; Mire சேறு. -தல்(தூருதல்): To be filled நிரம்புதல்; To be closed அடைபடுதல்; To perish அழிதல்; To disappear மறைதல்; To come close நெருங்குதல்.-த்தல்: To insert உட் செலுத்துதல்; To sweep பெருக்கிச் சுத்தம் செய்தல்.

தூர்த்தன்: Debauchee காமுகன்; Wicked person கொடியோன்.

தூர்வை: Rubbish in well கிணற்றுத் தூர்; Quitch grass அறுகம் புல்.

தூரி-தூரியம்: Musical instruments இசைக் கருவிகள்.

தூரிகை: Painters' brush எழுதுகோல்.
தூரியம்: Kind of fine cloth துகில் வகை.
தூலம்: Grossness பருமை; Tangible கண்ணுக்குப் புலனுவது; Beam உத்திரம்.
தூவல்: Drizzle தூவானம்; Feather இறகு; Drop of water திவலை.
தூவழி: A secondary melody type பண் வகை.
தூவி: Down of birds பறவையின் மெல்லிய இறகு; Swan அன்னப் பறவை; Pinnacle தூவி; Crest பறவையின் கொண்டை.
தூவிப் பொன்: Kind of gold கிளிச் சிறை என்ற பொன்.
தூவு-தல்: To scatter சிதறுதல்; To cease ஒழிதல்.
தூற்று-தல்: To scatter சிதறுதல்; To broadcast பலரறியப் பகர்தல்.
தூறு: Bush புதர்; Heap குவியல்; Burning ground சுடுகாடு; Slander பழிச் சொல்; Evil தீங்கு.

## தெ

தெக்கணம்: South தெற்கு.
தெக்கு-தல்: To receive கொள்ளுதல்.
தெகிழ்-தல்: To shine விளங்குதல்; To blossom நெகிழ்தல்; To be full நிறைதல்.
தெட்டு: Deception வஞ்சனை.
தெட்பம்-தெண்மை: Presence of mind மனத் தெளிவு.
தெண்டு: Mass கற்றை.
தெம்முனை: Battle field போர்க்களம்.
தெய்வம்: Fate ஊழ்; A form of marriage மண வகை.
தெய்வமணி: Philosopher's stone குளிகை; Horse with lucky curl நற்சுழி யுள்ள குதிரை.
தெய்வவுத்தி: Women's head ornament மாதர் தலை யணி வகை.
தெரி-தல்: To investigate ஆராய்தல். -த்தல்: To make evident வெளிப்படுத்தல்; To explain specifically குறிப்பிட்டு விளக்குதல்; To select தெரிந்தெடுத்தல்.
தெரிநிலை-தெரிநிலைக்கை: A dance pose அபிநய வகை.
தெரியல்: Flower garland பூமாலை.
தெரியலர்: Enemies பகைவர்.
தெருட்டல்: Rubbing yāḻ string to test tone யாழ் நரம்பைத் தேய்த்து ஓசை தேர்கை.
தெருட்டு-தல்: To advise அறிவுறுத்துதல்.
தெருமரல்-தெருமருதல்: Confusion மனக்கலக்கம்.
தெருள்: Clarity of intellect அறிவின் தெளிவு. -தல் (தெருளுதல்): To be renowned பிரசித்தமாதல்.
தெவ்-தெவ்வு: Enmity பகைமை.
தெவ்வு-தல்: To get கொள்ளுதல்; To fill நிறைத்தல்; To importune மன்றாடிக் கேட்டல்.
தெவிட்டு-தல்: To chew cud அசை போடுதல்; To make noise ஒலித்தல்; To become full நிறைதல்; To attain அடைதல்; To conquer வெல்லுதல்; To think நினைத்தல்.
தெவிள்-தல் (தெவிளுதல்): To become full நிறைதல்.
தெழ்கு: Kind of waist ornament இடை யணி வகை.
தெழி: Noise ஒலி.-த்தல்: To bluster அதட்டுதல்; To sound, as drum முழக்குதல்; To subdue அடக்குதல்; To separate பிரித்தல்; To trouble வருத்துதல்; To thresh மிதித்து உழக்குதல்.
தெள்கு: Flea தெள்ளுப்பூச்சி.-தல்: To be overfull தேங்குதல்.
தெள்விளி: Lyric song இசைப்பாட்டு.
தெள்ளு-தல்: To sift கொழித்தல்.
தெள்ளேணம்: A game of girls மகளிர் விளையாட்டு வகை.
தெளி: Clearness தெளிவு; Light ஒளி. -தல்: To trust நம்புதல்.-த்தல்: To pacify love quarrel ஊடல் உணர்த்துதல்; To extract juice சாறு வடித்தல்; To melt உருக்கி ஓட வைத்தல்; To take vow சூளுறுதல்.
தெளிர்-தல்: To shine ஒளிர்தல். -த்தல்: To sound ஒலித்தல்; To be fertile செழித்தல்; To be happy மகிழ்தல்.
தெளிவு: Juice சாறு; Knowledge ஞானம்; Decision முடிபு; Confidence நம்பிக்கை.
தெற்றல்: Perverse person மாறுபாடுடையவன்; Clear sighted person அறிவில் தெளிவுள்ளவன்.
தெற்றி: Pial திண்ணை; Mound மேடு; A tree மர வகை; One who brings ruin அழிம்பன்.
தெற்று: Tripping இடறுகை; Hedge அடைப்பு; Denseness செறிவு; Perversity மாறுபாடு. -தல்: To do wrong தவறு செய்தல்; To beat against மோதுதல்; To shake அலைத்தல்; To change மாற்றுதல்; To gnash, as teeth பல்லைக் கடித்தல்; To plait பின்னுதல்; To trip இடறுதல்; To string up தொடுத்தல்.

தெற்றுவாசல்: Wicket திட்டிவாசல்.
தெற்றெனவு: Immodesty வெட்கமின்மை; Clearness தெளிவு.
தெறி-த்தல்: To scatter சிதறுதல்; To leap துள்ளுதல்; To split பிளத்தல்; To be full முற்றுதல்; To twang, as bow string விரலால் உந்துதல்.
தெறு: Anger கோபம்; Fear அச்சம்; Distress துன்பம்.-தல்: To burn சுடுதல்; To punish தண்டித்தல்; To kill கொல்லுதல்; To boil காய்ச்சுதல்; To sting கொட்டுதல்; To leave விட்டு நீங்குதல். -த்தல்: To heap குவித்தல்.
தெறுவர்: Enemies பகைவர்.
தெறுவி: Ladle அகப்பை.
தெறுழ்: A creeper கொடி வகை; Kind of mango tree புளிமா மரம்.
தென்: Beauty அழகு; Sweetness இனிமை.
தென்கலை-தென்மொழி: Tamil தமிழ்.
தென் மலை: Mount Potiyam பொதியமலை.
தென்றி: South தெற்கு; South wind தென்றல்.
தென்று-தல்: To be scattered சிதறுதல்; To stray away இனம் பிரிதல்.
தென்னன்-தென்னவன்: Pandya king பாண்டியன்.
தென்னிலை: Coconut leaves தென்னோலை.
தெனுது: That which is in south தெற்குள்ளது.

## தே

தே: Deity தெய்வம்; Chief நாயகன்.
தேக்கம்: Obstruction தடை; Fear அச்சம்.
தேக்கிடு-தல்: To be satiated மிகுதியால் வெறுப்படைதல்; To belch ஏப்பமிடுதல்; To brim over ததும்பி வழிதல்.
தேகி: Soul ஆன்மா.
தேங்கணை: Arrow of flower மலரம்பு.
தேங்கு-தல்: To fill நிறைதல்; To stay தங்குதல்; To perish கெடுதல்; To be puzzled மனங் கலங்குதல்; To delay தாமதித்தல்.
தேசம்: Lustre ஒளி.
தேசி: A melody இராக வகை; A dance கூத்து வகை.
தேசிகம்: Foreign word அயல் நாட்டுச் சொல்; Light ஒளி; A mode of singing பாடுவதில் ஒரு முறை.
தேசு: Lustre ஒளி; Beauty அழகு; Praise புகழ்; Greatness பெருமை.
தேட்டம்: Earning சம்பாத்தியம்; Desire விருப்பம்.
தேட்டு: Seeking தேடுகை.
தேடி: Atis மருந்துச் சரக்கு வகை.
தேடு-தல்: To try முயலல்.
தேத்தடை: Honeycomb தேன்கூடு.
தேது: Lustre ஒளி.
தேப்பானை: Honey pot தேன் பெய்த பானை.
தேப்பை: Raft தெப்பம்.
தேம்: Sweetness இனிமை; Fragrance வாசனை; Honey தேன்; Honey bee தேனீ; Must of elephant யானை மதம்; Oil எண்ணெய்; Land தேசம்; Direction திக்கு.
தேம்பு-தல்: To fade வாடுதல்; To grow thin மெலிதல்; To sob விம்மியழுதல்; To suffer வருந்துதல்; To perish அழிதல்; To be fit for enjoyment அநுபவிக்க உரியதாதல்.
தேய்வு: Disgrace அவமானம்.
தேய்வை: Sandal-paste சந்தனக் குழம்பு.
தேயம்: Lustre ஒளி; Wealth பொருள்; Country தேசம்; That which is worthy of meditation தியானிக்கத் தக்கது.
தேயு: Fire அக்கினி.
தேர்: Mirage கானல். - தல்: To examine ஆராய்தல்; To know அறிதல்; To seek தேடுதல்; To ascertain நிச்சயித்தல்; To doubt சந்தேகித்தல். - த்தல்: To mingle கலத்தல்.
தேர்ச்சிவரி: Kind of dance நடன வகை.
தேர்ச்சினை: Ornamental staff in chariot கொடிஞ்சி.
தேராழி: Discus சக்கராயுதம்.
தேரர்: Buddhist ascetics புத்த முனிவர்.
தேரை: Frog தவளை; Fish bait மீன் இரை; Coconut blight தேங்காய் நோய் வகை.
தேரோர்: Minstrels who praise cultivators and warriors ஏர்க்களமும் போர்க்களமும் பாடும் புலவர்.
தேரோன்: Sun சூரியன்.
தேவகன்மி: Temple priest தேவ காரியம் பார்ப்போன்.
தேவகுலம்-தேவகோட்டம்: Temple கோயில்.
தேவகோடி: A very big number ஒரு பேரெண்.
தேவதாயம்: Endowments to temple கோயில் மானியம்.
தேவதாரம்-தேவதாரு: A tree மர வகை.

தேவதானம்-தேவபோகம்: Endowment of tax-free land to temple வரி நீங்கிய கோயில் மானிய நிலம்.
தேவபாணி: Songs in praise of gods தேவ ஸ்துதி வகை.
தேவராட்டி: An inspired woman சாமி யாடி.
தேவராளன்: An inspired man சாமி யாடி.
தேவாங்கு: Kind of superior cloth துகில் வகை.
தேவாரம்: Worship பூசை; Household detiy வீட்டில் வழிபடும் கடவுள்; A compartment in mansion மாளிகைப் பகுதி.
தேவி: Wife மனைவி; Queen தலைவி.
தேவிடு-தல்: To require வேண்டுதல்.
தேவு: Deity தெய்வம்; Godhead தெய்வத்தன்மை.
தேவை: Affairs காரியம்; Slavery அடிமைத்தனம்.
தேற்றம்: Certainty நிச்சயம்; Clearness தெளிவு; Presence of mind மனங் கலங் காமை; Swearing ஆணை.
தேற்று: A tree மர வகை.
தேறல்: Clarified toddy தெளிந்த கள்; Honey தேன்; Juice சாறு.
தேறு: A tree தேற்று; Clearing nut தேற்றாங் கொட்டை; Piece துண்டு; Sting கொட்டுகை - தல்: To trust நம்புதல்; To decide துணிதல்; To unite கூடுதல்.
தேன்: Toddy கள்; Juice சாறு; Fragrance வாசனை; Kind of beetle or bee வண்டு வகை; Honeycomb தேன்கூடு.
தேனி-த்தல்: To be happy மகிழ்தல்.
தேனு: Divine cow தேவலோகப் பசு; Cow பசு.

## தை

தை-த்தல்: To weave, as wreath மாலை தொடுத்தல்; To adorn அலங்கரித்தல்; To create ஆக்குதல்; To set பதித்தல்; To place இடுதல்; To wear உடுத்துதல்; To paint சித்திரித்தல்; To surround சூழ்தல்; To enter உட்புகுதல்.
தையல்: Woman பெண்.
தைவதம்: Sixth note of gamut 6-ஆம் சுரம்.
தைவா-தல் (தைவருதல்): To stroke தடவுதல்; To adjust சீர்ப்படுத்தல்; To pervade பரவுதல்; To wipe off துடைத்தல்; To harmonize with keynote அனு சுருதி யேற்றுதல்.

## தொ

தொக்கயம்: Flag கொடி.
தொக்கு: Fitness சேர்மை; Sense of touch பரிசேந்திரியம்; Skin தோல்.
தொக்கைக்குன்றி: Loss in cultivation சாகுபடி நஷ்டம்.
தொகுதல்: To agree ஒத்தல்; To be included உள்ளடங்குதல்.
தொகுதி: Collection கூட்டம்; Series வரிசை; Company சேர்க்கை.
தொகை: Collection கூட்டம்; Association சேர்க்கை; Number எண்; Calculation கணக்கு; Ancient anthologies சங்க நூல் வகை; Soul ஆன்மா.
தொங்கல்: Big garland பெரிய பூமாலை; White umbrella வெண் குடை; Insignia of royalty அரச விருது.
தொங்கு-தல்: To be permanent நிலைத்து நிற்றல்; To be dependent அண்டிக் கிடத்தல்; To be obtained கிடைத்தல்.
தொட்டிமை: Unison ஒற்றுமை; Beauty அழகு.
தொடக்கு: Binding கட்டு; Human body மானிட சரீரம்; Decorative hangings குஞ்சம்.-தல்: To wear தரித்தல்; To get entangled சிக்கிக்கொள்ளுதல்.
தொடர்: Chain சங்கிலி; Fetters விலங்கு; Friendship நட்பு.-தல்: To form அமைதல்; To increase மிகுதல்; To be close நெருங்குதல்; To practise பயிலல்; To seek தேடுதல்: To bind கட்டுதல்; To seize பற்றுதல்; To get பெறுதல்; To enquire வினவுதல்; To hang தொங்கவிடுதல்.
தொடரி: A thorny shrub முட் செடி வகை.
தொடலை: Hanging தொங்க விடுகை; Garland மாலை; Jewelled girdle மணி மேகலை.
தொடி: Curve வளைவு; Bracelet கை வளை; Armlet தோள்வளை; Ferrule பூண்; A standard weight ஒரு பலம்.
தொடிமகள்: Danseuse விறலி.
தொடு-தல்: To handle பிடித்தல்; To wear தரித்தல்; To dig தோண்டுதல்; To pierce through துளைத்தல்; To begin தொடங்குதல்; To discharge, as arrow எய்தல்; To think நினைத்தல்; To play, as musical instrument வாத்தியம் வாசித்தல்; To fasten கட்டுதல்; To strike அடித்தல்; To strain பிழிதல்; To swear ஆணையிடுதல்; To lift எடுத்தல்; To wash, as

clothes வெளுத்தல்; To occur உண்டாதல். -த்தல்: To continue விடாது செய்தல்; To link இணைத்தல்; To store சேர்த்து வைத்தல்; To surround வளைத்தல்; To create உண்டாக்குதல்; To undertake மேற்கொள்ளுதல்; To apportion பகுத்தல்; To be dense நெருங்கியிருத்தல்.

தொடுதோல்: Sandals செருப்பு.

தொடுப்பு: Sowing விதைப்பு; Ploughing in rounds வளைத்து உழுகை; Theft களவு.

தொடை: Braiding பின்னுகை; Kicking எற்று; Series தொடர்ச்சி; String வடம்; Joint of body மூட்டு; Cluster கொத்து; Compactness of unblown flower மலர் முறுக்கு; Bow string வில் நாண்; Stairs படிக்கட்டு; Question வினா; Bunch of fruits பழக் குலை; Honeycomb தேன் கூடு; A record of victory வெற்றிப் பத்திரம்; Code நெறி முறை.

தொடைகோள்-தல் (தொடை கொள்ளு தல்): To learn கண்டறிதல்.

தொடையல்: Succession தொடர்ச்சி; Fastening கட்டுகை; Kind of garland மாலை வகை.

தொண்டகம்: Kind of drum பறை வகை.

தொண்டலம்: Elephant's trunk யானைத் துதிக்கை.

தொண்டி: Dancing girl தேவடியாள்; Beer தோப்பிக் கள்.

தொண்டு: Slavery அடிமைத்தனம்; Devoted service கடவுள் வழிபாடு; Antiquity பழமை; Nine ஒன்பது; An ornament அணி வகை.

தொண்டை: Elephant's trunk யானைத் துதிக்கை; A common hedge creeper கோவைக் கொடி.

தொத்து: Cluster கொத்து; Mass திரள்; Attachment பற்று; Dependence சார்பு.

தொந்தம்: Connection சம்பந்தம்; Kind of weapon ஆயுத வகை.

தொப்பாரம்: Kind of crown முடி விசேடம்.

தொப்பி-தோப்பி: Beer நெல்லாற் சமைத்த கள்.

தொம்மை-தொம்பரை: Grain bin நெற் குதிர்.

தொய்: Fault குற்றம்.-தல்: To be weary சோர்தல்; To be loose தளருதல்; To perish அழிதல்; To labour உழைத்தல்; To plough உழுதல்.

தொய்படு-தல்: To be wet நனைதல்.

தொய்யில்: Sandal paste வரிக் கோலம் எழுதும் சந்தனக் குழம்பு; Water spinach நீர்க் கொடி வகை.

தொலை: Ruin அழிவு; Distance தூரம். -தல்: To be weary சோர்தல்; To be defeated தோற்றல்.

தொழி-தல்: To be spilt சிதறுதல்.-த்தல்: To be angry கோபித்தல்; To sound ஒலித்தல்.

தொழு: Manger மாட்டுக் கொட்டில்; Prison சிறைக்கூடம்; Married life இல்வாழ்க்கை; Kind of leprosy குட்ட நோய் வகை; Stand for toddy jars கட் சாடி யிருக்கும் ஏணி; Stocks தொழுமரம்.

தொழு குலம்: Brahmin caste பிராமண குலம்; Family deity குல தெய்வம்.

தொழுது-தல்: To desire விரும்புதல்.

தொழுதி: Crowd கூட்டம்; Denseness நெருக்கம்.

தொழும்பு: Slavery அடிமைத் தொழில்.

தொழுவை: Pool மடு.

தொள்-தல் (தொள்ளுதல்): To perforate துளைத்தல்.

தொள்கு: Net வலை; Mire சேறு.

தொள்ளம்: Raft தெப்பம்; Mire சேறு.

தொள்ளை: Hole துளை; Pit குழி; Fault குற்றம்; Ignorance அறியாமை; Antiquity பழமை.

தொளி: Mire சேறு; Street வீதி.

தொற்று: Connection சம்பந்தம். - தல்: To spread படர்தல்.

தொறு: Herd of cows பசுக்கூட்டம்; Shepherd caste இடைச் சாதி; Crowd கூட்டம்.

தொன்மரம்: Banyan tree ஆலமரம்.

தொன்மை: Coldness பழமை.

தொன்று: Coldness பழமை; Fate ஊழ்.

## தோ

தோக்கை: Front end of cloth முன் தானை; Plaited folds of cloth கொய்சகம்.

தோகை: Tail வால்; Tail of peacock மயிற் பீலி; Garment ஆடை.

தோட்கோப்பு: Boiled rice tied up for journey கட்டுச் சோறு.

தோட்டி: Authority ஆணை; Guard காவல்; Door கதவு; Beauty அழகு; Elephant goad அங்குசம்; A weapon. ஆயுத வகை.

தோடி: A melody இராக வகை.

தோடு: Palm-leaf பனையோலை; Ear-ornament காதணி வகை; Flower

petal பூ விதழ்; Flower பூ; Sheath of grain கதிர்த்தாள்; Collection தொகுதி; Skin தோல்.

தோண்டு-தல்: To draw water, as from well நீர் இழுத்தல்; To unload பண்டம் இறக்குதல்.

தோண்மிடுதல்-தோண்மை: Strength of arm புய வலி.

தோணி: Water trough நீர்த்தொட்டி.

தோணோக்கம்: A game of girls மகளிர் விளையாட்டு வகை.

தோதகம்: Pain வருத்தம்; Fraud வஞ்சகம்; Jugglery சால வித்தை.

தோதவி-த்தல்: To be perverse முரணுதல்.

தோம்: Fault குற்றம்; Trouble துன்பம்.

தோய்-தல்: To bathe முழுகுதல்; To become wet நனைதல்; To be curdled உறைதல்; To come in contact with பொருந்துதல்; To take in, as water முகத்தல்; To mix கலத்தல்; To approach கிட்டுதல்; To resemble ஒத்தல்.-த்தல்: To temper, as iron துவைச்சலிடுதல்.

தோயம்: Water நீர்.

தோரணம்: Ornamental gateway அலங்கார வளைவுள்ள வாயில்; Gait of elephant யானைக் கதி வகை.

தோரம்: A dance gesture அபிநய வகை.

தோரமல்லி-தோராவல்லி: Tourmaline இரத்தின வகை.

தோரியம்: A Dance கூத்து வகை.

தோரை: Kind of mountain paddy மலை நெல் வகை; Peacock-feather fan பீலி விசிறி; A lineal measure நீட்டலளவு வகை.

தோல்: Shield கேடகம்; Saddle சேணம்; Elephant யானை; Fame புகழ்.

தோழ்-தோழம்: Cattle-stall மாட்டுக் கொட்டில்.

தோழம்: Sea கடல்; A large number ஒரு பேரெண்.

தோழி: Wife மனைவி; Maid-servant பணி செய்பவள்.

தோள்: Hole தொளை; Arm கை.

தோற்றம்: Prominence உயர்ச்சி; Origin தொடக்கம்; Class சாதி; Fame புகழ்; Guise வேடம்; Form உருவம்; Limb உறுப்பு; Nature தன்மை; Idea எண்ணம்.

தோன்றல்: Splendour விளக்கம்; Chief person தலைவன்.

தோன்றி: Malabar glory lily செங்காந்தள்.

தோன்று-தல்: To exist நிலை கொள்ளுதல்.

## ந

நக்கம்: Nakedness அம்மணம்.

நக்கரம்: Crocodile முதலை.

நகடு: Paleness சோகை.

நகம்: Mountain மலை.

நகர்: Mansion மாளிகை; Temple கோயில்; Raised place மேடை; Wife மனைவி.

நகல்: Friendship நட்பு.

நகழ்-தல்: To grieve துன்புறுதல்.

நகில்: Woman's breast முலை.

நகு-தல்: To laugh சிரித்தல்; To bloom மலர்தல்; To shine பிரகாசித்தல்; To hoot பறவை ஒலித்தல்; To despise அவமதித்தல்.

நகுலம்: Mungoose கீரி.

நகை: Pleasantry பரிகாசம்; Play விளையாட்டு; Tooth பல்; Pearl முத்து; Resemblance ஒப்பு.

நகைவேழம்பர்: Clowns விகடர்.

நங்களை: Part of girdle அரைப்பட்டிகையின் உறுப்பு.

நங்கு: Derision பரிகாசம்.

நச்சு: Desire ஆசை.

நசி-தல்: To be destroyed அழிதல்; To become reduced குறைதல்.

நசை: Desire ஆசை; Love அன்பு; Hope நம்பிக்கை.

நஞ்சு: Poison விஷம்.

நட்டணை: Imitative action நடிப்பு.

நட்டம்-நடம்-நடி: Dance நடனம்.

நட்டவம்-நட்டுவம்: Profession of training dancers நட்டுவத் தொழில்.

நட்பு: Fourth string of yāḻ யாழின் நான்காம் நரம்பு.

நட-த்தல்: To be reckoned as equal நிகராதல்.

நடக்கை: Usage வழக்கு.

நடலை: Guile வஞ்சனை; Deception பொய்ம்மை; Distress துன்பம்.

நடவை: Path வழி; Plan உபாயம்.

நடனம்: Gait of horse குதிரைக் கதி; Jugglery இந்திர சாலம்.

நடு: Waist இடுப்பு; Impartiality நடுநிலை.

நடுக்கம்: Fear அச்சம்; Distress துன்பம்.

நடுங்கு-தல்: To resemble ஒப்பாதல்.

நடுச்சொல்வார்: Those who testify சாட்சி சொல்பவர்.

நடு நாள்: Midnight பாதி இரவு.
நடுவண்: In centre இடையில்.
நடை: Conduct ஒழுக்கம்; Nature இயல்பு; Foot அடி; Occupation தொழில்; Daily worship in temple நித்திய பூசை.
நடைத்தூண்டில்: An instrument of torture சித்திர வதைக் கருவி.
நடையாட்டம்: Usage வழக்காறு.
நடையோத்து: Mode of marking time தாள வகை.
நண்டுக்கரம்: A dance gesture அபிநய வகை.
நண்ணம்: Trifle சிறிது.
நண்ணு-தல்: To approach கிட்டுதல்.
நணி: Nearness சமீபம்.
நத்தம்: Growth ஆக்கம்; Village ஊர்; Night இரவு; Village house sites கிராம மனையிடம்.
நத்து: Village ஊர். - தல்: To desire விரும்புதல்; Village ஊர்.
நது-த்தல்: To extinguish அவித்தல்.
நந்தன்: Cowherd இடையன்.
நந்தனவனம்-நந்தனம்: Flower garden நந்தவனம்.
நந்தி-நந்திவட்டம்: A plant நந்தியா வட்டச் செடி.
நந்து-தல் To perish கெடுதல்; To increase மிகுதல்; To be proud செருக்குறுதல்.
நம்பன்-நம்பி: Elite among men ஆணிற் சிறந்தோன்; God கடவுள்.
நம்பு: Desire விருப்பம்; Right of conducting temple worship கோயிலில் பூசை செய்யும் உரிமை.-தல்: To accept அங்கீகரித்தல்.
நமர்: Our relations நம்முடைய சுற்றத்தார்.
நமறு-தல்: To prostrate வணங்குதல்.
நமன்: Yama எமன்.
நமுகு-தல்: To yield குழைதல்.
நமை: Itching தினவு; Kind of tree மர வகை. -த்தல்: To trouble வருத்துதல்; To command கட்டளையிடுதல்.
நய-த்தல்: To desire விரும்புதல்; To compliment பாராட்டுதல்; To rejoice மகிழ்தல்; To be sweet இனிமை யுறுதல்.
நயம்: Grace அருள்; Goodness நன்மை; Civility உபசாரம்; Benefit நற்பயன்; Result முடிவு; Sweetness இனிமை; Justice நீதி.
நயனம்: Eye கண்.
நரகன்: Sinner பாவி.
நரந்தம்: Musk கஸ்தூரி; A fragrant grass வாசனைப் புல் வகை; Bitter orange நாரத்தை.
நரல்-தல் (நரலுதல்): To sound ஒலித்தல்; To low as cow கத்துதல்.
நரலை: Sea கடல்; Roar பேரொலி.
நரன்: Man மனிதன்.
நரி-தல்: To torture சித்திரவதை செய்தல்.-த்தல்: To perish அழிதல்.
நரிப்பு: Derision இகழ்வு.
நருக்கல்: Insufficiently cooked rice வேகாத சோறு.
நருக்கு-தல்: To mash நொறுக்குதல்.
நரை: Whiteness வெண்மை; Bull எருது; Yak கவரிமான்; Greatness பெருமை.
நரையான்: Kingfisher மீன்கொத்திப் பறவை.
நல்கு-தல்: To give கொடுத்தல்; To desire விரும்புதல்; To show deep love மிக்க அன்பு செலுத்தல்; To create படைத்தல்; To bring up வளர்த்தல்; To delay தாமதித்தல்; To be useful பயன்படுதல்; To rejoice உவத்தல்; To bestow grace அருள் செய்தல்.
நல்கூர்-தல்: To be poor வறுமையாதல்; To be wearied களைப்படைதல்; To suffer துன்புறுதல்.
நல்லவர்: Women பெண்கள்.
நல்லா: A tax வரி வகை.
நல்லினம்: Herd of cows பசு மந்தை.
நலங்கு-தல்: To grow faint நொந்து போதல்; To suffer வருந்துதல்; To bend வளைதல்.
நலம்: Beauty அழகு; Love அன்பு; Desire ஆசை; Pleasure இன்பம்; Nature குணம்; Fame புகழ்; Excellence உயர்வு; Prosperity சுக வாழ்வு; Virtue அறம்.
நலம்பாடு: Fitness தகுதி.
நலி-தல்: To perish அழிதல்; To suffer வருந்துதல்; To afflict வருத்துதல்.
நவ்வி: Hind பெண்மான்; Young of deer மான் குட்டி; Beauty அழகு; Boat மரக்கலம்.
நவநீதம்: Butter வெண்ணெய்.
நவபண்டம்: Nine kinds of grain ஒன்பது வகைத் தானியம்.
நவம்: Newness புதுமை.
நவமணி மாலை: A prapanta பிரபந்த வகை.
நவமை: Fault குற்றம்.
நவி-நவியம்: Axe கோடரி.

**நவிர்:** A melody type தக்கேசிப் பண்; Baseness புன்மை; Fault குற்றம்.-தல்: To be torn கிழிதல்.

**நவிரல்:** Kind of tree மர வகை.

**நவில்-தல் (நவிலுதல்):** To say சொல்லுதல்; To learn கற்றல்; To perfom, as dance செய்தல்; To practise பழகுதல்; To bear தாங்குதல்; To desire விரும்புதல்; To indicate குறித்தல்; To exceed மிகுதல்.

**நவிழ்-த்தல்:** To extinguish அவித்தல்.

**நவுரி-நமரி:** Kind of trumpet எக்காள வகை.

**நவை:** Fault குற்றம்; Distress துன்பம்; Punishment தண்டனை.-த்தல்: To kill கொல்லுதல்; To take away அபகரித்தல்.

**நழுக்கு-தல்:** To distress வருத்துதல்.

**நழுப்பு-தல்:** To fascinate மயங்கச் செய்தல்.

**நழுவல்:** A defective note ஓர் அபசுரம்.

**நள்:** Centre நடு; Night இரவு.

**நள்ளி:** Crab நண்டு.

**நள்ளிருணறி:** Tuscan jasmine இருவாட்சி மலர்.

**நளி:** Denseness செறிவு; Greatness பெருமை; Width அகலம்; Vanity செருக்கு; Coldness குளிர்ச்சி.-தல்: To be vast in extent பரத்தல்; To resemble ஒத்தல்.

**நளிர்:** Shivering நடுக்கம்.

**நளினம்:** Lotus தாமரை; Pleasing speech நயச் சொல்.

**நற்கு-நற்பு-நற்றம்-நற்று-நன்பு:** Good நன்மை.

**நற்றாய்:** Own mother பெற்ற தாய்.

**நற - நறவம் - நறவு - நறு - நறை:** Honey தேன்; Toddy கள்; Fragrance வாசனை.

**நறுவலி:** A tree மர வகை.

**நறைக்காய்:** Nutmeg ஜாதிக்காய்.

**நன்காடு:** Cremation ground சுடுகாடு.

**நன்கு:** That which is good நல்லது; Abundance மிகுதி; Health சௌக்கியம்; Steadiness நிலைபேறு; Good omen நற்சகுனம்; Happiness மகிழ்ச்சி.

**நன்பகல் - நன்பகலந்தி:** Noon உச்சிக் காலம்.

**நன்பொருள்:** Son மகன்.

**நன்மை:** Utility பயன்; Virtue நன்னெறி; Good nature நற்குணம்; Abundance மிகுதி; Newness புதுமை.

**நன்றி:** Help உதவி; Virtue அறம்.

**நன்று:** Greatness பெரிது; Virtue அறம்; Happiness இன்பம்; Good deed நல் வினை; Benefit உபகாரம்; Heaven சுவர்க்கம்.

**நன்னி:** That which is small சிறியது.

**நனந்தலை:** Expanse அகன்ற இடம்; Region மண்டலம்; Direction திசை.

**நனவு:** Truth மெய்ம்மை; Width அகலம்; Wakefulness விழிப்பு நிலை; Stage அரங்கம்.

**நனி:** Abundantly மிகுதியாய்.

**நனை:** Flower bud பூவரும்பு; Honey தேன்; Toddy கள். - தல்: To appear தோன்றுதல்.

## நா

**நா:** Tongue நாக்கு; Word வார்த்தை.

**நாகத்தல்லி:** Kind of fragrant substance வாசனைப் பண்ட வகை.

**நாகபணம்:** An ornament அணி வகை.

**நாகம்:** Sky ஆகாயம்; Swarga சுவர்க்கம்; Cloud மேகம்; Nether region நாக லோகம்; Elephant யானை; Monkey குரங்கு; Mountain மலை; A tree புன்னை மரம்; Joy சுகம்.

**நாகரிகம்:** Politeness மரியாதை; Friendly regard கண்ணோட்டம்.

**நாகு:** Youthfulness இளமை; Femininity பெண்மை; Female of certain animals சில விலங்குகளின் பெண்.

**நாகுணம்:** An aromatic substance வாசனைப் பண்ட வகை.

**நாங்குழு-நாங்கூழ்:** Earthworm நாக்குப் பூச்சி.

**நாச்சேறு:** Abuse வசை.

**நாசி-நாசிகை:** Nose மூக்கு; A part of upper storey மாளிகையின் ஓர் உறுப்பு; A defect in singing இசைக் குற்ற வகை.

**நாஞ்சில்:** Plough கலப்பை; A part of fortification மதில் உறுப்பு.

**நாட்காலம்:** Early morning விடியற் காலம்; Appropriate period ஏற்ற பருவம்.

**நாட்சோறு:** Breakfast காலை உணவு.

**நாட்டம்:** Eye கண்; Investigation ஆராய்ச்சி; Artrology சோதிட நூல்; Beauty அழகு; Intention நோக்கம்; Suspicion சந்தேகம்; Movement சஞ்சாரம்; Establishing நிலை நிறுத்துகை.

**நாட்டாண்மை:** Office of village headman கிராமாட்சி.

**நாட்டு-தல்:** To establish நிலை நிறுத்துதல்; To create படைத்தல்; To write எழுதுதல்.

**நாட்டுநீங்கல்:** Land not owned by Government அரசாங்க உரிமை அற்ற கிராமம்.

நாட்பறை-நாண்முடிவு: Hour drum நாழிகைப் பறை.
நாடன்: Ruler ஆள்வோன்; Chief of mountain tract குறிஞ்சி நிலத் தலைவன்.
நாடா: Weaver's shuttle நெசவுக் கருவி வகை.
நாடி: Queen of country நாட்டரசி; A part of storey மேல் மாட உறுப்பு வகை.
நாடு: Country தேசம்; Agricultural tract மருத நிலம். -தல்: To seek தேடுதல்; To investigate ஆராய்தல்; To desire விரும்புதல்; To understand தெரிதல்; To resemble ஒத்தல்; To measure அளத்தல்; To think நினைத்தல்.
நாடுகாவல்: A tax வரி வகை.
நாண்: String கயிறு; Bashfulness கூச்சம்; Sense of shame வெட்கம்.
நாண்மகிழ்-நாண்மகிழிருக்கை: Durbar அரசன் கொலு.
நாண்மதி: Full moon முழுமதி.
நாண்மீன்: Lunar asterism அசுவினி முதலிய நட்சத்திரம்.
நாணு-தல்: To fear அஞ்சுதல்.
நாத்திகம்: Atheism கடவுள் இல்லை என்னும் கோட்பாடு; Blasphemy தெய்வ நிந்தனை.
நாத்தூண்: Husband's sister கணவனின் சகோதரி.
நாந்தகம்: Sword வாள்.
நாப்பண்: Middle நடு.
நாம்: Fear அச்சம்.
நாம்பு: Slender climber மெல்லிய கொடி.
நாமகள்: Goddess of learning சரசுவதி.
நாமநீர்: Sea கடல்.
நாமம்: Fear அச்சம்; Fullness நிறைவு; Name பேர்; Reputation புகழ்.
நாய்: Game pieces used in dice சூதாடு கருவி.
நாய்கன்: Merchant வியாபாரி.
நாயகப்பேர்: Head servant மேஸ்திரி.
நாயகம்: Head-ship தலைமை; Greatness மேம்பாடு.
நாயனார்: God கடவுள்; Father தந்தை.
நாயாடி: Hunter வேடன்.
நார்: Love அன்பு.
நாரதம்: A large yāḻ யாழ் வகை.
நாரம்: Rope கயிறு; Love அன்பு; Water நீர்.
நாரன்: Cupid மன்மதன்.
நாராசம்: Sharp iron rod இரும்புச் சலாகை.
நாராயம்: Arrow அம்பு; A measure அளவு படி வகை.
நாரி: Bow string வில் நாண்; Woman பெண்.
நால்-தல் (நாலுதல்): To hang தொங்குதல்.
நால்கு: Four நான்கு.
நால்வாய்: Elephant யானை.
நாலி: Pearl முத்து.
நாவல்: Shout of triumph வெற்றி முழக்கம்.
நாவழி: Tongue scraper நாக்கு வழிக்குங் கருவி.
நாவாய்: Ship மரக்கலம்; Kind of drum நெய்தல் நிலப் பறை.
நாவி: Navel தொப்புள்; Musk கஸ்தூரி; Civet புனுகு; Ship மரக்கலம்.
நாவிசம்: Barber's calling நாவிதத் தொழில்.
நாவுரி: A measure முகத்தலளவை வகை.
நாவேறு: A disease affecting betel வெற்றிலை நோய் வகை.
நாழ்: Pride கருவம்; Skill திறமை; Fault குற்றம்.
நாழம்: Abuse வசவு.
நாழி: A measure of capacity முகத்தளவை வகை.
நாழிகை: Indian hour of 24 mts. ஒரு கால அளவை; Weaver's shuttle நெசவுக் கருவி வகை.
நாழிகைத் தூம்பு: Wate'r squirt நீர் வீசுங் கருவி வகை.
நாழிகை வட்டில்: Hour glass நாழிகையை அறிவிக்கும் கருவி.
நாள்: Time காலம்; Lifetime ஆயுள்; Auspicious day நல்ல நாள்; Early dawn அதி காலை; Forenoon முற்பகல்; Lunar asterism அசுவினி முதலிய நட்சத்திரம்; Freshness புதுமை; Youth இளமை.
நாள்வாய்: Daily நாள்தோறும்.
நாளந்தி: Early morning அதிகாலை.
நாளம்: Tubularity உட்டுளை; Hollow stalk தண்டு; A gem மாணிக்க வகை.
நாளார்: Yama எமன்.
நாளிகேரம்: Coconut தென்னை.
நாளோலை: Invitation அழைப்போலை.
நாற்றம்: Smell மணம்.
நாற்ற வுணவு: Burnt offering அவி யுணவு.
நாற்றி: Fourfold நான்கு மடங்கு.
நாறு-தல்: To appear தோன்றுதல்.
நாறு: Seedling நாற்று.

நாளம்: Fragrant substance வாசனைப் பண்டம்; Musk கஸ்தூரி; Civet புனுகு; Fragrant powder வாசனைப் பொடி.
நானிலம்: Earth பூமி.
நானூல்: Sacred thread பூணூல்.
நிகண்டு: Metrical glossary சொற் பொருள் கூறும் செய்யுள் நூல்.
நிகமம்: Conclusion முடிவு; Vēdas வேதம்; Street தெரு.
நிகர்: Comparison ஒப்புமை; Equal சமானம்; Lustre ஒளி.-த்தல்; To rival மாறுபடுதல்.
நிகரம்: Multitude கூட்டம்; Heap குவியல்.
நிகழ்-தல்: To happen சம்பவித்தல்; To be current வழங்கி வருதல்; To enter புகுதல்; To abide தங்குதல்; To shine விளங்குதல்.
நிகழ்ச்சி: Event சம்பவம்; Business காரியம்.
நிகளம்: Fetters விலங்கு; Bondage பந்தம்.
நிகிலம்: Whole எல்லாம்.
நிகுஞ்சனம்: A dance pose அபிநய வகை.
நிகோதம்: Animal kingdom விலங்கினம்.
நிச்சம்: Always எப்பொழுதும்; Daily அன்றாடம்; Certainty உறுதி.
நிச்சயம்-நிச்சிதம்: Decision துணிவு.
நிசதம்-நிசதி: Without fail தவறாமல்.
நிசாசரன்: Asura அசுரன்; Moon சந்திரன்.
நிசாரி: Sun சூரியன்.
நிசாளம்: A drum பறை வகை.
நிசான்: Flag கொடி.
நிசி-நிசை: Night இரவு.
நிசிதம்: Sharpness கூர்மை.
நிசும்பன்: Murderer கொலைஞன்.
நிடதக்கை-நிடதம்: A dance gesture அபிநய வகை.
நிணம்: Fat கொழுப்பு; Flesh மாமிசம்.
நிணர்-தல்: To tie கட்டுதல்; To crowd செறிதல்.
நிணவை: Bondage பிணிப்பு.
நித்தம்: Eternity அழியாத நிலை; Dance நடனம்.
நித்தலம்-நித்திலம்: Pearl முத்து.
நித்திரை-நித்தை: Sleep தூக்கம்.
நிதனம்: Destruction நாசம்.
நிதானம்: Cause of disease நோய்க் காரணம்; Gold பொன்; Decision தீர்மானம்.
நிதி-நிதியம்: Treasure சேமித்து வைத்த பொருள்; Gold பொன்.
நிபந்தம்: Endowment for temple worship கோயிற் கட்டளைக்கு விடப்பட்ட நிலம்.
நிபம்: Cause காரணம்; Calumny கோள்.
நிம்பம்: Margosa வேம்பு.
நிம்பிரி: Jealousy பொறாமை.
நிம்போளம்: Kind of pearl முத்து வகை.
நிமந்தம்: Temple service கோயில் ஊழியம்.
நிமி-தல்: To twitch நெளிதல்.
நிமிடு-தல்: To roll between fingers நெருடுதல்.
நிமித்தம்-நிமித்து: Cause காரணம்; Omen சகுனம்.
நிமித்தி-நிமித்திகன்: Astrologer சோதிடன்.
நிமிர்-தல்: To exceed மிகுதல்; To extend பரத்தல்; To bend நுடங்குதல்; To walk நடத்தல்; To be far தொலைவாதல்; To try முயலுதல்; To interpose இடையிடுதல்.
நிமிரல்: Boiled rice சோறு.
நிமை: Eyelid இமை.
நியதி: Duty செய் கடன்; Order ஒழுங்கு; Destiny விதி; Restriction வரையறை; Always எப்பொழுதும்.
நியமம்: Duty கடமை; Town நகரம்; Temple கோவில்; Bazaar street கடைத் தெரு; Hall மண்டபம்.
நியமனம்: Order கட்டளை; Classification வகைப்பாடு.
நியமி-த்தல்: To determine நிர்மானித்தல்.
நியர்: Lustre ஒளி.
நியாயம்: Resemblance ஒப்பு; Society having common object ஒத்த நோக்குடைய சங்கம்.
நியாளம்: A drum பறை வகை.
நிர்த்தம்-நிருத்தம்: A dance நடன வகை.
நிர-த்தல்: To spread பரவுதல்; To be full நிரம்புதல்; To mix கலத்தல்; To be thick நெருங்குதல்; To arrange ஒழுங்கு படுத்துதல்.
நிரந்தரம்: Continuity இடைவிடாமை; Closeness நெருக்கம்; Ruin அழிவு.
நிரம்பம்: Perfection பூரணம்; Excellence சிறப்பு; Symmetry ஒப்புமை; Uniformity சமம்; Chastity கற்பு.
நிரப்பு: Poverty வறுமை.
நிரயம்-நிரையம்: Hell நரகம்.
நிரல்: Row வரிசை; Similarity ஒப்பு.

நிரவு-தல்: To spread பரவுதல்; To demolish அழித்தல்.
நிராமயம்: That which is free from disease நோய் அற்றது.
நிராலம்பம்: Absence of support பற்றுக்கோடின்மை.
நிருதர்: Rākṣasas அரக்கர்.
நிருபம்: Letter கடிதம்.
நிருபன்: King அரசன்.
நிருமி-த்தல்: To create படைத்தல்; To determine உறுதி கொள்ளுதல்.
நிரை: Row வரிசை; Order ஒழுங்கு; Temple tower கோபுரம்; Collection கூட்டம். -த்தல்: To spread பரப்புதல்; To string கோத்தல்; To follow தொடர்தல்.
நில்-தல் (நிற்றல்): To be steadfast உறுதியாக இருத்தல்; To stay தங்குதல்; To be subdued அடங்குதல்; To be left எஞ்சுதல்.
நிலம்: World உலகு; Place இடம்; Storey மேல் மாடம்.
நிலயம்-நிலையம்: Abode தங்குமிடம்; Temple கோயில்; Dance கூத்து.
நிலவர்: Persons who sound depth of water நீரின் நிலையை முழுகி அறிபவர்.
நிலவரம்: Permanence நிலைபேறு; State நிலைமை.
நிலவு-தல்: To be permanent நிலைத்திருத்தல்.
நிலாவு-தல்: To meditate தியானித்தல்; To resemble ஒப்பாதல்.
நிலுவை: Standing தங்குகை; Balance பாக்கி.
நிலை: Standing நிற்கை; Character தன்மை; Place இடம்; Tier அடுக்கு; Prescribed path நெறி; Family குலம்; Hereditary right பரம்பரை உரிமை; A unit of time முகூர்த்தம்.
நிலைக்களம்: Revenue office வரி தண்டும் சாலை.
நிலைநீர்: Ocean கடல்.
நிலைமை: Strength திண்மை.
நிலையாறு-தல்: To be pacified அமைதியுறுதல்.
நிவ-த்தல்: To rise உயர்தல்; To grow வளர்தல்; To spread படர்தல்; To appear தோன்றுதல்.
நிவந்தம்: Allotted duties வேலைத் திட்டம்; Place of worship கடவுளை வழிபடும் இடம்; Temple expense கோயிற் செலவு.
நிவிர்த்தி: Release விடுதலை; Remedy போக்கு.
நிழத்து-தல்: To wane நுணுகுதல்.
நிழல்: Lustre ஒளி; Grace அருள்; Place இடம். -தல் (நிழற்றல்): To shelter காப்பமைதல்.
நிழற்று-தல்: To be calm அடங்குதல்.
நிறம்: Nature இயல்பு; Lustre ஒளி; Fame புகழ்; Harmony இசை; Breast மார்பு; Middle place நடுவிடம்; Body சரீரம்; Skin தோல்.
நிறு-த்தல்: To decide தீர்மானித்தல்; To create படைத்தல்; To arrange வரிசைப் படுத்தல்.
நிறை: Splendour மாட்சிமை; A time measure தாள வகை; Stopping நிறுத்துகை; Fixity பதிவு; Chastity கற்பு; Strength of mind மன உறுதி; Vow சபதம்; Strength வலி; Concentration மன ஒருமை.
நிறைவு: Joy மகிழ்ச்சி; Excellence மேன்மை; Final bliss மோட்சம்.
நின்றாடல்: Kind of dance நடன வகை.
நினைப்பிடு-தல்: To give command ஆணையிடுதல்.

## நீ

நீ-த்தல்: To separate பிரிதல்; To renounce துறத்தல்; To despise இகழ்தல்.
நீக்கம்: End முடிவு.
நீகான்-நீயான்: Steersman மாலுமி.
நீச்சு-நீத்து: Flood வெள்ளம்; Swimming நீந்துகை; Deep water ஆழ நீர்.
நீசம்: Meanness இழிவு.
நீட்டு: Distance தூரம்; Royal writ திருமுக ஓலை.
நீடு: Long time நெடுங்காலம்; Permanence நிலைத்திருக்கை. - தல்: To decay கெடுதல்; To delay தாமதித்தல்.
நீடுநீர்: Sacred water தீர்த்தம்.
நீண்மை: Antiquity பழமை.
நீண்மொழி: Vow சபதம்.
நீணு-தல்: To go long distance நெடுந்தூரம் செல்லுதல்.
நீத்தம்: Flood வெள்ளம்; Depth ஆழம்; Sea கடல்; Excess மிகுதி.
நீதம்-நீதி: That which is proper தகுதியானது; Rectitude முறைமை.
நீந்து: Ocean கடல். -தல்: To overflow பெருகுதல்; To overcome வெல்லுதல்; To give up விடுதல்.
நீப்புரவு: Leaving நீங்குகை.
நீபம்: Common Indian oak வெண்கடம்பு.

புனல்: Water நீர்; Cold குளிர்ச்சி.
புனலி: Wild jasmine காட்டு மல்லிகை.
புனவேடு: Kind of dance கூத்து வகை.
புனிதம்: Purity சுத்தம்.
புனிறு: Recency of delivery ஈன்றணிமை.
புனை: Fetters விலங்கு; Water நீர்.-தல்: To wear தரித்தல்; To adorn அலங்கரித்தல்; To paint சித்திரம் எழுதுதல்; To plait முடைதல்; To build கட்டுதல்; To praise புகழ்தல்; To exaggerate மிகுத்துச் சொல்லுதல்.

## பூ

பூ: Lotus தாமரைப்பூ; Floral design பூத்தொழில்; Cock's comb சேவற்கொண்டை; Colour நிறம்; Beauty பொலிவு; Spot on elephant's forehead யானையின் நெற்றிப் புகர்.-த்தல்: To appear தோன்றுதல்.
பூகதம்-பூகம்: Areca palm கமுக மரம்.
பூசல்: Battle போர்; Expression வெளிப்படுத்துகை; Clamour முறையீடு; Distress வருத்தம்.
பூசனை: Puja பூசை.
பூசு-தல்: To clean கழுவுதல்; To fit in பொருந்துதல்.
பூசை-பூஞை: Cat பூனை.
பூட்கை: Resolution உறுதி; Strength வலிமை; Elephant யானை.
பூட்சி: Ornament ஆபரணம்; Body உடல்; Union புணர்ப்பு; Determination உறுதி; A tax வரி வகை.
பூட்டகம்: Vanity வீண் பெருமை; Trick வஞ்சகம்.
பூட்டு: A head ornament worn by women மகளிர் தலையணி வகை; Solidarity of army சேனைக்கட்டு.
பூட்டை: Picottah ஏற்ற மரம்; Wheel of pully இராட்டினத்தின் சக்கரம்.
பூண்: Ornament ஆபரணம்; Armour கவசம்.-தல்: (பூணுதல்): To surround சூழ்ந்துகொள்ளுதல்; To undertake மேற்கொள்ளுதல்.
பூணி: Bullock மாடு; Kind of water bird நீர்ப்பறவை வகை.-த்தல்: To cause to appear தோற்றுவித்தல்; To make vow சபதம் செய்தல்; To decide நிர்மாணித்தல்.
பூதம்: Creature உயிர் வர்க்கம்.
பூதரம்: Mountain மலை.
பூதி: Wealth செல்வம்; Sacred ashes திருநீறு; Gold பொன்.
பூநாகம்: Roundworm நாகப்பூச்சி.
பூநீர்: Red coloured water அரக்கு நீர்.
பூப்பு: Menstruation மாதவிடாய்; Maturity திரளுகை.
பூரணை: Fullness நிறைவு.
பூரப்பாளை: A piece in woman's head ornament தலைக்கோலத்தின் ஓர் உறுப்பு.
பூராயம்: Investigation ஆராய்ச்சி.
பூரி: Abundance மிகுதி; Gold பொன்; Total மொத்தம்.-த்தல்: To be full நிறைதல்; To rejoice களித்தல்; To create படைத்தல்.
பூரிகை: Trumpet ஊதுகுழல்.
பூரிமம்: Cistern தொட்டி; Side of street தெருவின் சிறை.
பூரியர்: Low people கீழ்மக்கள்.
பூரை: End முடிவு; Worthless person உதவாக்கறை.
பூல்-பூலா: Kind of plant செடி வகை.
பூவல்: Red earth செம்மண்.
பூவன்-பூவிலோன்: Brahma பிரமன்.
பூவிலை: Prostitutes' hire விலைமாதர் பெறும் பணம்.
பூவை: A tree காயாமரம்; Bush-myna நாகணவாய்ப் புள்.
பூழ்: Quail காடை வகை; Jungle fowl காட்டுக் கோழி.
பூழி: Powder தூள்; Dust புழுதி.
பூழில்: Eaglewood அகில்.
பூழை: Wicket gate சிறு வாயில்; Opening துவாரம்.
பூளை: Red silk-cotton இலவு; Kind of plant செடி வகை.

## பெ

பெங்கு: Bad conduct தீயொழுக்கம்.
பெட்டகம்: Box பெட்டி.
பெட்டு: Lie பொய்; Delusive word மயக்கு வார்த்தை.
பெட்பு: Desire விருப்பம்; Cherishing பேணுகை.
பெண்டாட்டி-பெண்டு: Woman பெண்.
பெண்ணை: Palmyra palm பனை.
பெண்மகள்: Young immature girl பேதைப் பெண்.
பெண்மை: Modesty அடக்கம்; Chastity கற்பு.
பெதும்பை: Woman பெண்.
பேய்-தல்: To pour வார்த்தல்; To throw வீசி எறிதல்: To make அமைத்தல்; To draw வரைதல்; To put on அணிதல்; To use உபயோகித்தல்; To tie கட்டுதல்.

பெயர்-பேர்: Fame புகழ்; Shape வடிவு; Wealth பொருள்; Vow சபதம்.-தல்: To move போதல்; To shift பிறழ்தல்; To return மீளுதல்; To change மாறுதல்; To shake சலித்தல்; To chew cud அசை போடுதல்; To be separated பிரிதல்; To be agitated கிளர்தல்.-த்தல்: To ruin கெடுத்தல்; To absorb ஒடுக்கிக்கொள்ளுதல்; To drive செலுத்துதல்.

பெயல்: Rain மழை; Cloud மேகம்.

பெருகியல்: A melody type பண் வகை.

பெருங்கலம்: Kind of yāḻ யாழ் வகை.

பெருங் காடு: Burning ground சுடுகாடு.

பெருங்குறிச் சபை: Great assembly of village ஊர்ப் பெருஞ் சபை.

பெருங் கை: Elephant யானை.

பெருஞ் சோறு: Military feast படை விருந்து.

பெருந்தனம்: A class of dancing girls கணிகையரில் ஒரு பிரிவினர்.

பெருந் திணை: A major theme of akaporuḷ அகத்திணை வகை.

பெருநடை: Kind of dance கூத்து வகை.

பெரு நம்பி: Title of prince இளவரசர் பட்டப்பெயர்.

பெரு நாள்: Festival திருநாள்.

பெரும்பான்மை: Praise புகழுரை.

பெரும் பிழுக்கை: Kind of dance கூத்து வகை.

பெரும்பூ: Annual agricultural produce நிலத்தின் ஆண்டு வருவாய்.

பெரும்பூண்: Chest ornament மார்பணி.

பெருமங்கலம்: Benediction வாழ்த்து.

பெருமாள்: Eminent person பெருமையுடையவன்.

பெருமாள்: Lady பெருமாட்டி.

பெருமிதம்: Greatness மேம்பாடு; Pride செருக்கு.

பெருமூளை: Song இசைப் பாட்டு வகை.

பெருவங்கியம்: A musical instrument வாத்திய வகை.

பெரு வழி: Path of salvation முத்தி நெறி.

பெருவீடு: Letting out cattle in evening for grazing பிற்பகலில் மாடுகளை மேய விடுகை.

பேள்-தல் (பேட்டல்): To desire விரும்புதல்; To be immoderate மிகுதல்; To protect பாதுகாத்தல்.

பேற்றம்: Greatness பெருமை; Wind காற்று; Bull, cow மாடு; Buffalo எருமை.

பேற்றி: Nature இயல்பு; Greatness பெருமை; Boon பேறு; Fast விரதம்; Method முறை.

பேற்று: Greatness பெருக்கம்; Influence செல்வாக்கு.

பேறுக்கல்: Rice அரிசி.

பேறுதி: Profit இலாபம்; Goal அடையத் தகும் பொருள்.

பேறு மூரி: Wages சம்பளம்.

## பே

பே - பேனம்: Foam நுரை.

பேடகம்: A garment ஆடை வகை.

பேடன்: Hermaphrodite with predominating male characteristics ஆண் தன்மை மிகுந்த அலி.

பேடி: Hermaphrodite with predominating female characteristics பெண் தன்மை மிகுந்த அலி; Middle finger நடு விரல்.

பேடு: Kind of dance கூத்து வகை. Female sex பெண்பால்; Middle finger நடு விரல்.

பேண்-தல்-பேணுதல்: To protect போற்றுதல்; To desire விரும்புதல்; To swallow விழுங்குதல்; To know அறிதல்; To resemble ஒத்தல்.

பேணமை: Enmity பகைமை.

பேதம்: Difference வேறுபாடு.

பேது: Confusion மயக்கம்; Sorrow துயரம்; Ignorance அறிவின்மை.

பேதை: Simpleton அறிவிலி; Woman பெண்.

பேம்: Fear அச்சம்.

பேய்த்தேர்: Mirage கானல் நீர்.

பேரணி: Rear of army சேனையின் பின் பகுதி; Ferrule of elephant's tusk கிம்புரி.

பேரன்: Grand-father பாட்டன்.

பேராண்மை: Honour மானம்.

பேரி-பேரிகை-பேரியம்: Kettle drum முரசு.

பேரியாழ்: Kind of yāḻ யாழ் வகை.

பேழ்-பேழை: Largeness பெருமை.

பேழ்கணி-பேகணி - த்தல்: To be distressed துயருறுதல்; To change colour நிறம் மாறுதல்; To fear அஞ்சுதல்; To close one's eyes கண் மூடுதல்; To stare மருண்டு விழித்தல்.

பேழை: Box பெட்டி.

பேறு: Receiving பெறுகை; Anything worth obtaining அடையத்தக்கது;

Result பயன்; Wealth செல்வம்; Good fortune நல்வினை.

## பை

பை: Greenness பசுமை; Youth இளமை; Beauty அழகு; Strength வலிமை; Cobra hood பாம்பின் படம். -த்தல்: To rise up பொங்குதல்.

பைங்கண்: Tender body பசிய உடம்பு.

பைங்கொடி: A creeper கொடி வகை.

பைசல்-பையல்: Small boy பையன்.

பைதல்: Small boy பையன்; Distress துன்பம்.

பையரிப்பு: Distress துன்பம்.

பையுள்: Disease நோய்; Distress துன்பம்; Confusion மயக்கம்.

## பொ

பொக்கணம்: Beggar's bag பை.

பொக்கம்: Lie பொய்; Deceit வஞ்சகம்; Bloom பொலிவு.

பொக்கு-பொக்கை: Fault குற்றம்.

பொகடி: Woman's ear ornament மாதர் காதணி வகை

பொகுட்டு: Water bubble நீர்க் குமிழி; Pericarp of lotus தாமரைப் பூவின் கொட்டை.

பொதுவல்: A bird பறவை வகை.

பொங்கடி: Elephant யானை.

பொங்கர்: Branch of tree மரக்கிளை; Faded flower வாடற் பூ.

பொங்கல்: Toddy கள்.

பொங்கழி: Unsifted paddy தூற்றாத நெல்.

பொங்கு-தல்: To rise எழுதல்; To be haughty செருக்குறுதல்; To be attractive அழகுறுதல்; To be rapid விரைதல்; To sound ஒலித்தல்.

பொச்சம்-பொச்சை: Defect குற்றம்; Lie பொய்.

பொச்சா-த்தல்: To forget மறத்தல்; To ridicule இகழ்தல்; To be indecisive மனந் தடுமாறுதல்.

பொசி-தல்: To ooze கசிதல்.

பொட்டு: Kind of ornament அணி வகை; Dust பொடி.-தல்: To perish அழிதல்.

பொடி-தல்: To be blighted தீய்தல்; To become dim ஒளி மழுங்குதல்; To be angry கோபித்தல்; To rebuke கண்டித்தல்; To dislike வெறுத்தல். -த்தல்: To appear தோன்றுதல்; To shine விளங்குதல்.

பொத்தகம்: Book புத்தகம்.

பொத்தி: Kind of gem இரத்தின வகை.

பொத்து: Hole பொக்கு; Stomach வயிறு; Defect தவறு; Lie பொய்.-தல்: To bury புதைத்தல்; To hide மறைத்தல்; To beat அடித்தல்; To kindle தீ மூட்டுதல்; To string together கோத்தல்; To imagine கற்பனை செய்தல்; To mix கலத்தல்; To be filled நிறைதல்.

பொதி: Fullness நிறைவு; Pack மூட்டை; Tie பிணிப்பு; Collection தொகுதி; Flower bud அரும்பு; Cluster கொத்து; Tender shoot முளை; Body உடல். -தல்: To store up சேமித்தல்.

பொதியறை: Underground room நிலவறை.

பொதிர்-தல்: To swell பருத்தல்; To tremble நடுங்குதல். -த்தல்: To pierce குத்துதல்; To break முரித்தல்.

பொது: Likeness ஒப்பு; Public place மன்று. -த்தல்: To bore துளைத்தல்.

பொதுக்கை: A dance gesture அபிநய வகை.

பொதுங்கு-தல்: To suffer வருந்துதல்.

பொதும்பு: Grove சோலை; Shrubby jungle குறுங் காடு; Pit குழி; Cave குகை.

பொதுமை: Goodness நன்மை.

பொதுவர்: Herdsmen இடையர்; Prostitutes பொது மகளிர்.

பொதுவில்-பொதியில்: Public hall அம்பலம்.

பொதுளு-தல்: To be close நெருங்குதல்; To be filled நிறைதல்; To thrive தழைத்தல்.

பொம்மல்: Bloom பொலிவு; Abundance மிகுதி; Size பருமன்; Boiled rice சோறு; Joy மகிழ்ச்சி.

பொய்: Tubularity துளை. -தல்: To fell down வீழ்த்துதல். -த்தல்: To fail தவறுதல்; To go to ruin அழிதல்; To deceive வஞ்சித்தல்.

பொய்கை: Pond நீர்நிலை.

பொய்தல்: Woman's pastime மகளிர் விளையாட்டு.

பொரி: Fried curry பொரியல்.

பொரு: To resemble ஒத்தல்; To fight போர் செய்தல்; To play, as yāḻ தடவுதல்.

To join பொருந்துதல்; To multiply பெருக்குதல்.

பொருக்கு: Bark மரப்பட்டை; Quickness விரைவு.

பொருட்கை: A dance gesture அபிநய வகை.

பொருத்து-தல்: To instigate போர் மூட்டுதல்.

பொருநன்: Warrior வீரன்; King அரசன்; Exemplar உவமிக்கப் படுவோன்; Enemy பகைவன்; Bard பாணன்.

பொருப்பு: Mountain மலை.

பொருமல்: Fear அச்சம்; Trouble துன்பம்; Sobbing விம்முகை; Plumpness பருமை.

பொருள்: Reality மெய்ம்மை; That which is valued மதிக்கப்படுவது; Doctrine கொள்கை; Virtue அறம்; Result பயன்; Final bliss மோட்சம்; Gold பொன்; Beauty spot சுணங்கு; The thing compared உவமேயம்.

பொல்லம்: Joining இணைக்கை.

பொல்லாங்கு: Evil தீது.

பொல்லாப்பு: Trouble துன்பம்.

பொல்லான்: Species of horse குதிரை வகை.

பொலம்: Gold பொன்; Beauty அழகு.

பொலி-தல்: To abound மிகுதல்; To flourish செழித்தல்; To shine விளங்குதல்; To be auspicious மங்கலமாதல்.

பொலிசை: Gain ஊதியம்; Interest வட்டி.

பொழி: Joint கணு; Peel தொலி. -தல்: To pour பெய்தல்; To abound நிறைதல்; To settle தங்குதல்.

பொழிப்பு: Paraphrase பொழிப்புரை; Exordium நான்முகம்.

பொழில்: Park சோலை; World உலகம்.

பொழுது: Moment நொடி; Sun சூரியன்.

பொள்ளல்-பொள்ளை: Hole துளை.

பொளி-தல்: To chisel உளியாற் கொத்துதல்; To break இடித்தல். -த்தல்: To tear கிழித்தல்.

பொற்பு: Beauty அழகு; Magnificence பொலிவு; Abundance மிகுதி; Nature தன்மை.

பொற்றுரை - பொற்றேரை - பொற்றேரை: Waist ornament இடையணி.

பொற்றை: Hillock சிறு குன்று.

பொறி: Stripe வரி; Spot புள்ளி; Scar தழும்பு; Seal இலாஞ்சனை; Insignia விருது; Mark on body மெய்க் குறி; Bee வண்டு; Peacock's tail பீலி; Image பதுமை; Fate விதி; Joint மூட்டுவாய்; Sense organ இந்திரியம்; Mind மனம்; Knowledge அறிவு; Spark நெருப்புப் பொறி; Brightness ஒளி; Machine எந்திரம்; Stratagem தந்திரம்; Diadem நெற்றிப் பட்டம்; Riches செல்வம்; Roundness திரட்சி.

பொறு-த்தல்: To bear சுமத்தல்.

பொறை: Hill குன்று; Burden பாரம்; Earth பூமி; Patience பொறுமை; Strength வலிமை.

பொறையாட்டி: Priestess who offers sacrifice பலி கொடுக்கும் பூசாரிப் பெண்.

பொறை யுயிர்த்தல்: To disburden சுமை இறக்குதல்; To be delivered of child பிரசவித்தல்.

பொன்: Metal உலோகம்; Wealth செல்வம்; Ornament ஆபரணம்; Marriage badge திருமங்கலியம்; Grandeur பொலிவு; Paleness of complexion பசலை; Beauty அழகு; Eminence ஏற்றம்; Lakṣmi இலக்குமி; Jupiter வியாழன்; Sun சூரியன்.

பொன்செய்-தல்: To do good deed நற்செயல் செய்தல்.

பொன்மாரி: Kind of horse குதிரைச் சாதி வகை.

பொன்று-தல்: To perish அழிதல்; To fail தவறுதல்.

பொன்றெறு-தல்: To take oath ஆணையிடுதல்.

பொன்னி: The Kāvēri காவிரி ஆறு.

## போ

போக்கடி: Remedy பரிகாரம்; Refuge புகல்; Opportunity வாய்ப்பு.

போக்கு: Recovery மீட்சி; Ruin கேடு; Fault குற்றம். -தல்: To complete செய்து முடித்தல்; To inform உணர்த்துதல்; To bind கட்டுதல்; To emaciate மெலிவித்தல்.

போகடு-தல்: To let go போகவிடுதல்.

போகம்: Pleasure இன்பம்; Crop விளைவு.

போகி: Indra இந்திரன்.

போங்கம்: Kind of tree மஞ்சாடி மரம்.

போட்கன்-போழ்க்கன்: Liar பொய்யன்; Shameless person சுணைகேடன்.

போத்து: Male ஆண்; Fault குற்றம்.

போதகம்: Elephant யானை.

போதம்: Wisdom ஞானம்; Ship மரக்கலம்.
போதா-தல் (போதருதல்)-போரு. -தல்: To go போதல்; To come வருதல்; To be inferred பெறப்படுதல்.
போதா: Cyprus crane பெரு நாரை.
போதி: Wisdom ஞானம்: Pipal tree அரசமரம்.
போதி-போதிகை: Capital of pillar தூண்மேல் உள்ள தாங்கு கட்டை.
போது: Bud மொட்டு; Freshness செவ்வி.
போதுசெய்-தல்: To blossom மலருதல்; To eat உண்ணுதல்.
போந்து-போந்தை: Palmyra palm பனை மரம்.
போய்ப்பாடு: Fame புகழ்; Largeness பெரிதாயிருக்கை.
போர்: Heap குவியல். -த்தல்: To wear அணிதல்.
போர்க் கதவு: Batten door இணைப்புக் கதவு.
போர்பு-போர்வு: Grain heap தானியப் போர்.
போரான்: Kind of horse குதிரை வகை.
போலி: Similarity ஒப்பு.
போழ்: Cleft பிளவு; Piece துண்டம்; Leather strap தோல் வார்; Sheet தகடு. -தல்: To pierce ஊடுருவுதல்.
போழம்: Inconsistency முரண்பாடு.
போற்றிடு: System of watch பாது காவல் வகை.
போற்று-தல்: To praise துதித்தல்; To protect பாதுகாத்தல்; To adhere கடைப்பிடித்தல்.
போனகம்: Food உணவு.

## பௌ

பௌவம்: Depth ஆழம்; Sea கடல்.

## ம

மக்கட்டு: Waistband அரைக்கச்சு.
மகண் மா: A fabulous animal விலங்கு வகை; Hermaphrodite அலி.
மகன்மை-மகமை-மகன்மை: Levy for temple, chatram கோயில், சத்திரச் செலவுக்கான வரி.
மகப்பு: Greatness பெருமை.
மகம்: Sacrifice யாகம்.
மகரம்: Shark சுறா; Thigh ornament தொடை யணி.
மகரமுகம்: A dance gesture அபிநய வகை.
மகர யாழ்: Kind of yāḻ யாழ் வகை.
மகவு: Infant பிள்ளை.
மகள்: Woman பெண்; Wife மனைவி.
மகன்: Male ஆண் பிள்ளை; Warrior வீரன்; Husband கணவன்.
மகன்றில்: A bird பறவை வகை.
மகி: Earth பூமி.
மகிடம்: Buffalo எருமை.
மகிழ்: Toddy மது; Intoxication குடிவெறி; A tree மகிழமரம்.-தல்: To rejoice மனங் களித்தல்.
மகிழ்நன்-மகிணன்: Husband கணவன்; Chief of agricultural tract மருதநிலத் தலைவன்.
மகுடம்: Crown மணி முடி.
மகுடி-மகிடி: A musical instrument இசைக் கருவி வகை.
மகுளி: Noise ஓசை; A plant disease செடி நோய் வகை.
மங்கலக் கருவி: Razor சவரக் கத்தி; Musical instrument இசைக் கருவி.
மங்கலம்: Goodness நன்மை; Auspiciousness சுபம்; Marriage badge தாலி.
மங்குல்: Cloud மேகம்; Sky ஆகாயம்; Darkness இருட்டு; Direction திசை.
மங்கை: Woman பெண்.
மச்சம்: Sample மாதிரி.
மசகம்: Mosquito கொசு.
மசி-த்தல்: To mix குழைத்தல்.
மஞ்சம்: Cot கட்டில்; Platform திண்ணை.
மஞ்சரி: Bunch of flowers பூங்கொத்து.
மஞ்சனம்: Bath நீராடல்.
மஞ்சாடி: Kind of tree மர வகை; A measure of weight எடை வகை.
மஞ்சிக்கம்: Village poramboke கிராமத் தரிசு.
மஞ்சிகை: Box பெட்டி; Storeroom கொட்டாரம்; Grain bin தொம்பை; An ear ornament காதணி வகை.
மஞ்சீரம்: Anklet காற்சிலம்பு.
மஞ்சு: Beauty அழகு; Cloud மேகம்; Strength வலிமை.
மஞ்சுளம்: Beauty அழகு; Softness மிருது.
மஞ்ஞை: Peacock மயில்.
மட்கு-தல்: To deteriorate குன்றுதல்.
மட்டி: Coiling மண்டலிக்கை. -த்தல்: To destroy அழித்தல்; To daub பூசுதல்; To knead பிசைதல்.
மட்டு: Honey தேன்; Toddy கள்; Sweet juice சாறு; Fragrance வாசனை.

மட்டை: Baldness மொட்டை.

மடங்கல்: Submarine fire வடவைத் தீ; Termination of yuga ஊழிக்காலம்; Yama எமன்; Lion சிங்கம்.

மடந்தை: Woman பெண்.

மடப்புறம்: Endowments to mutt மடத்துக்கு விடப்பட்ட இறையிலி நிலம்.

மடம்: Ignorance அறியாமை; Beauty அழகு; Tenderness மென்மை.

மடல்: Leaf of palm etc. பனை முதலியவற்றின் ஓலை; Jagged stem of palmyra leaf பனங் கருக்கு; Horse of palmyra stems பனங் கருக்கால் குதிரை போற் செய்த ஊர்தி; Flower petal பூவிதழ்; Branch கிளை; Receptacle for sacred ashes and sandal திருநீறும் சந்தனமும் வைக்கும் கலம்; Blade of weapon ஆயுத அலகு; Hand கை.

மடவரல்: Woman பெண்.

மடவளாகம்-மடவிளாகம்: Streets around temple மாடவீதி.

மடவை: Fork கவைக்கால்.

மடா-மிடா: Large earthen vessel பெரிய மண் பானை.

மடி: Belly வயிறு; Garment ஆடை; Idleness சோம்பல்; Bad odour துர் நாற்றம்; Times மடங்கு.-தல்: To fall வீழ்தல்; To sleep தூங்குதல்; To shrink சுருங்குதல்; To perish அழிதல்; To forget மறத்தல்.

மடியில்: Tent கூடாரம்.

மடியுறை: Astonishment வியப்பு.

மடிவை: Foliage தழை.

மடு: Pond நீர்நிலை; Deep place in river ஆற்றிடைப் பள்ளம்.-த்தல்: To take in உட்கொள்ளுதல்; To join பொருத்துதல்; To feed ஊட்டுதல்; To plunge மூழ்குதல்; To pierce குத்துதல்.

மடை: Cooking சமையல்; Food சோறு; Clasp மூட்டு.

மண்: Cement சாந்து; Drum Paste மார்ச்சனை. -தல் (மண்ணுதல்): To plunge மூழ்குதல்; To wash கழுவுதல்; To smear பூசுதல்; To do செய்தல்; To adorn அலங்கரித்தல்; To polish செப்பமிடுதல்.

மண்டலம்-மண்டிலம்: Earth பூமி; Circle வட்டம்; A pace of horse குதிரைக் கதி வகை; Assembly கூட்டம்; A dance gesture அபிநய வகை.

மண்டிலம்: Mirror கண்ணாடி.

மண்டு-தல்: To be close together நெருங்குதல்; To move swiftly விரைந்து செல்லுதல்; To abound மிகுதல்.

மண்டை: Beggar's bowl பிச்சைப் பாத்திரம்; Earthen vessel மண் கலம்; A standard of measurement ஓர் அளவை; Prostitute வேசை.

மண்ணீடு: Plaster image சுதையாற் செய்த பாவை.

மண்ணை: Bluntness மொண்ணை; Fool மூடன்; Youth இளமை; Devil பேய்.

மணம்: Union கூடுகை; Marriage கல்யாணம்.

மணவாளன்: Husband கணவன்; Master தலைவன்.

மணாட்டுப்பெண்: Daughter-in-law மருமகள்.

மணி: Gem நவரத்தினம்; Sapphire நீலமணி; Ruby மாணிக்கம்; Crystal பளிங்கு; Snake-stone விஷம் நீக்குங் கல்; Bead உருண்டைப் பொருள்; Beauty அழகு; Light ஒளி.

மணிச்சிகை: Crab's eye குன்றிமணி.

மத்தகம்: Head தலை; Forehead நெற்றி; Kind of woman's head ornament மகளிர் தலையணி வகை; Front முகப்பு.

மத்தம்: Intoxication களிப்பு; Bewilderment மயக்கம்; Must யானை மதம்; Madness பைத்தியம்; Purple stramony கரு ஊமத்தை.

மத்தளி: Body உடல்.

மத்திரம்: Joy மகிழ்ச்சி.

மத்திரி-த்தல்: To be angry கோபித்தல்.

மதங்கம்: A drum பறை வகை.

மதங்கன்: Class of pāṇars பெரும் பாணன்.

மதங்கி: Singing danseuse ஆடல் பாடல் வல்லவள்.

மதம்: Religion சமயம்; Joy மகிழ்ச்சி; Strength வலிமை; Honey தேன்; Intoxication போதை வெறி; Musk கஸ்தூரி.

மதர்: Arrogance செருக்கு.-த்தல்: To increase மிகுதல்.

மதலை: Prop பற்றுக்கோடு; Pillar தூண்; Cornice வீட்டின் கொடுங்கை; Attachment பற்று; Ship மரக்கலம்; Child குழந்தை.

மதன்: Ignorance மடமை; Strength வலிமை.

மதனம்: Churning கடைகை; Destruction அழிக்கை.
மதனன்-மதன்: Cupid மன்மதன்.
மதாணி: Pendant of necklace பதக்கம்.
மதாவரிசி-மதியங்கு: A fragrant substance வாசனைப் பொருள் வகை.
மதாளி-த்தல்: To be too luxuriant கொழுத்துக் கெடுதல்.
மதி: Intellect அறிவு; Esteem மதிப்பு; Moon சந்திரன்; Month மாதம்; Sign of zodiac இராசி; Kubēra குபேரன்; Elephant யானை.-த்தல்: To meditate தியானித்தல்; To decide துணிதல்; To churn கடைதல்; To run amuck மதம் கொள்ளுதல்.
மதிமுகம்: A magic art மந்திர வித்தை வகை.
மதியம்: Middle நடு.
மதிரம்-மதுகம்: Toddy கள்.
மது-மதுவம்: Honey தேன்; Toddy கள்.
மதுகம்-மதூகம்: Kind of tree இருப்பை மரம்.
மதுகரம்-மதுபம்: Bee தேனீ.
மதுகை: Strength வலிமை; Konwledge அறிவு.
மதுங்கு-தல்: To be sweet இனிமையாதல்.
மந்தணம்: Deliberation ஆலோசனை; Secret இரகசியம்.
மந்தம்: Dullness மட்டம்; Softness மிருதுத்தன்மை; Medium note பாடற் பயன் வகை; Low tone படுத்தலிசை; Density செறிவு; Freshness புதுமை.
மந்தரம்: Lowest pitch படுத்தலோசை.
மந்தாரம்: A celestial tree தேவலோக மர வகை; Shoe-flower செம்பரத்தை.
மந்தி: Female monkey பெண் குரங்கு; Sun சூரியன்.
மந்திரம்: Deliberation ஆலோசனை; House வீடு.
மந்துரை: Row of horses குதிரைப் பந்தி; Horse stable குதிரைச் சாலை.
மம்மர்: Sorrow துக்கம்; Delusion மயக்கம்.
மய-த்தல்: To mistake மயங்குதல்.
மயக்கு-தல்: To unite சேர்த்தல்; To destroy அழித்தல்; To disturb நிலை கெடுத்தல்; To fight போர்செய்தல்.
மயங்கு-தல்: To resemble போலுதல்; To be close நெருங்குதல்.
மயம்: Nature தன்மை; Fullness நிறைவு; Beauty அழகு; Arrogance செருக்கு.
மயர்: Lascivious person காமுகன்.
மயல்: Bewilderment மயக்கம்; Madness பைத்தியம்; Weariness சோர்வு; Desire ஆசை; Lust காமம்; Māyā மாயை; Doubt சந்தேகம்; Dried leaves செத்தை.
மயிலை: Tuscan jasmine இருவாட்சி.
மயிற்கழுத்து: A necklace கழுத்தணி வகை.
மயூரம்: Peacock மயில்.
மர்க்கடம்-மற்கடம்: Monkey குரங்கு.
மரக்கால்: Kind of dance கூத்து வகை.
மரகதம்-மாரதகம்: Emerald பச்சைக் கல்.
மரபு: Usage வழக்கம்; Ancestral line குடி வழி; Characteristic இயல்பு; Good conduct நல்லொழுக்கம்; Greatness மேம்பாடு; Reverence வழிபாடு; Age பருவம்.
மரமணி: Calling bell for cattle கால் நடையை அழைக்கும் மணி.
மரல்: Bow string hemp பெருங் குரும்பை.
மரவம்-மரவு-மரா: Kind of Indian oak கடம்பு வகை.
மராமரம்: Kind of tree ஆச்சா மரம்.
மரி-த்தல்: To die சாதல்.
மரிசாதி: Respect மரியாதை.
மரியவர்: Followers பின்பற்றுபவர்.
மரியாதி: Manner மாதிரி.
மரு: Fragrance வாசனை; Marjoram வாசனைச் செடி வகை.
மருகன்-மருமான்: Descendant வழித் தோன்றல்.
மருங்கு: Side பக்கம்; Waist இடை; Form வடிவு; Trace சுவடு; Relation சுற்றம்; Wealth செல்வம்.
மருங்குல்: Waist இடை; Stomach வயிறு; Body உடம்பு.
மருட்டு-தல்: To cause to be changed மாறுபடச் செய்தல்; To coax மனங் கவியச் செய்தல்; To make one forget மறக்கச் செய்தல்.
மருத்து-மாருதம்: Wind காற்று.
மருத்துவம்: Practice of medicine வைத்தியம்; Medicine மருந்து; Kind of yāḻ யாழ் வகை.
மருதம்: Kind of tree மருது; Agricultural tract வயலிடம்; Major theme of akaporul அகத்திணை வகை; A melody பண் வகை.

மருந்து: Remedy பரிகாரம்; Nectar அமிர்தம்; Nourishment உணவு; Sweetness இனிமை.
மருநிலம்-மருபூமி: Wilderness பாலை நிலம்.
மருப்பு: Horn விலங்கின் கொம்பு; Tusk யானைக்கொம்பு; Part of yāḻ யாழின் உறுப்பு.
மருமம்: Vitals உயிர்நிலை; Breast மார்பு.
மருவு-தல்: To be united கலந்திருத்தல்; To appear தோன்றுதல்; To embrace தழுவுதல்; To become accustomed பழகுதல்.
மருள்: Bewilderment மயக்கம்; Wonder வியப்பு; A secondary melody பண் வகை; Born idiot பிறவிப் பேதை. -தல் (மருளுதல்): To be afraid அஞ்சுதல்; To be similar ஒப்பாதல்.
மரை: Sambur மான் வகை; Bison காட்டெருமை; Lotus தாமரை.
மல்: Fertility வளம்; Wrestling மல்லாடல்.
மல்கு-தல்: To increase மிகுதல்; To flourish செழித்தல்.
மல்லம்: Bedroom படுக்கை யறை.
மல்லல்: Strength வலிமை; Wealth செல்வம்; Fertility வளம்; Beauty அழகு.
மலக்கம்: Bewilderment மனக்கலக்கம்; Distress துன்பம்; Contrast மாறுபாடு.
மலங்கு: True eel விலாங்கு மீன்.-தல்: To be agitated கலங்குதல்; To move பிறழ்தல்; To perish அழிதல்; To be full ததும்புதல்; To incline and fall சாய்ந்து விழுதல்.
மலம்: Dirt மாசு.
மலயம்: Potiya hill பொதிய மலை.
மலர்: A great number ஒரு பேரெண்; Head of weapon ஆயுத மேற் குமிழ்.
மலர்ப்பு: Exposing வெளிக்காட்டுகை.
மலி-தல்: To abound மிகுதல்; To be crowded நெருங்குதல்; To be happy during coition புணர்ச்சியில் மகிழ்தல்: To be proud செருக்குதல்; To swell விம்முதல்; To spread பரவுதல்; To hasten விரைதல்; To express சொல்லுதல்.
மலிர்-தல்: To flood பெருகுதல்; To leak ஒழுகுதல்; To contact frequently பன்முறை பழகுதல்.
மலிவு: Nature தன்மை.
மலினம்: Dirt அழுக்கு.
மலை-தல்: To wear அணிதல்; To take upon மேற்கொள்ளுதல்; To resemble ஒத்தல்; To pluck பறித்தல்; To fight போரிடுதல்; To be confused மயங்குதல்.-த்தல்: To afflict வருத்துதல்.
மலைப்பு: Enmity பகை.
மலையடி: Cock சேவல் கோழி.
மவ்வம்: Beauty அழகு.
மவ்வல்-மௌவல்: Wild Jasmine காட்டு மல்லிகை; Lotus தாமரை.
மவுணன்: Husband கணவன்.
மவுலி-மௌலி: Crown முடி; Matted locks of hair சடை; Head தலை.
மழ: Youth இளமை: Infant குழந்தை.
மழலை: Sweetness இனிமை; Childhood இளமை.
மழவன்: Warrior வீரன்.
மழறு-தல்: To be soft மென்மையாதல்; To be indistinct தெளிவில்லாதிருத்தல்.
மழி-த்தல்: To shave head மொட்டையடித்தல்.
மழு: Axe கோடாலி; Red-hot iron எரி இரும்பு.
மழுகு-தல்: To become blunt மழுங்குதல்.
மள்கு-தல்: To decrease குறைதல்.
மள்ளன்: Warrior படைவீரன்; Youth இளைஞன்; Cultivator உழவன்.
மற்குணம்: Bug மூட்டுப்பூச்சி.
மறம்: Valour வீரம்; Anger சினம்; Enmity பகை; Strength வலிமை; Victory வெற்றி; Murder கொலை; Sin பாவம்.
மறலி: Yama எமன்.
மறலு-தல்: To oppose மாறுபடுதல்; To kill கொல்லுதல்.
மறலை: Person of mean understanding புல்லறிவாளன்.
மறவன்: Inhabitant of arid tract பாலைநிலத்தான்; Warrior வீரன்; Wicked person கொடியோன்.
மறவி: Forgetfulness மறதி; Honey தேன்.
மறி: Young of certain animals சில விலங்குகளின் இளமை; Female of certain animals சில விலங்குகளின் பெட்டை; Deer மான்; Sheep ஆடு.-தல்: To be turned upside down கீழ்மேலாதல்; To return மீளுதல்; To retreat முதுகிடுதல்; To fall விழுதல்; To bend சாய்தல்; To rise up மேலெழுதல்; To be twisted முறுக்குண்ணுதல்; To wander அலைதல்;

To be ruined நிலைகுலைதல்; To be torn அறுபடுதல்.-த்தல்: To check தடுத்தல்.

மறு: Blemish குற்றம்.-த்தல்: To check தடுத்தல்; To reject நீக்குதல்; To cease to be இல்லாமற் போதல்.

மறுகால்: Second crop இரண்டாம் போகம்.

மறுகு: Street தெரு.-தல்; To whirl சுழலுதல்; To be shattered சிதைதல்; To carry கொண்டு போதல்; To be distressed வருந்துதல்.

மறுதலை: Opposite side எதிர்க் கட்சி; Enemy பகைவன்; Contradiction மாறுபாடு.

மறுநோய்: Relapsed disease மறுக் களித்த நோய்.

மறுமை: Next birth மறு பிறவி; Next world மறு உலகம்.

மறை: Secret இரகசியம்; Consultation in council மந்திராலோசனை; The Vēdas வேதம்; Prison சிறை; Fraud வஞ்சனை; Negative எதிர்மறை; Relinquishment விடுகை; Spot புள்ளி.

மன்-மன்னவன்: King அரசன்; Lord தலைவன்.

மன்பது-மன்பதை: Humanity மக்கள் தொகுதி.

மன்ற: Clearly தெளிவாக; Certainly நிச்சயமாக; Abundantly மிக.

மன்று: Hall சபை; Court நியாய சபை; Village meeting place under tree கிராமப் பொதுமக்கள் கூடுமிடம்; Open place for riding horses செண்டு வெளி; Central spot in battle field போர்க்கள நடுவிடம்; House வீடு; Cow shed தொழு. -தல்: To punish தண்டித்தல்.

மன்றல்: Scent வாசனை; Marriage கலியாணம்; Copulation புணர்ச்சி; Long street நெடுந் தெரு.

மன்றில்: Courtyard வாயில் முற்றம்.

மன்னு-தல்: To be permanent நிலைபெறுதல்; To stay தங்குதல்; To agree பொருந்துதல்; To abound மிகுதல்.

மனவு: Gem மணி; Bead அக்கு மணி; Girdle அரைப் பட்டிகை.

மனனம்: Contemplation தியானம்.

மனலம்: Saffron குங்குமம்; Vermilion சாதிலிங்கம்.

மனு: Mantra மந்திரம்; Man மனிதன்.

மனை: Wife மனைவி; House வீடு; Mother நற்றாய்.

## மா

மா: Animal விலங்கு; Horse குதிரை; Male of certain animals சில விலங்குகளின் ஆண்; Bee வண்டு; Swan அன்னம்; Man in animal shape விலங்கு வடிவான மானிடம்; Lakṣmi இலக்குமி; Carat மாற்று; A measure of weight ஒரு நிறை; A land measure நில அளவை வகை; Land நிலம்; Greatness பெருமை; Blackness கருமை; Colour நிறம்; Paleness caused by love-sickness மாமை நிறம்; Authority பிரமாணம்.

மாக்கள்: Men மனிதர்; Persons wanting in discrimination பகுத்தறிவிலார்; Children குழந்தைகள்.

மாகம்: Upper space மேலிடம்; Sky ஆகாயம்; Direction திக்கு; Cloud மேகம்.

மாகு: Net வலை; Sinker attached to net வலையிற் கோத்த மணி.

மாங்கிசம்: Flesh மாமிசம்.

மாச்சரியம்: Envy பொறாமை; Malice பகைமை.

மாசனம்: Royal counsellors including ministers and priests மந்திரி, புரோகிதர் முதலிய அரசியற் குழுவினர்.

மாசி: Cloud மேகம்.

மாசு: Spot மறு; Stain அழுக்கு; Fault குற்றம்.

மாசுணம்: Snake பாம்பு.

மாசை-மாடை: Gold பொன்; A coin நாணய வகை.

மாஞ்சி: A herb செடி வகை.

மாட்சி: Glory பெருமை; Clearness விளக்கம்; Beauty அழகு; Nature இயல்பு.

மாட்டறி-தல்: To sign as witness சாட்சிக் கையெழுத் திடுதல்.

மாட்டு-தல்: To bring into play செலுத்துதல்; To grasp பற்றுதல்; To set fire தீயிடுதல்; To be able கூடியதாதல்; To destroy அழித்தல்.

மாட்டேறி-தல்: To ascribe ஏறிட்டுக் கூறுதல்.

மாடகம்: Screw pin of yāḻ யாழின் முறுக்காணி.

மாடம்: Storeyed house மாடி வீடு; House வீடு; Temple கோயில்.

மாடியம்: Armour கவசம்.

மாடு: Place இடம்; Side பக்கம்; Wealth செல்வம்.

மாண்: Glory பெருமை; Times தடவை. -தல் (மாணுதல்): To be full நிறைதல்.

மாணர்: Enemies பகைவர்.

மாணி - மாண்: Bachelor பிரமசாரி; Dwarf குறள் வடிவம்; Beauty அழகு; Disciple மாணவன்.
மாணை: A creeper கொடி வகை.
மாத்திரம்: Limit அளவு.
மாத்திரை: Moment நொடி; Measure அளவு; Minute space சுருங்கிய இடம்; An ear ornament காதணி வகை.
மாத்திரைக்கோல்: Magic staff மந்திரக் கோல்.
மாத்து: Arrogance செருக்கு; Greatness பெருமை.
மாதங்கம்: Elephant யானை.
மாதங்கி: Goddess of yāḻ யாழ்த் தெய்வம்; Singing danseuse பாடி ஆடுபவள்.
மாதர் - மாது: Woman பெண்; Beauty அழகு; Love காதல்.
மாதவி: A creeper குருக்கத்திக் கொடி.
மாதி: Mango tree மாமரம்.
மாதிமை: Fitness தகுதி; Love காதல்.
மாதிரம்: Direction திக்கு; Mountain மலை; Atmosphere ஆகாயம்.
மாது: Greatness பெருமை.
மாதுமை: Ignorance அறிவின்மை.
மாதுலன்: Mother's brother தாய் மாமன்; Father-in-law மாமனார்.
மாந்தர்: Human beings மக்கள்.
மாந்தன்: Male ஆண்மகன்.
மாந்து-தல்: To take in உட்கொள்ளுதல்; To enjoy அநுபவித்தல்; To be distressed வருந்துதல்; To die சாதல்.
மாமடி: Father-in-law மாமனார்.
மாமலர்: Kind of flower சரக் கொன்றை.
மாமை: Beauty அழகு; Blackness கருமை; Colour நிறம்.
மாய்-தல்: To hide மறைதல்; To perish அழிதல்; To get dim ஒளி மழுங்குதல்; To forget மறத்தல்.-த்தல்: To sharpen தீட்டுதல்.
மாயம்: Illusion மாயை; Deception வஞ்சனை; Falsehood பொய்; Dream கனவு; Wonder ஆச்சரியம்; Lasciviousness தூர்த்தத் தன்மை; Blackness கறுப்பு.
மாயை: Primordial matter மூலப்பிரகிருதி.
மாயோள்: Woman பெண்.
மார்க்கம்: Pace of horse குதிரைக் கதி.
மார்ச்சனை: Drum paste மத்தளச் சாந்து.
மார்பு: Rim விளிம்பு; Kind of camphor கர்ப்பூர வகை.
மாரன்: Cupid மன்மதன்.
மாராயம்: Royal distinction வேந்தன் வழங்கும் சிறப்பு; Happiness மகிழ்ச்சி.
மாரோடம்: Kind of tree செங்கருங்காலி.
மால்: Illusion மயக்கம்; Desire ஆசை; Love காமம்; Blackness கருமை; Greatness பெருமை; Cloud மேகம்; Viṣṇu திருமால்.
மால்பு: Bamboo ladder கண்ணேணி.
மாலை: Darkness இருள்; Opportunity சமயம்; Fault குற்றம்; Nature இயல்பு; Row வரிசை; Bond பாசம்; Danseuse விறலி; Woman பெண்.
மாவடு: Tender mango மாவடு.
மாழ்கு: Curl சுருள்.-தல்: To be bewildered மயங்குதல்; To be spoiled கெடுதல்.
மாழை: Youth இளமை; Beauty அழகு; Innocence பேதைமை; Mango tree மாமரம்; Lump of metal உலோகக் கட்டி; Gold பொன்.
மாள்-தல் (மாளுதல்): To die சாதல்.
மாளிகை: Palace அரண்மனை.
மாற்றம்: Word வார்த்தை; Answer விடை; Word of challenge வஞ்சினம்; Diversity மாறுபட்ட நிலை; Enmity பகை; Debate வாதம்.
மாற்றவள்-மாற்றட்டி-மாற்றாள்: Co-wife சக்களத்தி.
மாற்று: Strength வலிமை.-தல்: To hinder தடுத்தல்.
மாறடு-தல்: To change மாறுதல்; To stumble தடுமாறுதல்.
மாறி: Gold carat பொன்மாற்று.
மாறு: Enmity பகை; Similarity ஒப்பு; Death சாவு; Birth பிறவி; Recompense பிரதி உபகாரம்; Reply பதில்; Rattan பிரம்பு; Manner விதம்.-தல்: To retreat பின்வாங்குதல்; To sell விற்றல்; To do செய்தல்; To remove கழித்தல்; To multiply பெருக்கல்.
மாறுகால்: A dance pose அபிநய வகை.
மான்: Horse குதிரை; Lion சிங்கம்; Human being மானுடன்; Personage பெரியோன்.-தல் (மானுதல்): To resemble ஒத்தல்.
மான்மதம்-மிருகமதம்: Musk கஸ்தூரி.
மானதம்: Imagination பாவனை.
மானதன்: King அரசன்.
மானம்: Sulks புலவி; Touch-needle மாற்றாணி; Comparison ஒப்புமை; Test பிரமாணம்; Love அன்பு; Disgrace அவ

மானம்; Fault குற்றம்; Aerial chariot விமானம்; Measure அளவு.
மானமா: Yak கவரிமான்.
மானவன்: Man மனிதன்.

## மி

மிகல்: Greatness பெருமை; Victory வெற்றி.
மிகை: Excess மிகுதி; Greatness பெருமை; Arrogance கர்வம்; Evil deed தீச்செயல்; Fault தவறு; Punishment தண்டனை.
மிச்சில்: Remainder எஞ்சியது.
மிசை: Food உணவு; Elevation மேடு; Front முன்னிடம்.
மிஞிறு: Bee தேனீ.
மிடல்: Strength வலிமை.
மிடறு: Neck கழுத்து; Throat தொண்டை.
மிடி: Poverty வறுமை; Affliction துன்பம்.
மிடுக்கு: Strength வலிமை.
மிடை: Post of observation பரண். -தல்: To be close நெருங்குதல்; To be full நிறைதல்; To mix கலத்தல்.
மிண்டு: Strength வலிமை; Bravery தைரியம்; Vulgar talk இடக்கர்ப் பேச்சு; Presumptuous speech கர்வப் பேச்சு.-தல்: To throng நெருங்குதல்; To be hard வலியதாதல்; To be vain மதங்கொள்ளுதல்; To join battle போரிற் கலத்தல்; To uproot வேரோடு பறித்தல்.
மிண்டை: Pupil of eye கருவிழி.
மித்திரன்: Friend நண்பன்.
மித்தை: Falsehood பொய்.
மிதப்பு-மிதவை: Raft தெப்பம்.
மிதவை: Gruel கூழ்; A preparation of dhal கும்மாயம்.
மிதி: Ball of food சோற்றுருண்டை; Gait நடை.-த்தல்: To rush பாய்தல்.
மிதிதோல்: Bellows துருத்தி.
மிதுனம்: Gemini இரட்டை.
மிலே-தல்: To wear சூடுதல்.-த்தல்: To be confused மயங்குதல்; To low, as cow கத்துதல்.
மிழற்று-தல்: To prattle, as child மழலை பேசுதல்.
மிளிர்-தல்: To roll, as eyes புரளுதல்; To be upset கீழ்மேலாதல்; To leap குதித்தல்; To shine பிரகாசித்தல்.
மிளிர்வை: Pieces in sauce குழம்பிலுள்ள கறித்துண்டு.
மிளை: Forest serving as defence காவற் காடு; Bush தூறு; Fenced enclosure வேலியிட்ட இடம்: Watch காவல்.
மிறை: Trouble வருத்தம்; Bend வளைவு. -த்தல்: To become stiff விறைத்தல்.
மின்: Glitter ஒளி; Lightning மின்னல்.
மினுங்கு-தல்: To shine ஒளிவீசுதல்.

## மீ

மீ: Top மேலிடம்; Sky ஆகாயம்; Greatness மேன்மை.
மீக்கொள்-தல் (மீக்கொள்ளுதல்): To increase மிகுதல்; To esteem மதித்தல்; To wear தரித்தல்.
மீகாமன்-மீகான்: Captain of ship மாலுமி.
மீகாரம்: Upper storey of mansion மாளிகையின் மேலிடம்.
மீசு-மீது: On மேல்.
மீசை: Upper part மேலிடம்.
மீட்சி: Recompense கைம்மாறு.
மீதாடு-தல்: To go beyond கடந்துபோதல்.
மீதூர்-தல்: To come continuously மேல் மேல் வருதல்; To press hard அடர்தல்.
மீப்பு: Abundance மிகுதி; Excellence மேன்மை.
மீளி: Lord தலைவன்; Valour வீரம்; Distinction தலைமை; Yama எமன்; Devil பேய்; Youth இளைஞன்.
மீனேறு: Shark சுறாமீன்.

## மு

முக்கால்: Kind of metre சந்த வகை.
முக்கு-மொக்கு-தல்: To immerse மூழ்குவித்தல்; To glut மிகுதியாக உண்ணுதல்.
முக்குளி-த்தல்: To dive முழுகுதல்.
முக-த்தல்: To draw, as water மொள்ளுதல்; To obtain in full நிரம்பப் பெறுதல்; To desire விரும்புதல்.
முகங்கொள்-தல் (முகங்கொள்ளுதல்): To consent சம்மதித்தல்.
முகச்சார்த்து: Kind of song இசைப்பாட்டு வகை.
முகசந்தி: A juncture of drama நாடகச் சந்தி வகை.
முகஞ்செய்-தல்: To face நோக்குதல்; To appear தோன்றுதல்; To be first முதலாதல்.

முகடி: Goddess of misfortune மூதேவி.
முகடு: Top உச்சி; Superiority உயர்வு; Entrance வாயில்; Platform திண்ணை; Head தலை; Hump திமில்; Region of chaos பாழ்; Salvation மோட்சம்.
முகநிலை: Kind of song இசைப் பாட்டு வகை.
முகநிலைப் பசாசம்: A dance gesture அபிநய வகை.
முகப்பு: Front முன்னிலை.
முகம்: Mouth வாய்; Place இடம்; Point நுனி; Form வடிவு; Look நோக்கு; Meditation தியானம்; Flattery முகத்துதி; Front முன்பு; A juncture of drama நாடகச் சந்தி வகை; Opening dance ஆரம்பக் கூத்து; Nature இயல்பு; Appearance தோற்றம்; Maturity பக்குவம்; Yāga யாகம்.
முகம்பார்-த்தல்: To treat with regard நன்கு மதித்தல்.
முகம்புகு-தல்: To wear cheerful countenance முக மலர்தல்; To approach for favour தயவை நாடல்.
முகம்பெறு-தல்: To appear தோன்றுதல்.
முகமன்: Civility உபசாரம்; Praise துதி.
முகமா-தல்: To agree உடன்படுதல்.
முகமில்வரி: Kind of song இசைப் பாட்டு வகை.
முகமுடைவரி: Kind of song இசைப் பாட்டு வகை.
முகரம்: Noise ஒலி; Conch சங்கு.
முகவட்டு: Forehead ornament of animals விலங்கின் நெற்றி அணி வகை.
முகவாசம்: Spices வாசனைப் பண்டங்கள்; Betel வெற்றிலை.
முகவியர்: Those who look pleased இன்முகமா யுள்ளோார்.
முகவீணை: Kind of musical intrument இசைக் கருவி வகை.
முகவை: Generous bounty மிகுதியாகக் கொடுக்கும் பொருள்; Bucket நீர் மொள்ளும் பாண்டம்; Heap of paddy நெற்குவியல்.
முகவைப்பாட்டு: Threshing song நெற்களத்தில் பாடும் பாட்டு.
முகவோலை: Royal writ அரசர் திருமுகம்.
முகாந்தரம்: Another matter வேறு விஷயம்.
முகி-தல்: To end முடிதல்.
முகில்: Cloud மேகம்.
முகிழ்: Bud மொட்டு; Bubble மொக்குள்; Mass, as of curds தயிர் முதலியவற்றின் கட்டி.-த்தல்: To appear தோன்றுதல்; To fold as flower குவிதல்.
முகிழ்காங்கூலம்: A dance gesture அபிநய வகை.
முகிழ்த்தம்-முகூர்த்தம்-முதூர்த்தம்- முகூர்த்தம்: Auspicious time சுப வேளை.
முகூட்டை: Bug மூட்டைப் பூச்சி.
முகுடம்: Crown கிரீடம்.
முகுரம்: Mirror கண்ணாடி.
முகுளம்: Bud மொட்டு; A dance gesture அபிநய வகை.
முகை: Bud மொட்டு; Cave குகை.
முங்கு-தல்: To sink அமிழ்தல்.
முச்சி: Crown of head தலையுச்சி.
முச்சு-தல்: To cover மூடுதல்.
முசலகன்-முயலகன்: A disease நோய் வகை.
முசலம்: Wooden pestle உலக்கை.
முசி-தல்: To be torn கிழிதல்; To be crumpled கசங்குதல்; To feel discouraged ஊக்கங் குறைதல். -த்தல்: To be distressed துன்புறுதல்; To grow thin மெலிதல்; To perish அழிதல்; To twist திருகுதல்.
முசு: Monkey குரங்கு.
முசுட்டை-முசுண்டை: Kind of creeper கொடி வகை.
முசுண்டர்: Mean people கீழ்மக்கள்.
முசுண்டி: Kind of weapon ஆயுத வகை.
முஞ்சம்: Children's head ornament குழந்தைகள் தலையணி வகை.
முஞ்சி: Kind of reed நாணல் வகை.
முஞ்சு-தல்: To die சாதல்.
முஞ்ஞை-முன்னை: Kind of tree மர வகை.
முட்டம்: Side பக்கம்.
முட்டாக்கு: Mantle போர்வை.
முட்டி: Blow with fist கைக்குத்து; A dance gesture அபிநய வகை; Alms பிச்சை; A mode of holding weapon ஆயுதம் பிடிக்கும் வகை.
முட்டிகை: Small hammer சிறு சுத்தி.
முட்டு: Hindrance தடை; Deficiency குறைவு; Pollution தீட்டு; Tool கருவி. -தல்: To meet எதிர்ப்படுதல்; To grip பிடித்தல்; To seek தேடுதல்; To be full நிறைதல்; To end முடிதல்; To fight போர்செய்தல்; To fail தவறுதல்.
முட்டுக்கோல்: Clamps கிட்டி.
முட்டை: Small spoon சிறு கரண்டி.
முடக்கம்: Obstacle தடை; Bend வளைவு.

முடக்கறை: Bowman's shelter on fort wall மறைந்து அம்பெய்தற் குரிய மதில் உறுப்பு.
முடக்கு: Tongue நாக்கு; Kind of ring மோதிர வகை.-தல்: To bend மடக்குதல்; To wrap சுற்றிக்கொள்ளுதல்.
முடங்கர்: Exhaustion after delivery பிரசவச் சோர்வு.
முடங்கல்: Letter கடிதம்; Smallness சிறுமை.
முடங்கிறை: Valley of roof கூடல்வாய்.
முடங்கு-தல்: To contract சுருங்குதல்; To become maimed கைகால் முடமாதல்; To abide தங்குதல்; To be down படுத்துக் கொள்ளுதல்.
முடங்குளை: Lion சிங்கம்.
முடந்தை: That which is bent வளைந்தது.
முடம்: Defects in singing and dancing ஆடல் பாடல்களிற் குற்றம்.
முடலை: Hardness of heart மனக்கடுமை.
முடி: Head தலை; Top உச்சி; Crown கிரீடம்; Noose பறவை பிடிக்கும் கண்ணி.
முடிவு: Kind of note in music சுர வகை.
முடுக்கர்: Difficult path கஷ்டமான வழி; Place where water presses against bank நீர்க் குத்தான இடம்; Interspace இடை வெளி.
முடுக்கு: Lane சந்து.-தல்: To drive in உட் செலுத்துதல்.
முடுகு-தல்: To hasten விரைதல்.
முடுவல்: Dog நாய்.
முடை: Flesh மாமிசம்; Stench துர் நாற்றம்.
முண்டகம்: Thorn முள்; Fragrant screw-pine தாழை; Lotus தாமரை; Water-thorn நீர்முள்ளி; Forehead நெற்றி.
முண்டம்: Head தலை; Forehead நெற்றி; Clean shaven head மொட்டைத் தலை; Skull கபாலம்; Caste mark புண்டரம்.
முண்டிதம்: Kind of dance கூத்து வகை.
முண்டை: Egg முட்டை.
முணக்கு-தல்: To bend வளைதல்.
முணங்கு: Stretching of limbs சோம்பல் முறிப்பு.
முணவு-தல்: To dislike வெறுத்தல்.
முணை: Abundance மிகுதி.
முத்தக்காசு: Kind of tuber கோரைக் கிழங்கு.
முத்தம்: Salvation மோட்சம்.
முத்தரை: Pearl girdle முத்து அரை வடம்.
முத்தவள்ளி: Garland of pearls முத்து மாலை வகை.
முத்தியெறிதல்: To remove கழித்தல்.
முத்திரை: Hand pose in worship பூசையின்போது காட்டும் கை அபிநயம்; A dance gesture அபிநய வகை; Hole in flute or pipe which is not fingered while playing குழல், நாகசுரம் இவற்றில் பயன்படாத துளை.
முத்து: Beauty அழகு.-தல்: To join சேர்தல்.
முத்தை: Front முன்னிடம்.
முதம்: Pleasure உவகை.
முதல்: Kind of song இசைப்பாட்டு வகை; Cause காரணம்.-தல் (முதலுதல்): To begin தொடங்குதல்.
முதலி: Chief தலைவன்; Saint சான்றோன்.
முதற்கைகொடு-த்தல்: To show love அன்புகாட்டுதல்.
முதாரி: That which is ripe முற்றியது; Bracelet வளையல்.
முதிர்-தல்: To mature பக்குவமாதல்; To cease ஒழிதல்.
முதிரை: Pulse அவரை துவரை முதலாயின.
முதுக்குறைவு: Great wisdom பேரறிவு.
முதுகண்: Chief support முக்கிய ஆதாரம்.
முது காடு: Cremation ground சுடுகாடு.
முதுது: Middle place நடுவிடம்; Mount மேடு.
முதுநீர்-முன்னீர்: Sea கடல்.
முதுமரம்: Banyan tree ஆலமரம்.
முதுமை: Old age கிழத்தனம்;
முதுமொழி: Words of wisdom அறிவுரை.
முதை: Old field பழைய வயல்.
முதையல்: Wild jungle பழங்காடு.
முந்தி: Outer end of saree முன்தானை.
முந்திரி: A fraction பின்ன வகை.
முந்திரிகை: Grape vine திராட்சை.
முந்து: Beginning ஆதி.-தல்: To rise up மேலெழுதல்; To go fast விரைதல்; To meet எதிர்ப்படுதல்.
முந்தூழ்: Bamboo மூங்கில்.
முந்தை: Former time முற்காலம்; Ancestor முன்னோன்; In front of முன்.
முந்நூல்-முப்புரி நூல்: Sacred thread பூணூல்.

மும்மணி-மும்மணிக் காசு: An ornament ஆபரண வகை.

மும்மை: Three மூன்று.

முயக்கம்: Cohabitation புணர்ச்சி.

முயற்கூடு: Moon சந்திரன்.

முயற்றி-முயற்று: Effort முயற்சி.

முரசு: Drum பறை.

முரஞ்சு-தல்: To mature முதிர்தல்.

முரண்: Opposition மாறுபாடு; Hatred பகைமை; Greatness பெருமை.

முரம்பு: Mound of gravel பருக்கைக் கல் மேடு; Hard ground வலிய நிலம்.

முரரை: Hard stout trunk of tree மரத்தின் முருட்டரை.

முரல்-தல் (முரலுதல்): To sound ஒலித்தல்; To sing பாடுதல்.

முரவம்-முரவு: A drum பறை வகை.

முரவு: Break முரிவு.

முரவை: Streaks on unpolished rice அரிசியிலுள்ள வரி.

முரள்: A shell-fish இப்பி வகை.

முரற்கை. A time measure தாள வகை.

முரற்சி: Cord கயிறு.

முரி: Fraction முழுதிற் குறைவானது; Blemish சிதைவு; Curve வளைவு; Closing section of song பாட்டின் இறுதி; Close of poem in Nāṭakattamiḻ நாடகத் தமிழில் ஒரு பாட்டின் இறுதி.-தல்: To perish கெடுதல்; To be scattered சிதறுதல்; To go wrong தவறுதல்; To be defeated தோல்வியுறுதல்; To separate நீங்குதல்; To lack in strength தளர்தல்.

முரிவரி: Kind of song இசைப்பாட்டு வகை.

முரி வாய்: Opening in wall used as entrance இடித்து உண்டாக்கின வாயில்.

முருக்கு: Kind of tree மரவகை.-தல்: To destroy அழித்தல்; To break in pieces முறித்தல்.

முருகியம்: Kind of drum பறை வகை.

முருகு: Youth இளமை; Skanda முருகன்; Fragrance மணம்; God தெய்வம்; Dance while possessed by Skanda வெறியாட்டு; Sacrificial feast வேள்வி; Festival திருவிழா; Honey தேன்; An ear ornament காதணி வகை.-தல்: To mature முதிர்தல்.

முருங்கு-தல்: To perish அழிதல்; To break முறிதல்; To simmer அடங்கி எரிதல்.

முருடன்: Fool மூடன்.

முருடு: Cruelty கொடுமை; Knot in wood மரக் கணு; Piece of wood மரக் கட்டை; Hand-drum மத்தள வகை; Largeness பருமை.

முருந்தன்: Able person சமர்த்தன்.

முருந்து: Root of peacock's feather மயில் இறகின் அடிக் குருத்து; Plant stalk just above root வேரை அடுத்துள்ள தண்டு; Bone எலும்பு.

முல்லை: Pastoral tract முல்லை நிலம்; A major theme of akaporuḷ அகத்திணை வகை; Chastity கற்பு; Chief characteristic சிறப்பியல்பு; Victory வெற்றி; Kind of flute குழல் வகை.

முழவு: Drum முரசு; Milking can பால் கறக்கும் பாத்திரம்.

முழால்: Embracing தழுவுகை.

முழுகு-தல்: To enter உட்புகுதல்; To kiss முத்தமிடுதல்; To strike against முட்டுதல்.

முழுத்தல்: To develop fully முதிர்ச்சி பெறுதல்.

முழுத்தம்: Auspicious time நல்ல நேரம்.

முழுதோன்: God கடவுள்.

முழு நெறி: Flower with calyx புறவிதழ் ஒடிக்கப்படாத முழுப் பூ.

முழுமகன்: Fool மூடன்.

முழு மணி: Flawless gem குற்றமற்ற இரத்தினம்.

முழுமுதல்: God கடவுள்; Trunk of tree மரத்தின் அடி.

முழுமை: Largeness பருமை.

முழை: Cave குகை.-த்தல்: To bore துளைத்தல்.

முழைஞ்சு: Cave குகை; Hole துளை.

முள்: Bit கடிவாளம்; Quill இறகின் அடி; Sharpness கூர்மை.

முள்கா-த்தல்: To sit குந்தியிருத்தல்.

முள்கு-தல்: To embrace முயங்குதல்; To enter உட்செல்லுதல்.

முள்ளி: Indian night shade கத்தரி வகை; Fragrant screw-pine தாழை.

முளரி: Lotus தாமரை; Thorny twig முள்ளுச் சுள்ளி; Firewood விறகு; Fire நெருப்பு.

முளவு: Porcupine முள்ளம்பன்றி; Goad தாற்றுக்கோல்.

முளி-தல்: To dry உலர்தல்; To burn எரிதல்; To perish கெடுதல்; To mature முற்றுதல்; To curdle தோய்தல்.

முளை: Tenderness இளமை; Club தண்டாயுதம்; Sharp end முனை; Bamboo மூங்கில்.

முற்கம்: Green gram சிறு பயறு.
முற்கரம்: Kind of weapon ஆயுத வகை.
முற்த: Inarticulate sound எழுத்தாகாத ஒலி.
முற்பக்கம்: Bright fortnight வளர் பிறை.
முற்பூண்: Marriage badge தாலி.
முற்றம்: Esplanade ஊரின் வெளியிடம்; Expanse பரப்பு.
முற்றல்: Strength வலிமை.
முற்றவை: Assembly of wise men அறிவாளர் சபை; Grand-mother பாட்டி.
முற்றிமை: Mature wisdom முதிர்ந்த ஞானம்.
முற்றில்: Small winnow சிறு முறம்; Kind of shell-fish இப்பி வகை.
முற்று: Perfection நிறைவு; Ripeness முதிர்ச்சி; Siege முற்றுகை.-தல்: To abound பெருகுதல்; To abide தங்குதல்; To terminate முடிதல்; To be similar போலுதல்; To kill கொல்லுதல்.
முற்றூட்டு: Endowed tax-free land சர்வ மானியம்.
முறி: Deed பத்திரம்; Piece துண்டு; Sprout தளிர்.-தல்: To perish அழிதல். -த்தல்: To change nature தன்மை மாற்றுதல்.
முறிப்பு: Pride கர்வம்; Antidote மாற்று மருந்து.
முறுக்கு: Compactness கட்டு.-தல்: To break ஒடித்தல்; To spin சுழற்றுதல்.
முறுகு: Firmness திண்மை.-தல்: To twist திருகுதல்; To hasten விரைதல்; To mature முதிர்தல்; To increase மிகுதல்; To become severe கடுமையாதல்; To be haughty செருக்குதல்.
முறுவல்: Tooth பல்; Smile புன்னகை; Happiness மகிழ்ச்சி.
முறை: Order ஒழுங்கு; Birth பிறப்பு; Manners ஒழுக்கம்; Relationship உறவு; Justice அரச நீதி; Fate ஊழ்; Treatise நூல்; Nature தன்மை; Complaint முறையீடு.
முறைசெய்-தல்: To punish தண்டித்தல்.
முறைமை: Right உரிமை.
முறைவன்: Driver பாகன்.
முன்பு: Strength வலிமை.
முன்றில்: Courtyard வீட்டின் முன்னிடம்; Space வெளியிடம்.
முன்றுறை: Harbour துறைமுகம்.
முன்னவை: Elder child or calf முன் பிறந்த குழந்தை அல்லது கன்று.
முன்னம்: Intention கருத்து; Sign குறிப்பு.
முன்னவன்: God கடவுள்; Elder brother அண்ணன்.
முன்னு-தல்: To intend கருதுதல்; To meet எதிர்ப்படுதல்; To approach நெருங்குதல்; To join பொருந்துதல்; To follow பின்பற்றுதல்; To rise, as waves கிளர்தல்; To spread படர்தல்; To precede முற்படுதல்; To happen சம்பவித்தல்.
முன்னை: Elder sister தமக்கை.
முனகு: Fault குற்றம்.
முனி: Bow வில்; Young elephant யானைக்கன்று; Saint தவசி.-தல்: To dislike வெறுத்தல்; To be angry கோபித்தல்; To suffer வருந்துதல்.
முனித்துறை: Rites சடங்கு.
முனிவன்-முனைவன்: God கடவுள்; Saint தவசி.
முனை: Battle போர்: Enemy country பகைப் புலம்; Austerity தவம்; Crowd கூட்டம்; Front முன்; Face முகம்; Point நுனி.-தல்: To be active முற்படுதல்.

## மூ

மூ-த்தல்: To become old கிழமாதல்; To end முடிதல்; To be damaged கேடுறுதல்.
மூக்கன்: Kingfisher மீன் கொத்திப் பறவை.
மூக்கு: End of cart pole வண்டிப் பாரின் தலைப் பகுதி; Stem of leaf இலைக் காம்பு; Rude talk முரட்டுப் பேச்சு.
மூகன்-மூங்கன்-மூங்கை: Dumb man ஊமையன்.
மூகை: Vast horde படைக் கூட்டம்.
மூங்கா: Kind of mongoose கீரி வகை.
மூசு-தல்: To swarm மொய்த்தல்; To sniff மோப்பம் பிடித்தல்.
மூஞ்சி: Face முகம்.
மூட்சி: Rage கடுங் கோபம்.
மூடம்: Secret place மறைவிடம்; Confusion மயக்கம்.
மூடலை: Lack of sense அறிவுக் குறைவு.
மூடி: Foolish woman அறிவில்லாதவள்.
மூடு: Root வேர்; Ewe பெண்ணாடு; Bug மூட்டுப்பூச்சி.
மூடை: Pack பண்ட மூட்டை; Barn தானியக் குதிர்.
மூத்தம்: Auspicious time முகூர்த்தம்.
மூதண்டம்: Universe பிரமாண்டம்.
மூதில்: Ancient warrior tribe பழைய மறக் குடி.

மூது-மூப்பு: Oldness முதுமை.
மூதுவர் Ancients முன்னோர்.
மூய: Flower basket பூக்கூடை.-தல்: To cover மூடுதல்; To fill நிரப்புதல்.
மூர்க்கம்: Rage கடுங் கோபம்; Pride கர்வம்.
மூர்ச்சி-த்தல்: To sigh பெருமூச்சு விடுதல்.
மூர்த்தம்: Head தலை; Auspicious time முகூர்த்தம்.
மூர்த்தி: Body உடல்; Figure வடிவம்.
மூரல்: Tooth பல்; Smile புன்சிரிப்பு; Boiled rice சோறு.
மூரி: Strength வலிமை; Greatness பெருமை; That which is aged கிழடு; Buffalo எருமை; Bullock எருது; Bit துண்டு; Shaking off laziness சோம்பல் முரிப்பு.
மூலம்: Base அடி; Tuber கிழங்கு; Importance முதன்மை; Origin தொடக்கம்; Cause காரணம்.
மூவர்: Dēvas தேவர்.
மூவிலை: Trident சூலம்; Bael வில்வம்.
மூவினம்: Three kinds of cattle பசு, ஆடு, எருமையாகிய கால்நடை.
மூழ்-தல்: To seize பற்றிக்கொள்ளுதல்; To be mature முதிர்தல்.-த்தல்: To submerge மூழ்கச் செய்தல்; To close, as bud மூடுதல்; To swarm மொய்த்தல்; To surround வளைத்தல்.
மூழ்கு-தல்: To abide தங்குதல்.
மூழல்: Lid மூடி.
மூழி: Kind of vessel பாத்திர வகை.
மூழிவாய்: Flower basket பூக்கூடை.
மூழை: Ladle அகப்பை; Hollow place குழிந்த இடம்.

## மெ

மெச்சு-தல்: To wonder வியத்தல்.
மெட்டு-தல்: To tread காலால் மிதித்தல்.
மெத்து-தல்: To be filled நிரம்புதல்; To pad அப்புதல்.
மெத்தை: Hunter's accessory carried on shoulder வேடர் தோளிலிடும் சாதனம்.
மெய்: Body உடம்பு; Breast மார்பு.
மெய்க்காட்டு: Parade சேனையைப் பார்வையிடுகை.
மெய்க்குற்றம்: Permanent defect நிலை நின்ற குற்றம்.
மெய்த்தகை: Natural beauty இயற்கை அழகு; True chastity உண்மைக் கற்பு.
மெய்ந்நிலை: Salvation மோக்ஷம்.
மெய்ப்பாடு: Physical expressions of emotion உள்ள நிகழ்ச்சியின் உடற் குறி; Nature இயற்கைக் குணம்.
மெய்ப்பை: Coat சட்டை.
மெய்புகு கருவி - மெய்ம் மறை: Armour கவசம்.
மெய்ம்மை: Nature இயல்பு; Signification பொருண்மை.
மெய்வேறு: Separate தனித்தனி.
மெருள்: Fear அச்சம்.
மெல்கு-தல்: To become soft மிருதுவாதல்; To be light இலேசாதல்.
மெல்கோல்: Twig for cleaning teeth பல்லுக் குச்சி.
மெல்லம்புலம்பு: Maritime tract நெய்தல் நிலம்.
மெல்லியர்: Mean persons இழிந்தோர்.
மெல்லியல்: Woman பெண்.
மெல்லிலை: Betel வெற்றிலை.
மெலி-தல்: To suffer வருந்துதல்; To perish அழிதல்; To be lowered in pitch சுரத்திற் குழ்தல்.
மெலிவு: Defeat தோல்வி.
மென்கண்: Mercy இரக்கம்.
மென்செய்: Wet land நன்செய்.
மென்பறை: Young of bird பறவைக் குஞ்சு.
மென்பிணி: Nap சிறு துயில்.
மென்புலம்: Agricultural tract மருத நிலம்; Maritime tract நெய்தல் நிலம்.
மென்மை: Weakness வலியின்மை; Gentleness அமைதி.

## மே

மே: Excellence மேம்பாடு.
மேக்கு: High place மேலிடம்; Superiority மேன்மை.
மேகர்: Water sprinklers நீர் தெளிப்போர்.
மேகலை: Waist-cord அரைஞாண்; Woman's girdle மகளிர் இடை யணி; Decorative lines around ōmakundam ஓமகுண்டத்தைச் சுற்றியிடும் கோலம்.
மேட்டி: Arrogance அகந்தை; Excellence மேன்மை.
மேட்டிரம்: Membrum virile ஆண்குறி.
மேடம்: Sheep ஆடு.
மேடை: Storey மாடி.
மேதம்: Yāga யாகம்.
மேதி: Buffalo எருமை.
மேதினி: Earth பூமி.

மேதை: Wise person பேரறிவாளி; Fat கொழுப்பு.
மேல்: The great உயர்ந்தோர்; Knowledge வித்தை; Before முன்; Head தலை.
மேலாப்பு: Canopy விதானம்.
மேலீடு: Curry கறியமுது.
மேலெழுத்து: Attestation சாட்சிக் கையெத்து; Accountant general அரசியற் கணக்கதிகாரி.
மேவு: Desire விருப்பம்.-தல்: To reach அடைதல்; To study ஓதுதல்; To assume மேலிட்டுக்கொள்ளுதல்; To thatch வேய்தல்; To abide தங்குதல்; To be fitted பொருந்துதல்.
மேழகம்: Sheep ஆடு.
மேழி: Plough கலப்பை.
மேற்கோள்: Quotation எடுத்துக்காட்டு; Vow வஞ்சினம்.
மேற்செல் - தல் (மேற் செல்லுதல்): To hasten விரைதல்; To invade படையெடுத்தல்.
மேற்பாதி: Land holder's part of produce மேல்வாரம்.
மேற்றோன்றி: A flower plant செங்காந்தள்.
மேனாணிப்பு: Pride பெருமிதம்.
மேனி: Body உடம்பு; Colour நிறம்; Quality of crop பயிர்வளம்.
மேனும்பு: Offensive language அவமதிச் சொல்.

## மை

மை: Blackness கருநிறம்; Darkness இருள்; Fault குற்றம்; Birth பிறவி; Buffalo எருமை; Sheep, goat ஆடு.
மைந்தன்: Son மகன்; Young man இளைஞன்; Young of certain creatures சில பிராணிகளின் இளமை; Disciple மாணுக்கன்; Husband கணவன்.
மைந்து: Might வலிமை; Beauty அழகு; Desire விருப்பம்; Infatuation காம மயக்கம்; Must of elephant யானை மதம்; Ignorance அறியாமை.
மைப்போது-மைம்மலர்: Blue nelumbo கருங்குவளை.
மைம்மீன்: Saturn சனி.
மைம்மைப்பு: Defective sight பார்வைக் குறைவு.
மையல்: Infatuation காம மயக்கம்; Madness பித்து; Pride செருக்கு; Must of elephant யானை மதம்.
மைய நோக்கம்: Mournful look துக்கப் பார்வை.
மையா: Barren cow மலட்டுப் பசு.
மையா-த்தல்: To be perplexed மயங்குதல்; To become dim ஒளி மழுங்குதல்; To look wan பொலிவழிதல்.
மைவிடை: Ram ஆட்டுக் கிடாய்.
மைவிளக்கு: Oil lamp எண்ணெய் விளக்கு.

## மொ

மொக்கணி: Feed-bag குதிரைக்குக் கொள்ளுப் பை.
மொக்குள்: Flower bud மொட்டு: Bubble நீர்க் குமிழி.
மொக்கை: Ignominy அவமானம்.
மொச்சை: Foul smell துர்நாற்றம்.
மொசி-தல்: To swarm மொய்த்தல். -த்தல்: To eat தின்னுதல்.
மொசுப்பு: Pride கர்வம்.
மொஞ்சகம்: Whisk of peacock's feathers பீலிக் கற்றை.
மொஞ்சி: Breast milk முலைப்பால்.
மொண்ணன்: Bald headed person வழுக்கைத் தலையன்.
மொய்: Throng நெருக்கம்; Tightness இறுக்கம்; Greatness பெருமை; Strength வலிமை; Battle போர்: Enmity பகை; Beauty அழகு.
மொழி: Word சொல்; Language பாஷை; Joint கணு.
மொழிப்பொருள்: Portent நிமித்தச் சொல்; Mantra மந்திரம்.
மொழுப்பு: Knot முடிச்சு; Locality abounding in groves சோலைப் பிரதேசம்.

## மோ

மோ-த்தல்: To smell வாசனை அறிதல்.
மோக்கம்: Liberation விடுதலை.
மோகம்: Buttermilk மோர்.
மோகரம்: Uproar பேராரவாரம்.
மோகன மாலை: A garland மாலை வகை.
மோகனை: Art of fascinating மயக்கச் செய்யும் வித்தை.
மோங்கில்: Kind of whale திமிங்கில வகை.
மோசி-த்தல்: To give up விட்டொழிதல்.
மோசிமல்லிகை: Wild jasmine காட்டு மல்லிகை.
மோசை: Woman's finger ornament பெண்கள் விரலணி வகை.

மோட்டன்: Ruffian மூர்க்கன்.
மோட்டு மீன்: Star நட்சத்திரம்.
மோட்டு வலயம்: Kind of garland மாலை வகை.
மோடனம்: Disgrace அவமானம்.
மோடி: Durga துர்க்கை; Manner விதம்; Disagreement பிணக்கு.
மோடு: Height உயர்ச்சி; Stoutness பருமை; Belly வயிறு; Body உடம்பு; Ignorance மடமை.
மோத்தை: Ram ஆட்டுக்கிடாய்; Spathe, as of plantain வாழை போன்றவற்றின் மொட்டு.
மோதகம்: Kind of rice cake பணியார வகை.
மோந்தை: Kind of drum பறை வகை.
மோப்பு: Amour காதல்.
மோய்: Mother தாய்.
மோரோடம்: Kind of tree செங் கருங் காலி.
மோலி - மௌலி: Crown கிரீடம்.
மோழல்: Boar பன்றி.
மோழை: Hornless cattle கொம்பில்லாத கால்நடை; Subterranean water கீழாறு; Bubble குமிழி; Pool மடு; Stupidity மடமை.
மோழைமை: Ridicule பரிகாசம்.
மோறு-த்தல்: To gape அங்காத்தல்; To be lazy சோம்பியிருத்தல்.
மோறை: Savageness முரட்டுத்தனம்.
மோனம்-மௌனம்: Silence பேசாமை.
மோனை: First முதன்மை.

## மௌ

மௌவல்: Jasmine முல்லை வகை; Lotus தாமரை.

## ய

யதி: Ascetic துறவி.
யவனிகை: Curtain இடுதிரை.
யவை: Barley வாற்கோதுமை; A linear measure நீட்ட ளவை வகை.

## யா

யா: Which யாவை; A tree மர வகை. -த்தல்: To bind கட்டுதல்; To compose, as poem செய்யுள் இயற்றல்; To tell சொல்லுதல்.
யாக்கை: Body உடம்பு.
யாகம்: Yagña வேள்வி.
யாங்கு: Where எவ்விடம்; How எவ்வாறு.
யாடு: Goat ஆடு.
யாண்: Beauty அழகு.
யாண்டு: Where எங்கு.
யாணர்: Freshness புதுமை; Fresh income புதிய வருவாய்; Fertility செழுமை; Wealth செல்வம்.
யாதனை: Agony வேதனை.
யாது: Rākṣasa இராக்கதன்.
யாப்பறை: Unchaste woman கற்பில்லாதவள்.
யாப்பியம்: Chronic disease நாட்பட்ட நோய்.
யாப்பு: Affection அன்பு; Resolution உறுதி; Fitness பொருத்தம்; Verse செய்யுள்.
யாப்புறு-தல்: To be pregnant with meaning பொருள் நிரம்பியிருத்தல்; To earn சம்பாதித்தல்.-த்தல்: To enforce வலியுறுத்துதல்.
யாமக் கோட்டம்: Harem அந்தப்புரம்.
யாமம்: Midnight நள்ளிரவு; Night இரவு.
யாமை: Tortoise ஆமை.
யாய்: Mother தாய்.
யாவண்: Where எவ்விடம்.
யாவதும்: Even a little சிறிதும்; All எல்லாம்.
யாழ்: Stringed musical instrument இசைக் கருவி வகை; Melody-type பண் வகை.
யாளி: Kind of animal விலங்கு வகை.
யாறு: River ஆறு.
யானம்: Vehicle வாகனம்.
யானைக்கூப்பு: Chess சதுரங்கம்.
யானைத்தீ: Kind of disease நோய் வகை.
யானைபாய்ச்சு-தல்: To make an elephant mad யானையை மதம்படச் செய்தல்.
யானைவாரி: Keddah யானைக் கூடம்.

## யு

யுகம்-யுகளம்: Pair இரட்டை.

## யூ

யூகம்: Black monkey கருங் குரங்கு; Battle array படையின் அணி வகுப்பு.
யூகை: A linear measure நீட்ட ளவை வகை.
யூதம்: Battalion பெரும்படை.
யூபத்தம்பம்-யூபதண்டு-யூபம்: Stake to which sacrificial animal is fastened வேள்வித் தூண்.

யூபம்: Headless trunk of body முண்டம்.

### யோ

யோகம்: Union சேர்க்கை; Means உபாயம்; Remedy மருந்து; Girdle அரைப் பட்டிகை; Auspicious mark on body, as of horse நற் சுழி; Consciousness உணர்ச்சி; Ascetic practice தவ வகை.
யோகினி: Fairy தெய்வப் பெண்.
யோசனை: A linear measure நீட்டலளவை வகை.
யோசி-த்தல்: To join சேர்த்தல்.
யோதனம்: Battle போர்.
யோனி: Pudendum muliebre பெண் குறி; Form of life பிறவி; An adjunct of drama நாடக உறுப்பு வகை.

### யௌ

யௌவனம்: Youth இளமை.

### ரோ

ரோகம்: Disease நோய்.
ரோதனம்: Wail அழுகை.

### ல

லளிதம்: Sport லீலை.
லிபி: Letter of alphabet எழுத்து.
லேபனம்: Anointing பூச்சு.

### வ

வக்கணை: Courteous words உபசார வார்த்தை
வக்கா: White stork கொக்கு வகை; Kind of shell சிப்பி வகை.
வக்காணம்: Elaboration of tune ஆலாபனம்.
வக்கிரம்: Curve வளைவு.
வக்கிரி-த்தல்: To elaborate tune ஆலாபனஞ் செய்தல்.
வக்குதல்: To roast வதக்குதல்.
வகிர்: Scratch கீறு.
வகு-தல்: To split பிளத்தல்.-த்தல்: To assign நியமித்தல்; To narrate categorically வகைப்படுத்திச் சொல்லுதல்; To create படைத்தல்; To daub பூசுதல்.
வகுதி: Division வகுப்பு.
வகுந்து: Path வழி.
வகையறு-த்தல்: To settle as dispute வழக்குத் தீர்த்தல்.
வங்கணம்: Friendship நட்பு; Amour காதல்.
வங்கப்பாண்டி: Kind of vehicle ஊர்தி வகை.
வங்கப்பாவை: A drug மருந்துச் சரக்கு வகை.
வங்கம்: Lead ஈயம்; Ship மரக்கலம்; Kind of vehicle ஊர்தி வகை.
வங்கா: A bird பறவை வகை.
வங்காரம்: Gold பொன்.
வங்கியம்: Flute குழல்.
வங்கு: Hollow வளை.
வங்கூழ்: Wind காற்று.
வச்சிரகாயம்: A medicine மருந்து வகை.
வச்சிரதந்தி: A worm புழு வகை.
வச்சிரம்: A weapon ஆயுத வகை; Hardness உறுதி.
வச்சிரயாப்பு: Indelible writing அழியாத எழுத்து.
வச்சை: Miserliness உலோபம்; Disgrace பழிப்பு.
வசக்கு-தல்: To improve as land நிலத்தைத் திருத்துதல்.
வசந்தன்: Cupid மன்மதன்.
வசம்: Ability முடிகை.
வசலை: A green பசளைக் கீரை.
வசவன்: Steer பசுவின் கடாக்கன்று.
வசி: Cleft பிளவு; Sharpness கூர்மை; Scar தழும்பு; Sword வாள்; Fascination வசியம்; Speech பேச்சு; Rain மழை.
வசீரன்: Hero வீரன்.
வசு: Flame சுவாலை.
வசுவாசி: Mace சாதிபத்திரி.
வசை: Calumny பழிப்பு; Fault குற்றம்; Fat கொழுப்பு.
வசையுநர்: Enemies பகைவர்.
வஞ்சம்: Fraud கபடம்; Lie பொய்; Cruelty கொடுமை.
வஞ்சனம்: Fraud வஞ்சகம்.
வஞ்சி: One of four chief kinds of metre நால் வகைப் பாவினுள் ஒன்று; A creeper கொடி வகை.
வஞ்சினம்: Oath சபதம்.
வட்கர்-வட்கார்: Enemies பகைவர்.
வட்கு: Shyness நாணம்; Fault குற்றம்; Injury கேடு. -தல்: To bow வணங்குதல்; To flourish வளம் பெறுதல்.
வட்டகை: Region பிரதேசம்; Small bowl கிண்ணம்.
வட்டணம்-வட்டணை: Shield கேடகம்.
வட்டணை: Formal beginning of letter கடித வக்கணை; Rhetorical speeh வருணனை; Circle வட்டம்; Moving left or right இடசாரி வலசாரியாகச் சுற்றுகை; Cymbals தாளக் கருவி.
வட்டப்பாறை: Sandal stone சந்தனக் கல்.

வட்டம்: Kind of pastry அப்ப வகை; Sandal stone சந்தனக்கல்; Circular ornamental fan ஆல வட்டம்; Scale தராசு தட்டு; Shield கேடகம்; Kind of pearl முத்து வகை; Kind of water squirt நீர் வீசு கருவி வகை; Curve வளைவு; Kind of boomerang வளைதடி; Cloth ஆடை; Boundary எல்லை; Turning pole of oil press செக்குலக்கை.

வட்டி: Basket கூடை; A measure of capacity நாழி; Cowry பலகறை; Kind of paraphernalia விருது வகை. -த்தல்: To revolve சுழலுதல்; To brandish சுழற்றுதல்; To swear சபதம் செய்தல்; To slap one's shoulders in defiance or challenge தோள் தட்டுதல்; To roll உருட்டுதல்; To tie கட்டுதல்; To write எழுதுதல்; To bend வளைத்தல்.

வட்டிகை: Painter's brush சித்திரம் எழுதும் கோல்; Picture சித்திரம்; Kind of paraphernalia விருது வகை; Coracle ஓட வகை; An unguent சாந்து வகை.

வட்டில்: Cup கிண்ணம்; A measure of capacity முகத்தல் அளவை வகை; Quiver அம்புக்கூடு; An item of paraphernalia விருது வகை.

வட்டினி: Wager பந்தயப் பொருள்.

வட்டு: Dice சூதாடு கருவி; Anything round திரண்ட பொருள்; A water squirt நீர் வீசு கருவி வகை; A game விளையாட்டு வகை.

வட்டுடை: Kind of dress உடை வகை.

வட்டை: Path வழி.

வடக்கிரு-த்தல்: To starve to death உண்ணாதிருந்து சாதல்.

வடகம்: Upper garment மேலாடை; Kind of cloth துகில் வகை.

வடந்தை: That which is in north வடதிசையில் உள்ளது; North wind வாடைக் காற்று.

வடபல்லி: Woman's ornament for fore-head பெண்கள் நெற்றி யணி வகை.

வடம்: Banyan ஆலமரம்.

வடமீன்: Arundati அருந்ததி.

வடவனம்: Kind of tree மர வகை.

வடவனல்-வடவாமுகாக்கினி: Submarine fire கடல் நெருப்பு.

வடவு: Fatigue மெலிவு.

வடி: Honey தேன்; Sharpness கூர்மை; Dressing, as of hair வாரி முடிக்கை; Investigation ஆராய்ச்சி; Tender green mango மாம் பிஞ்சு; Wind காற்று; Form உருவம்.-தல்: To be perfected திருந்துதல்; To be clear தெளிதல்; To become beautiful அழகு பெறுதல்; To lengthen நீளுதல். -த்தல்: To squeeze out பிழிதல்; To train பழக்குதல்; To practise பயிலுதல்; To flatten out தகடாக்குதல்; To stroke with fingers as yāḻ strings யாழ் நரம்பை உருவுதல்; To equip, as horse அலங்கரித்தல்; To nip கிள்ளியெடுத்தல்.

வடி தயிர்: Thick curds கட்டித்தயிர்.

வடிம்பிடு-தல்: To compel நிர்ப்பந்தித்தல்; To urge தூண்டுதல்.

வடிம்பு: Edge விளிம்பு; Lever நெம்பு; Reproach பழி.

வடிவு: Beauty அழகு; Lustre ஒளி.

வடு: Chiselled figure உளியால் செதுக்கின உரு; Scar தழும்பு; Fault குற்றம்; Reproach பழி; Injury கேடு; Fine black sand கரு நுண் மணல்.-த்தல்: To exhibit வெளிப்படுத்துதல்.

வடுக: Telugu தெலுங்கு; A dance கூத்து வகை; Investiture with sacred thread பூணூல் சடங்கு.

வண்டயம்-வெண்டையம்: Anklet கழல்.

வண்டர்: Royal time tellers அரசனுக்கு நாழிகை அறிவிப்போர்.

வண்டல்: A girl's game மகளிர் விளையாட்டு வகை; Toy-house சிற்றில்.

வண்டன்: Wicked person தீயோன்.

வண்டானம்: Kind of heron நாரை வகை.

வண்டு: Bracelet கை வளை.

வண்ணக்கன்: Tester of coins நாணய சோதகன்.

வண்ணகம்: Elaborate eulogy வருணித்துப் புகழுகை.

வண்ணடை: Kind of cloth துகில் வகை.

வண்ணத்தான்: Washerman வண்ணான்.

வண்ண நீர்: Vermilion water அரக்கு நீர்.

வண்ணம்: Colour நிறம்; Beauty அழகு; Character குணம்; Merit சிறப்பு; Species இனம்; Manner வகை; Rhythm பாவின்கண் நிகழும் ஓசை வகை; Song பாட்டு.

வண்ணவமுதம்: Boiled rice mixed with dholl பருப்புச் சோறு.

வண்மை: Bounty ஈகை; Quality குணம்; Truth வாய்மை; Fertility வளப்பம்.

வணக்கம்-வணக்கு: Bending வளைகை.

வணர்-தல்: To bend வளைதல்; To curl, as hair மயிர் குழன்றிருத்தல்.

வத்தி-த்தல்: To thrive விருத்தியடைதல்; To exist உளதாதல்.
வத்தினை: Perquisite உரிமைப் பேறு.
வதம்: Austerity விரதம்; Killing கொல்லுகை.
வதனம்: Face முகம்.
வதி: Mire சேறு; Way வழி; Channel கால்வாய்.-தல்: To dwell தங்குதல்; To sleep தூங்குதல்.
வதுவை: Bride மணமகள்; Marriage மணம்; Wedding garland மணமாலை.
வந்தனை: Reverence வணக்கம்.
வந்தி: Reverence வணக்கம்; Royal eulogist அரசரைப் புகழ்வோன்; Barren woman மலடி; Compulsion பலவந்தம்; Quarrel சண்டை.
வந்திகை: Armlet கை அணி.
வந்து: Wind காற்று.
வபை: Omentum வயிற்றுள் நாபியருகி லிருக்கும் நிணம்.
வம்பலன்: Wayfarer வழிப்போக்கன்; Neighbour அயலான்.
வம்பு: Newness புதுமை; Instability நிலையின்மை; Uselessness பயனிலாமை; Scandal அவதூறு; Unseasonal rains அகால மழை; Fragrance வாசனை; Girdle கச்சு; Glove கை உறை.
வய: Strength வலிமை; Abundance மிகுதி.-த்தல்: To desire விரும்புதல்.
வயக்கு: Light ஒளி.
வயங்கல்: Mirror கண்ணாடி.
வயங்கு-தல்: To shine ஒளிசெய்தல்; To be clear தெளிதல்.
வயந்தகம்: Pendant of woman's head-ornament மகளிர் தலைக் கோலத்தின் ஓர் உறுப்பு.
வயம்: Victory வெற்றி; Means மூலம்.
வயலை: A creeper பசலைக்கொடி; Open space வெளி.
வயவன்: Warrior வீரன்.
வயவு-வயா: Morning sickness மசக்கை; Desire விருப்பம்.
வயன்: Manner விதம்.
வயனம்: Reproach பழிமொழி.
வயனர்: Beings, like birds பறவை வடிவினர்.
வயிர்: Sharpness கூர்மை; Bamboo மூங்கில்; Bugle ஊது கொம்பு.-த்தல்: To harden வயிரங் கொள்ளுதல்.
வயிரம்: Strength வலிமை; Sharpness கூர்மை: Ferrule பூண்; Animosity பகை.
வயிராகம்: Absence of wordly passions பற்றின்மை.
வயிரியர்: Musicians பாடகர்; Dancers கூத்தர்.
வயிறு வாய்-த்தல்: To remain in womb கருப்பத்தில் தங்குதல்; To bring forth child மகப் பெறுதல்.
வயின்: Place இடம்; Side பக்கம்; Belly வயிறு; Proper stage பக்குவம்; Order முறை.
வர்ணம்: Tone ஓசை; Ointment பூச்சு.
வரத்து: Order உத்தரவு.
வரம்: Excellence மேன்மை.
வரம்பு: Limit எல்லை; Ridge of field வரப்பு; Causeway அணை.
வரவு: History வரலாறு; Origin உற்பத்தி; Path வழி; Worship வணக்கம்.
வரவை: Tax வரி.
வரன்று-தல்: To scrape வாருதல்.
வரி: Dot புள்ளி; Bandage கட்டு; Melody இசை; A dance கூத்து வகை; Colour நிறம்; Paddy நெல்.-தல்: To draw சித்திரம் எழுதுதல்; To cover மூடுதல்.-த்தல்: To adorn அலங்கரித்தல்; To run ஓடுதல்; To appoint நியமித்தல்; To invite அழைத்தல்.
வரிசை: Insignia of royalty இராஜ சின்னம்; Excellence மேம்பாடு; Regard பாராட்டு; Cultivator's share of produce விளைவில் உழவன் பங்கு.
வரிசை மகளிர்:Famale dancersவிறலியர்.
வரிதகம்: Kind of song இசைப் பாட்டு வகை.
வரியிலார்: Revenue officers வரி அதிகாரிகள்.
வருக்கை: Kind of jack-tree பலா வகை.
வருட்டு-தல்: To console தேற்றுதல்; To charm வசீகரித்தல்.
வருடு-தல்: To massage தடவுதல்.
வருடை: Mountain sheep மலையாடு.
வருத்தம்: Effort முயற்சி.
வருமை: Next brith மறு பிறப்பு.
வருவாய்: Income வரும்படி; Origin தோன்றும் இடம்.
வருவு-தல்: To open திறத்தல்.
வரூதினி: Army படை.
வரை: Bamboo மூங்கில்; Mountain மலை; Limit எல்லை; Measure அளவு.-தல்: To fix நிர்ணயித்தல்; To restrain அடக்குதல்; To exclude விலக்குதல்; To earn by legitimate means நியாய வழியிற் சம்பாதித்தல்; To make one's own தனக்குரிய தாக்குதல்; To marry மணஞ் செய்தல்.
வரைப்பு: Writing எழுதுகை; Compound wall மதில்; Enclosed space

சுவர் சூழ்ந்த வெளி; Mansion மாளிகை; World உலகம்; Tank குளம்.

வல்: Dice சூதாடு கருவி.

வல்சி: Food உணவு; Rice அரிசி; Paddy நெல்.

வல்லபம்: Cruel deed கொடுஞ் செயல்; Heroic deed வீரச் செயல்.

வல்லபன்: Husband கணவன்.

வல்லம்-வல்லமை: Power ஆற்றல்.

வல்லயம்: Kind of spear ஈட்டி வகை.

வல்லி: Creeper கொடி; Young woman இளம்பெண்; Fetters கால் விலங்கு; Gambler சூதாடி.

வல்லிகை: Halter of horse குதிரைக் கழுத்துக் கயிறு.

வல்லிசாதம் - வல்லிசாதி: A creeper கொடி வகை.

வல்லியம்: Tiger புலி.

வல்லூற்று: Rock spring பாறை ஊற்று.

வல்லை: Big forest பெருங் காடு; Quickly விரைவாக.

வலத்தல்: To encircle சுற்றுதல்; To weave பின்னுதல்; To string தொடுத்தல்; To bind கட்டுதல்; To say சொல்லுதல்.

வலக்காரம்: Victory வெற்றி; Trick தந்திரம்.

வலசை: Emigration குடிபோகை.

வலம்: Strength பலம்; Victory வெற்றி; Command ஆணை; Place இடம்; That which is excellent சிறந்தது.

வலம்புரி: Kind of conch சங்கு வகை; A head ornament தலையணி வகை; East Indian rose bay நந்தியாவட்டம்.

வலயம்: Bracelet கை வளை; Surrounding region சுற்றிடம்; Plot பாத்தி; Garden தோட்டம்.

வலவன்: Driver பாகன்.

வலவை: Skill திறமை; Shameless person நாணிலி.

வலார்: Switch வளார்.

வலி: Strength வன்மை; Compulsion பலவந்தம்; Arrogance அகங்காரம்; Unjust claim வம்பு வழக்கு; Prop பற்றுக் கோடு; Vow சபதம்.-தல்: To be hard திண்ணியதாதல்; To act voluntarily தானாகச் செய்தல்; To transgress மீறுதல். -த்தல்: To seize பற்றிக்கொள்ளுதல்; To decide துணிதல்; To become dry வற்றுதல்; To consider ஆலோசித்தல்; To do with attention கருத்தொடு செய்தல்; To agree உடன்படுதல்; To pull இழுத்தல்.

வலிப்பு: Permanence நிலைபேறு.

வலிபடு-தல்: To rival மாறுபடுதல்.

வலிமுகம்-வலீமுகம்: Monkey குரங்கு.

வலியான்: King-crow கரிக்குருவி.

வலியுறுத்து-தல்: To be miserly உலோபஞ் செய்தல்.

வலிவு: High pitch உச்ச இசை.

வவ்வு-தல்: To snatch கவர்தல்.

வழக்காட்டு: Sulks ஊடல்.

வழக்கு: Movement இயக்கம்; Usage மரபு; Propriety முறை; Bounty வண்மை.

வழது: Smoothness மென்மை.

வழங்கு-தல்: To last நிலை பெறுதல்; To be esteemed கொண்டாடப் படுதல்; To give கொடுத்தல்; To discharge எவுதல்; To speak சொல்லுதல்.

வழலை: Ooze from wound ஊனீர்.

வழி: Homage வழிபாடு; Lineage பரம்பரை; Relation சுற்றம்; Place இடம்; Mountainous region மலைப்பிரதேசம்; Boon வரம்; Afterwards பின்பு.-த்தல்: To shed வடித்தல்; To smear பூசுதல்.

வழிநில்-தல் (வழிநிற்றல்): To carry out orders ஏவல் செய்தல்.

வழிப்படு-த்தல்: To reform சீர்திருத்துதல்.

வழிபடு-தல்: To worship வணங்குதல்.

வழிமொழி-தல்: To praise புகழ்தல்; To reiterate அநுவதித்தல்.

வழியடை: Presumptive heir தாயத்தின் பின்னுரிமை உடையான்.

வழுக்கு: That which becomes useless பயன்படாது கழிவது.-தல்: To forget மறத்தல்; To exempt ஒழிதல்; To err தவறுதல்.

வழுத்து-தல்: To bless வாழ்த்துதல்; To praise துதித்தல்.

வழுதுணங்காய்-வழுதுணை: Brinjal கத்தரிக்காய்.

வழுநீர்: Rheum in eye பீளை.

வழும்பு: Fault குற்றம்; Evil தீங்கு; Fat நிணம்.

வழுவாய்: Escape தப்புகை; Sin பாவம்.

வழுவு-தல்: To err தவறுதல்; To slip சருக்குதல்; To be deficient குறையுடையதாதல்.

வழை: A tree சுரபுன்னை; Freshness புதுமை.

வள்: Fertility வளம்; Greatness பெருமை; Sharpness கூர்மை; Bridle கடிவாளம்; Bed படுக்கை; Strength வலிமை.

வள்பு-வள்வு: Thong வார்.

வள்ளம்: Eating plate உண்ணும் கலம்; Canoe சிறுதோணி.
வள்ளல்: Liberal donor வரையாது கொடுப்போன்; Benevolence கொடைத் தன்மை.
வள்ளி: Climber கொடி; Bracelet கைவளை; Hill woman குறிஞ்சி நிலப் பெண்; Kind of dance கூத்து வகை; Moon சந்திரன்.
வள்ளூரம்-வள்ளூரம்: Muscle பசுந்தசை; Beef மாட்டிறைச்சி.
வள்ளுவன்: Foreteller நிமித்திகன்.
வள்ளை: Creeper கொடி வகை; Kind of song பாட்டு வகை.
வளது: A tree மர வகை; Fertility செழிப்பு.
வளம்: Fertility செழுமை; Abundance மிகுதி; Advantage பயன்; Wealth செல்வம்; Income வருவாய்; Goodness நன்மை; Beauty அழகு; Victory வெற்றி.
வளர்-தல்: To rejoice களித்தல்; To sleep உறங்குதல்; To dwell தங்குதல்.
வளவன்: Agriculturist வேளாளன்.
வளவு: House வீடு.
வளா: Extent பரப்பு.
வளாகம்: Place இடம்; Earth உலகம்.
வளார்: Switch மலார்.
வளாவு-தல்: To surround சூழ்தல்; To cover மூடுதல்.
வளி: Wind காற்று.
வளி மறை: House வீடு; Door கதவு.
வளை: Circle சுற்றிடம்; Conch சங்கு; Bangle வளையல்; Discus சக்கராயுதம்.-தல்: To be defeated தோற்றல்; To suffer வருந்துதல்.-த்தல்: To obstruct தடுத்தல்; To paint எழுதுதல்; To wear அணிதல்.
வளைப்பு: Prison சிறை; Guard காவல்.
வற்கடம்: Famine பஞ்சம்.
வற்கம்: Saddle குதிரையின் சேணம்.
வற்கலை: Garment of bark மரவுரி.
வற்காலம்: Time of drought மழையில்லாக் காலம்.
வற்பம்: Hardness வன்மை; Drought வறட்சி.
வற்புலம்: High ground மேட்டு நிலம்.
வற்புறு-தல்: To take heart ஆறுதலடைதல்.-த்தல்: To console ஆற்றுவித்தல்.
வற்று-தல்: To become worthless பயனற்றுப் போதல்.
வறம்: Drying up வற்றுகை; Drought நீரில்லாமை; Hot season கோடை; Poverty வறுமை; Dry soil வறண்ட பூமி.
வறல்: Dried twig சுள்ளி.
வறிது: That which is little சிறிது.
வறுமை: Loneliness தனிமை.
வறை: Fried curry பொரிக் கறி.
வன்கண்: Cruelty கொடுமை: Bravery வீரம்.
வன்கணை: A tree மர வகை.
வன்கை: A drum பறை வகை.
வன்பாடு: Rudeness முருட்டுத்தனம்.
வன்புலம்: Hilly tract குறிஞ்சி நிலம்; Jungle tract முல்லை நிலம்.
வன்மம்: Malice தீராப் பகை; Force வலி.
வன்மறை: A tree புரச மரம்.
வன்மிகம்-வன்மீகம்: Ant-hill கறையான் புற்று.
வன்மீன்: Crocodile முதலை.
வன்மை: Anger கோபம்.
வன்றி: Swine பன்றி.
வன்றிசை: North வட திசை.
வன்னம்: Colour நிறம்; Letter எழுத்து.
வன்னி: Fire நெருப்பு; Horse குதிரை; A tree மர வகை.
வன்னியன்: Commander சாமந்தன்.
வனசம்: Lotus தாமரை.
வனப்பு: Beauty அழகு; Stature தோற்றம்; A tune இசை வகை.
வனம்: Water நீர்; Youlhful beauty இளமை அழகு; Colour வர்ணம்.
வனமாலை: Basil garland துளசி மாலை.
வனிதை: Woman பெண்.
வனை-தல்: To shape உருவாக்குதல்; To draw சித்திரம் எழுதுதல்.

### வா

வா: Leaping தாவுகை.
வாக்கல்: Strained boiled rice வடித்த சோறு.
வாக்கியம்: Citation மேற்கோள்.
வாக்கு: Perfection நிறைவு; Encomium புகழுரை; Side பக்கம்.-தல்: To pour வார்த்தல்.
வாகடம்: Medical treatise வைத்திய நூல்.
வாகம்: Horse குதிரை; Cakra bird சக்கரவாகம்.
வாகு: Beauty அழகு; Light ஒளி; Skill திறமை; Shoulder தோள்.
வாகை: A tree மர வகை; Garland of victory வெற்றி மாலை.
வாங்கு-தல்: To bend வளைத்தல்; To pull இழுத்தல்; To send forth செலுத்துதல்; To rescue உய்வித்தல்; To embrace

தழுவுதல்; To resemble ஒத்தல்; To dig up தோண்டுதல்; To break முறித்தல்; To sway அசைதல்; To retreat பின் வாங்குதல்.

வாச்சியம்: Musical instrument வாத்தியம்.

வாசகம்: Speech பேச்சு; Praise தோத்திரம்.

வாசரி: Rebuke வசவு.

வாசவன்: Indra இந்திரன்; Vendor of aromatics பஞ்ச வாசம் விற்போன்.

வாசி: Difference வேறுபாடு: Fitnees தகுதி; Rate வீதம்; Discount நாணய வட்டம்; Horse குதிரை; Ornamental arch over idol பிரபை.

வாசிகை: Garden மாலை.

வாசினை: Reading படிக்கை; Playing on musical instrument வாத்திய வாசிப்பு.

வாட்டு: Fried dish பொரிக்கறி.-தல்: To destroy அழித்தல்.

வாடகை: Region சுற்று வட்டம்.

வாடாக் கடமை: Permanently fixed tax நிலையான வரி.

வாடு: Faded flower வாடிய பூ. - தல்: To be defeated தோல்வியடைதல்; To be removed நீங்குதல்; To diminish குறைதல்.

வாடூன்: Dried fish உப்புக் கண்டம்.

வாடை: North wind வட காற்று.

வாணி: Word சொல்; Learning கல்வி: Sarasvati சரஸ்வதி.

வாணிகம்: Profit ஊதியம்.

வாதம்: Wind காற்று; Utterance சொல்; Alchemy ரசவாதம்.

வாதி-த்தல்: To obstruct தடுத்தல்.

வாதிகன்: Scent manufacturer வாசனைப் பண்டம் செய்வோன்.

வாது-தல்: To cut அறுத்தல்.

வாமம்: Beauty அழகு; Light ஒளி; Left side இடப்பக்கம்; Injustice அநியாயம்; Evil தீமை; Thigh தொடை.

வாமனம்: Shortness of stature குறள் வடிவம்.

வாய்: Utterance வாக்கு; Voice குரல்; Truth மெய்ம்மை; Excellence சிறப்பு; Way வழி; Place இடம். - தல்: To succeed சித்தித்தல்; To happen certainly நிச்சயமாய் நிகழ்தல்; To be fit ஏற்றதாதல்; To be full நிறைதல்; To obtain பெறுதல்; To consent ஒப்புதல். -த்தல்: To flourish செழித்தல்; To join சேர்தல்; To gather திரட்டுதல்.

வாய்க்கரை; Lip உதடு.

வாய்க்கேள்வி: Royal command அரசனின் கட்டளை.

வாய்தல்: Doorway வாசல்.

வாய்ப்பு: Opportunity சந்தர்ப்பம்; Beauty அழகு; Wealth செல்வம்; Gain ஊதியம்.

வாய்ப்புள்: Chance-heard-word நற்சொல்லாகிய நிமித்தம்.

வாய்ப்பொய்: White lie வாய்மையின் பாற்படும் பொய்.

வாய்பாடு: Idiom மரபு; Custom வழக்கம்; Skill in speech சொல்வன்மை.

வாய்மை: Word சொல்; Truth உண்மை.

வாய்மொழி: Vēdas வேதம்; Tiruvāymoli திருவாய் மொழி என்னும் பிரபந்தம்.

வாயசம்: Crow காக்கை.

வாயடை: Food உணவு.

வாயில்: Place இடம்; Cause காரணம்; Means உபாயம்; Messenger தூதன்.

வாயுறை: Food உணவு; Medicine மருந்து; Women's ear-ring மகளிர் காதணி வகை.

வார்: Churning rope கடை கயிறு; Water நீர்; Bodice முலைக்கச்சு; Bit தண்டு; Elongation நீட்சி. - தல் (வாருதல்): To flow ஒழுகுதல்; To form, as milk in grain பால் கொள்ளுதல்; To be upright நேராதல்; To peel off உரிதல்; To play on yāḻ யாழ் நரம்பை வருடுதல்; To sift அரித்தல்.

வார்க்குத்தி - வார்க்குத்து: Whirlpool நீர்ச் சுழி.

வார்த்திகம்: Old age கிழத்தனம்.

வார்த்தை: News செய்தி; Occupation தொழில்.

வாரணம்: Conch சங்கு; Elephant யானை; Pig பன்றி; Screen மறைப்பு; Fowl கோழி; Sea கடல்.

வாரம்: Song பாட்டு; Side பக்கம்; Tax வரி; Share பங்கு; Half பாதி; Love அன்பு; Obstacle தடை; Post தூண்.

வாரி: Income வருவாய்; Produce விளைவு; Compound wall மதில்; Stadium செண்டு வெளி; Keddah கொப்பம்; Elephant stable யானைக்கூடம்.

வாரிசம்-வாரிசாதம்: Lotus தாமரை.

வாரிதம்: Cloud மேகம்.

வாரிதி: Ocean கடல்.

வாரியப் பெருமக்கள்: Members of village assembly ஊராளும் சபையோர்.

வாரியம்: Office of supervision மேல் விசாரணை உத்தியோகம்.

**வாரியன்**: Horseman குதிரைப் பாகன்.
**வாருணம்**: A tree மாவிலிங்க மரம்.
**வாளை**: Bamboo மூங்கில்.
**வால்**: Youth இளமை; Purity தூய்மை; Whiteness வெண்மை; Goodness நன்மை; Greatness பெருமை; Abundance மிகுதி.
**வாலாமை**: Pollution தீட்டு.
**வாலுகம்**: White sand வெண் மணல்.
**வாவல்**: Bat வௌவால்.
**வாவி**: Natural pool நீர் நிலை; Stream in river bed ஆற்றுப் படுகையில் ஓடை.
**வாழ்முதல்**: God கடவுள்.
**வாழ்வு**: Residence உறைவிடம்; Wealth செல்வம்.
**வாள்**: Lustre ஒளி; Fame புகழ்; Killing கொல்லுகை; Saw ரம்பம்; Scissors கத்தரிகை.
**வாள்வீரம்**: Bael வில்வம்.
**வாளம்**: Circle வட்டம்.
**வாளாமை**: Silence மௌனம்; Uselessness பயனின்மை.
**வாளி**: Arrow அம்பு; Circular course, as of horse வட்ட ஓட்டம்.
**வாறு**: Manner விதம்; Goal குறிக்கோள்.
**வான்**: Sky ஆகாயம்; Primordial matter மூலப் பிரகிருதி; Rain மழை; Ambrosia அமிர்தம்; Goodness நன்மை; Greatness பெருமை; Beauty அழகு; Regularity நேர்மை.
**வான்கண் - வான்மணி - வானவன்**: Sun சூரியன்.
**வான்பயிர்**: Garden crops தோட்டப் பயிர்.
**வானம்**: Dried tree உலர்ந்த மரம்.
**வானி**: Banner கொடி; A tree மர வகை; Paper kite காற்றாடி; Army படை.

**வி**

**விக்கிரமம்**: Valour பராக்கிரமம்.
**விக்குள்**: Hiccup விக்கல்.
**விகடம்**: Roughness கரடு முரடு; Spaciousness பரப்பு.
**விகடன்**: Haughty person கர்வி; Enemy பகைவன்.
**விகற்பம்**: Difference வேறுபாடு.
**விகிர்தன்**: God கடவுள்.
**விசக்காணம்**: Share of headman in produce of village கிராம விளைவில் கிராமத் தலைவற் குரிய பங்கு.
**விசம்**: Rate விகிதம்.
**விசயம்**: Juice of sugarcane கருப்பஞ் சாறு; Jaggery வெல்லம்; Treacle பாகு.
**விசாய்-தல்**: To proceed further மேலே செல்லுதல்.
**விசி**: Leather strap வார்.-த்தல் To become swollen உப்புதல்; To fasten கட்டுதல்.
**விசிகம்**: Arrow அம்பு.
**விசும்பு**: Sky ஆகாயம்.
**விசை**: A tree மர வகை.-த்தல்: To swing வீசுதல்; To leap தள்ளுதல்; To scatter சிதறுதல்; To be forceful கடுமையாதல்.
**விஞ்சனம்**: Token அடையாளம்.
**விஞ்சு-தல்**: To exceed அதிகமாதல்.
**விஞ்சை**: Art, science கலை; Spiritual knowledge ஞானம்; Magic art மாய வித்தை; Incantation மந்திரம்.
**விட்டம்**: Body தேகம்.
**விட்டிகை**: Moth விட்டில்.
**விட்டேறு**: Missile எறிகோல்; Harsh word of ridicule இகழ்ந்து கூறும் கடுஞ் சொல்.
**விடக்கு**: Flesh இறைச்சி.
**விடங்கம்**: Curved cornice கொடுங்கை; Natural Lingam சுயம்பு லிங்கம்.
**விடங்கர்**: Crocodile முதலை.
**விடங்கு**: Beauty அழகு; Part of jewel ஆபரண உறுப்பு வகை; Romance காதற் சுவை.
**விடத்தேதோடரி - விடத்தேர்**: A tree மர வகை.
**விடமம்**: Unsuitableness இசைவற்றது.
**விடர்**: Fissure நிலப்பிளவு; Mountain cave மலைக் குகை.
**விடலை**: Youth இளைஞன்; Strong man வலிமையுடையவன்; Warrior வீரன்; Chief of agricultural tract மருதநிலத் தலைவன்.
**விடவி**: Tree மரம்.
**விடன்**: Warrior வீரன்; Licentious person தூர்த்தன்.
**விடாய்**: Thirst தாகம்.
**விடியா விளக்கு**: Ever burning lamp நந்தாவிளக்கு.
**விடு-தல்**: To say சொல்லுதல்; To form உண்டாக்குதல்; To blossom மலர்தல்; To increase மிகுதல்.-த்தல்: To disentangle பிரித்தல்; To answer விடை தருதல்; To receive permission விடைபெறுதல்; To remain தங்குதல்.
**விடுதலம்**: Open terrace நிலாமுற்றம்.
**விடுதா-தல் (விடுதருதல்)**: To send as present கொடுத்தனுப்புதல்; To advance unchecked தடையின்றி முன்னேறுதல்.

விடு தீட்டு: Deed of gift தான சாஸனம்.
விடுதோல்: Epidermis மேல்தோல்.
விடுநகம்: Instrument of torture கிட்டிக்கோல்.
விடுவாய்: Cleft திலப் பிளப்பு.
விடை: Abundance மிகுதி; Male of certain animals சில விலங்கின் ஆண்; Answer விடை.-த்தல்: To separate வேறுபடுத்துதல்; To be in haste விரைதல்; To obstruct தடுத்தல்; To afflict வருத்துதல்; To droop சோர்தல்; To burst into rage கடுங்கோபம் கொள்ளுதல்.
விண்: Sky ஆகாசம்.
விண்டு: Sky ஆகாசம்; Mountain மலை.
வித்தகம்: Skill திறமை; Perfection திருத்தம்.
வித்து: Seed விதை; Means சாதனம்; Cause காரணம்.-தல்:To spread பரப்புதல்.
வித்துரு-வித்துருமம்: Coral பவளம்.
வித-த்தல்: To indicate specifically சிறப்பாகப் பிரித்து எடுத்துரைத்தல்; To be excessive மிகுதல்.
விதரணம்: Gift கொடை.
விதலை: Shivering நடுக்கம்; Earth பூமி.
விதவை: Boiled rice சோறு; Gruel கூழ்; Thick fluid குழம்பு; Widow கைம்பெண்.
விதறு: Trembling நடுக்கம்.
விதாரம்: Kind of tree முள் இலவமரம்.
விதானம்: Canopy மேற்கட்டி: Arrangement ஏற்பாடு.
விதி: Conduct ஒழுக்கமுறை; Justice நீதி; Deed செயல். -த்தல்: To direct ஏவுதல்.
விதிர்-த்தல்: To tremble நடுங்குதல்; To sprinkle தெறித்தல்; To shake அசைத்தல்; To cut into pieces கண்டதுண்டம் செய்தல்; To pour ஊற்றுதல்.
விது: Moon சந்திரன்.
விதுப்பு: Trembling நடுக்கம்; Hurry பரபரப்பு; Desire விருப்பம்.
விதுவிதுப்பு: Throbbing pain உடலின் குத்து வலி.
விந்தம்: Kind of ruby மாணிக்க வகை.
விநயம்: Kind of song பாட்டு வகை; Means உபாயம்.
விப்பிரன்: Brahmin பிராமணன்.
விப்புருதி: Boil புண் கட்டி.
விபஞ்சி: Kind of vīṇa வீணை வகை.
விபவம்: Greatness பெருமை; Happiness வாழ்வு.
விபாகரன்: Sun சூரியன்.
விபுதன்: Wise man அறிஞன்; God தேவன்.
விபுலம்: Largeness பெருமை.
விபூதி: Wealth செல்வம்.
விம்பம்: Disc வட்டம்; Idol விக்கிரகம்; A creeper கொவ்வைக் கொடி.
விம்மல்: Distress துன்பம்; Despondency ஏக்கம்; Joy சந்தோஷம்.
விம்மிதம்: Admiration அதிசயம்; Delight உவகை.
விம்மு-தல்: To open as flower மலர்தல்; To sound ஒலித்தல்; To bring forth ஈனுதல்.
விய-த்தல்: To wonder அதிசயித்தல்; To be proud செருக்குறுதல்; To admire நன்கு மதித்தல்; To give கொடுத்தல்; To transcend கடத்தல்.
வியங்கியம்: Suggested sense குறிப்புப் பொருள்.
வியம்: Command ஏவல்; Send off வழியனுப்புதல்; Way வழி; Odd number ஒற்றைப் பட்ட எண்; Rudeness முருட்டுத் தன்மை; Change, as of mind வேறுபாடு; Height உயரம்.
வியயம்: Expenditure விரயம்.
வியர்: To feel irritated மனம் புழுங்குதல்.
வியல்: Greatness பெருமை; Width அகலம்; Abundance மிகுதி; Variety பல விதம்.
வியானம்: Conveyance ஊர்தி.
வியாழம்: Serpent பாம்பு.
விரகம்: Separation பிரிவு.
விரகு: Means உபாயம்; Cleverness சாமர்த்தியம்; Cunning தந்திரம்; Knowledge விவேகம்; Enthusiasm உற்சாகம்;Kinsmanship உறவு; A confection பண்ணியார வகை.
விரசு-தல் To be dense செறிதல்; To fit பொருந்துதல்.
விரசை: Darbha grass தருப்பை.
விரணம்: Enmity பகை.
விரலேறு: A drum பறை வகை.
விரவு-தல்: To mix கலத்தல்; To approach நெருங்குதல்; To be similar ஒத்தல்; to be united பொருந்துதல்.
விறாய்: Fuel விறகு; A flower plant பூச் செடி வகை.
விரி: Viper விரியன் பாம்பு.
விரிச்சி: Word omen வாய்ச் சொல் நிமித்தம்.
விரியல்: Garland பூமாலை.

விருகம்: Kind of wild dog நாய் வகை.
விருத்தம்: Cricle வட்டம்; Old age மூப்பு; Fault குற்றம்; Multitude கூட்டம்.
விருத்தி: Conduct ஒழுக்கம்; Profession தொழில்; Service தொண்டு; Land grant for livelihood சீவிதமாக விடப்பட்ட நிலம்; Commentary விரிவுரை; Posture ஆசனம்; Interest வட்டி.
விருது: Title பட்டம்; Banner கொடி; Trophy வெற்றிச் சின்னம்.
விருந்து: Newness புதுமை.
விரை: Odour வாசனை; Honey of flowers பூந்தேன்.-தல்: To be perturbed மனங் கலங்குதல்.
விரோசனன்: Sun சூரியன்.
வில்: Light ஒளி.
வில் யாழ்: Kind of yāḻ யாழ் வகை.
விலக்கு-தல்: To fix பதித்தல்.
விலது-தல்: To move அசைதல்; To throw எறிதல்.
விலங்கல்: Mountain மலை.
விலங்கு: Deer மான்; Animal மிருகம். -தல் To be athwart குறுக்கிடுதல்; To change மாறுபடுதல்; To slay கொல்லுதல்.
விலா: A tree மர வகை.
விலாசம்: Sport விளையாட்டு.
விலாவணை: Lament அழுகை.
விலாழி: Foam of mouth வாய் நுரை.
விலாளம்: Cat பூனை.
விலைசிராவணை-விலைத்தீட்டு: Sale-deed விலை ஓலை.
விலைப்பலி: Offering for consideration பயன் கருதி இடும் பலி.
விலைவன்: Cooly கூலியாள்.
விலோதம்: Curly hair சுருண்ட மயிர்; Large flag பெருங் கொடி.
விவரம்: Intervening space இடைவெளி; Discrimination பகுத்தறிவு.
விழவு-விழா: Festival உற்சவம்; Pastime விளையாட்டு.
விழி-த்தல்: To shine பிரகாசித்தல்; To be clear தெளிவாதல்; To be alive உயிர் வாழ்தல்.
விழுக்காடு: Fall வீழ்ச்சி; Chance தற்செயல்; That which is in store மேல் வருவது; Expletive அசைச் சொல்.
விழுக்கு: Fat ஊன் வகை.
விழுது: Butter வெண்ணெய்.
விழுப்பம்-விழுமம்: Excellence சிறப்பு; Distress துன்பம்.
விழுப்பு: Anything cast off கழிக்கப்படுவது.

விழை-தல்: To desire விரும்புதல்; To esteem மதித்தல்; To resemble ஒப்பாதல்.
விழைச்சி - விழைக்சு: Sexual union புணர்ச்சி.
விள்-தல் (விள்ளுதல்): To be opposed மாறுபடுதல்; To disclose வெளிப்படுத்துதல்; To be separated நீங்குதல்.
விளக்கம்: Light ஒளி; Praise புகழ்.
விளக்கு-தல்: To serve பரிமாறுதல்; To solder பொடியிட்டுப் பற்றவைத்தல்.
விளங்குபோன்: Metallic mirror உலோகக் கண்ணாடி.
விளப்பு: Becoming famous பிரசித்தமாவது.
விளம்பம்: Tardiness தாமதம்.
விளம்பு-தல்: To say சொல்லுதல்.
விளர்: Whiteness வெண்மை; That which is immature முற்றாதது; Straightness நேர்மை.-தல்: To call கூப்பிடுதல்.
விளரி: A melody-type இரங்கற் பண்.
விளா: A turn in ploughing உழவில் வருஞ் சுற்று.
விளாகம்: Battle field போர்க்களம்.
விளி: Sound ஓசை; Song இசைப்பாட்டு; Word சொல்; Shout ஆரவாரம்; Fifth note of gamut ஐந்தாம் சுரம்.-தல்: To die சாதல்.-த்தல்: To call அழைத்தல்.
விளிவு: Death சாவு; Sleep உறக்கம்; Cessation இடையறவு; Ire கடுங்கோபம்.
விளை: Result பயன்; Field விளைநிலம். -தல்: To occur சேர்தல்.-த்தல்: To perform செய்தல்.
விற்கிடை: 4 cubits நாலு முழ அளவு.
விற-த்தல்: To be dense செறிதல்; To abound மிகுதல்; To fear பயப்படுதல்.
விறல்: Victory வெற்றி; Strength வலிமை; Excellence விசேடம்; Physical expression of emotion மெய்ப்பாடு.-தல் (விறலுதல்): To rush forward with rage கோபத்தோடு எதிர்த்துச் செல்லுதல்.
விறலி: Danseuse நடிகை.
வினயம்: Device சூழ்ச்சி; Wicked deed கொடுஞ் செயல்.
வினவு-தல்: To bear in mind நினைதல்.
வினை: Deed செயல்; Remedy பரிகாரம்.
விஷயம்: Country தேசம்.

## வீ

வீ: Ruin அழிவு; Flower மலர் Pollen மகரந்தம்.-தல்: To leave நீங்குதல் To change மாறுதல்.

வீக்கம்: Crowd கூட்டம்; Greatness பெருமை; Pride கர்வம்; Obstacle இடையூறு; Swiftness வேகம்.

வீக்கு: Tightness இறுக்கம்.-தல்: To bind கட்டுதல்; To control அடக்குதல்.

வீச்சு: Dry screech, as of owl ஆந்தை முதலியவற்றின் சத்தம்.

வீசி: Wave அலை.

வீட்டு-தல்: To kill கொல்லுதல்; To cast into தள்ளுதல்.

வீடறு-த்தல்: To settle வழக்கு முதலியன தீர்த்தல்.

வீடாரம்: Camp பாசறை.

வீடு: Liberation விடுதலை; Effacement of universe சங்காரம்; Creation சிருஷ்டி; Final bliss மோக்ஷம்; Clearing - nut tree தேற்றுமரம்.

வீடுநர்: Mortals இறப்பவர்.

வீதி: Way வழி; Means முறை; Width அகலம்; Running straight, as of horse நேரோட்டம்.-த்தல்: To analyse and examine பகுத்து ஆராய்தல்.

வீதிதத்து-தல்: To run here and there இங்கும் அங்கும் ஓடுதல்.

வீமம்: Fear பயம்.

வீயம்: Seed வித்து.

வீராணம்: A drum பறை வகை.

வீரை: Sea கடல்; A tree மர வகை.

வீழ்: Aerial root மர விழுது. -தல்: To be separated நீங்குதல்; To desire விரும்புதல். -த்தல்: To waste வீணாக்குதல்.

வீழி: A plant செடி வகை.

வீளை: Whistling சீழ்க்கை; Shrill sound சில்லென்ற ஓசை.

வீறு: Distinctive excellence தனிச் சிறப்பு; Victory வெற்றி; Abundance மிகுதி; Good fortune நல் வினை; Arrogance கர்வம்; Separateness வேறு.

## வெ

வெஃகு-தல்: To desire விரும்புதல்.

வெக்காயம் - வெச்சாப்பு - வெச்சேனவு: Heat சூடு.

வெக்கை: Threshing floor நெற்களம்.

வெகுளி: Anger கோபம்; Dislike வெறுப்பு.

வெங்கண்: Cruelty கொடுமை.

வெங்களம்: Battlefield போர்க்களம்.

வெங்காரம்: Borax மருந்துச் சரக்கு வகை.

வெட்சி: A plant செடி வகை.

வெட்டி: Path வழி. -த்தல்: To be harsh கடுகடுப்பாதல்.

வெடி: Noise ஓசை; Cleft பிளவு; Hate பகை; Ruin கேடு; Shooting up நிமிர்ந்தெழுகை; Bad odour தீர் நாற்றம்.

வெடிப்பு: Ruin அழிவு.

வெடிபடு-தல்: To scatter சிதறுதல்; To fear பயப்படுதல்.

வெண்களமர்: Inhabitants of agricultural tract மருத நில மக்கள்.

வெண்காழ்: Small stick used in hunting rabbits முயலெறியும் தடி வகை.

வெண்கூதாளம்: A tree தாளி வகை.

வெண்கை: Hand unused to work வேலை செய்து பழகாத கை.

வெண்கோடி: Flag of victory வெற்றிக் கொடி.

வெண்கோட்டம்: A fragrant substance நறும் பண்ட வகை; A plant செடி வகை.

வெண்டயம் - வெண்டையம்: Warrior's anklet வீரர் காலணி.

வெண்டலை: Skull தலையோடு.

வெண்டு-தல்: To dry வற்றிப் போதல்.

வெண்படை: Warp நெசவுக்குரிய நூற்பா.

வெண்பாட்டம்: Summer shower கோடை மழை.

வெண்போத்தி: Kind of garment துகில் வகை.

வெண்பொன்: Silver வெள்ளி.

வெண்மாடம்: Kind of vehicle ஊர்தி வகை.

வெண்மை: Ignorance அறிவின்மை.

வெதிர்: A tree இலந்தை மரம்.

வெதிர்: Bamboo மூங்கில்.

வெந்-வெரிந்: Back முதுகு.

வெந்தை: Meal-cake பிட்டு.

வெப்பர்: Heat சூடு; Hot meal சூடான உணவு.

வெப்பு: Heat சூடு; Anger கோபம்; Severity கொடுமை; Leprosy தொழுநோய்.

வெம்பு-தல்: To fade வாடுதல்; To sound ஒலித்தல்.

வெம்மை: Valour பராக்கிரமம்; Desire விருப்பம்; Speed விரைவு.

வெயர்: Sweat வேர்வை.

வெயில்: Sun சூரியன்; Lustre ஒளி.

வெரு: Fear பயம்.

வெருகு: Wild cat காட்டுப் பூனை.

வெருள் - தல் (வெருளுதல்): To be perplexed மருளுதல்; To be frightened அஞ்சுதல்.

வெருளி: Pride of riches செல்வச் செருக்கு.

வேல்-தல் (வெல்லுதல்): To excel மேம்படுதல்.
வெள்கு - தல்: To be ashamed வெட்குதல்; To fear அஞ்சுதல்.
வெள்வரி: Cucumber வெள்ளரி.
வெள்ளம்: Sea கடல்; A large number ஒரு பேரெண்.
வெள்ளிடி: Rainless thunder கோடையிடி.
வெள்ளில்: Wood apple விளா; Bier பாடை.
வெள்ளிலை: Betel வெற்றிலை.
வெள்ளை: Balarāma பலராமன்; Trifle அற்பம்.
வெளில்: Elephant stay யானைத் தறி; Squirrel அணில்.
வெளிறு: Whiteness வெண்மை; Light வெளிச்சம்; Becoming manifest வெளிப்படுகை; Uselessness பயன் இன்மை; Ignorance அறியாமை; Youth இளமை; Fault குற்றம்; Having no hard core வயிர மின்மை.
வெற்பு: Mountain மலை.
வெறி: Order ஒழுங்கு; Fragrance வாசனை; Frenzy வெறியாட்டு; Deity தெய்வம்; Sheep ஆடு; Anger கோபம்; Fear அச்சம்.
வெறு-த்தல்: To be afflicted துன்பமுறுதல்.
வெறுக்கை: Abundance மிகுதி. Wealth செல்வம்.

## வே

வேகடம்: Polishing and cleaning gems மணியின் மாசு நீக்குகை.
வேசரி: Mule கோவேறு கழுதை.
வேசறவு: Sorrow துக்கம்.
வேட்கை - வேட்சி - வேட்டம்: Desire விருப்பம்.
வேட்கோ: Potter குயவன்.
வேடை: Desire விருப்பம்; Heat வெப்பம்.
வேணி: Matted hair சடை.
வேணீர்: Drinking water உண்ணும் நீர்.
வேணு: Bamboo மூங்கில்.
வேத்திரம்: Rattan பிரம்பு.
வேதகம்: Change வேறுபாடு; Refined, as of gold புடமிட்ட பொன்; Transmuting agent குளிகை.
வேதங்கம்: Kind of cloth ஆடை வகை.
வேதனம்: Wisdom அறிவு; Pay சம்பளம்.
வேதி: Platform மேடை.-த்தல்: To oppress கவிதல்; To smear பூசுதல்.
வேதினம்: Saw ஈர் வாள்.
வேது: Fomentation ஒற்றடம்.
வேந்தன்-வேந்து: King அரசன்.
வேம்பு: Dislike வெறுப்பு.
வேய்: Bamboo மூங்கில்; Spy ஒற்றன். -தல்: To wear சூடுதல்; To surround சூழ்தல்; To set, as gems பதித்தல்; To fit பொருந்துதல்; To blossom மலர்தல்; To cover மூடுதல்.
வேர்-த்தல்: To be angry கோபித்தல்; To be afraid பயப்படுதல்.
வேரம்: Anger கோபம்; Artificial mound செய் குன்று.
வேரல்: Kind of bamboo கல் மூங்கில்.
வேரி: Honey தேன்; Toddy கள்; An aromatic வாசனைப் பண்ட வகை.
வேலன்: Priest of Skanda முருகபூசாரி.
வேலி: Land நிலம்; A tree முள்ளிலவு.
வேலை: Time காலம்; Sea கடல்; Sandy tract நெய்தல் நிலம்.
வேவை: That which is boiled வெந்தது.
வேழம்:: Sugarcane கரும்பு; Kaus பேய்க் கரும்பு; Bamboo மூங்கில்; A reed கொறுக்கை; Elephant யானை; Aries of zodiac மேட ராசி. Disease of wood apple விளாம்பழ நோய்.
வேழம்பம்: Deceit வஞ்சகம்.
வேழம்பர்: Pole-dancers கழைக்கூத்தர். Jester விதூஷகர்.
வேள்: Marriage மணம்; Earth மண்; Desire விருப்பம்; Great man சிறந்தவன்.
வேள்வி: Worship பூசனை; Yāga யாகம்; Religious merit புண்ணியம்.
வேளாண்மை: Beneficence உபகாரம்.
வேளை: A plant செடி வகை.
வேற்றுமை: Antipathy பகைமை.
வேனல்-வேனில்: Heat வெப்பம்; Summer கோடைக்காலம்.

## வை

வை: Sharpness கூர்மை; Straw வைக்கோல்.-தல்: To deceive வஞ்சித்தல்.
வைகல்: Staying தங்குகை; Passing கழிகை; Day நாள்; Instant வேளை.
வைகறை-வைகுறு: Small hours விடியும் முன்னுள்ள காலம்.
வைது-தல்: To dry up, as river வற்றுதல்.
வைதாளிகர்: Class of royal panegyrists அரசனைப் புகழ்ந்து பாடுவோர்.
வைப்பு: Deposit சேமநிதி; Buried treasure புதையல்; Place இடம்.
வையம்: Earth பூமி; Chariot தேர்; Covered cart கூண்டு வண்டி.
வையாளி: Pathway for horses செண்டு வெளி.

முற்றும்

